"ஆன்மிகம் என்றால் என்ன?" என்று ஆன்மிகச் சொற்பொழிவாளரிடம் ஒருவர் கேட்டார். "ஆன்மிகம் என்றால்..." "கொஞ்சம் இருங்க சாமி... கஷ்டமான வார்த்தையெல்லாம் போட்டுக் குழப்பக் கூடாது! என்னைப் போன்ற சாமானியர்களுக்கும் புரியும்படியாகச் சொல்லுங்கள். நீங்கள் எதையும் எளிதாகச் சொல்லி புரியவைப்பவர் என்று பலர் கூறக் கேட்டிருக்கிறேன். அதனால்தான் உங்களிடம் கேட்டேன்!" "பெரிய ஆளப்பா நீ. சரி, சொல்கிறேன்... இதென்ன?" "வெண்ணெய்!" "சரி... இதோ இந்தப் பாலில் அது எங்கே இருக்கிறது?" "......." "அதான்! இப்படித்தான் இறைவனும் பாலில் வெண்ணெயைப் போல நம் கண்ணுக்குத் தெரியாமல் இருக்கிறார். சரி! இந்த வெண்ணெயைப் பாலிலிருந்து எப்படி எடுப்பார்கள்?" "மத்தால் கடைந்து எடுப்பார்கள்." "அந்த மத்துதான் ஆன்மிகம்!" என்றார். ஆன்மிகத்தின் மிகச் சிக்கலான பல்வேறு விஷயங்களை எளிதாகச் சொல்வதென்பது சிலருக்குத்தான் வரும். அந்தக் கலையில் கை தேர்ந்தவர் இந்த நூலின் ஆசிரியர் தென்கச்சி கோ.சுவாமிநாதன். சின்னச்சின்ன கதைகளின் மூலம், இந்த நூலில் ஆன்மிகத்தை எளிதாக்கித் தந்து, சிரிக்கவும் சிந்திக்கவும் வைத்திருக்கிறார்.

*மின்நூல் வடிவமைப்பு - தமிழ்நேசன்*




ebook design by: *தமிழ்நேசன்1981*

## அகந்தை அழிந்தது எப்படி?

- தென்கச்சி சுவாமிநாதன்



அ து மிகவும் பழைமையான ஒரு கோயில். அங்கே அர்ச்சகர்கள் நிறையப் பேர் இருந்தார்கள். எல்லோருமே பிரம்மச் சாரிகள். ஆகவே, அவர்கள் உடலில் வலிவு இருந்தது. முகத்தில் பொலிவு இருந்தது.

ஒரு நாள் -

அந்த ஆலயத்தின் முன்னால் சில குதி ரைகள் வந்து நின்றன. அவற்றிலிருந்து சில வீரர்கள் கீழே இறங்கினார்கள். உள்ளே வந் தார்கள்.

''நாங்கள் அரண்மனையிலிருந்து வருகி றோம்'' என்றார்கள் அந்த வீரர்கள்.

''வாருங்கள்'' என்றனர் அர்ச்சகர்கள்.

''மன்னர் எங்களை அனுப்பி வைத்தார்!''

''என்ன வேண்டும் உங்களுக்கு?''

''நீங்கள்தான் வேண்டும்!''

''அப்படியென்றால்?''

''உங்களை அழைத்து வரச் சொன்னார் மன்னர்!''

அர்ச்சகர்கள் அலட்சியமாக அவர்களைப் பார்த்தார்கள். ''அரசனை வேண்டுமானால் இங்கே வரச்சொல்லுங்கள்!''

அழைக்க வந்தவர்கள் திகைத்துப் போனார்கள். திரும்பிப் போனார்கள். அரசனிடம் விவரத்தைச் சொன்னார்கள். அரசர், அமைச்சர்களை வரச் சொன்னார். ஆலோசனை நடத்தினார்.

''அர்ச்சகர்களின் அகந்தை அடங்க வேண்டும். அதற்கு என்ன செய்யலாம்?''

ஒரு முடிவுக்கு வந்தார்கள். அதன்படி செய்தார்கள்.

அவ்வளவுதான். அதன் பிறகு அந்த அர்ச்சகர்களை அரண்மனைக்குக் கூப்பிட்டு அனுப்ப வேண்டிய அவசியமே வரவில்லை! அவர்களாகவே தேடி வர ஆரம்பித்தார்கள். ''மன்னா! தங்களை ஆசீர்வாதம் பண்ண வந்திருக்கிறோம். இதோ அர்ச்சித்த மலர்களைக் கொண்டு வந்திருக்கிறோம். பெற்றுக் கொள்ளுங்கள்!'' என்றார்கள்.

கூடவே சில கோரிக்கைகளையும் வைத்தார்கள். ‘‘மன்னா! நாங்கள் வீடு கட்ட வேண்டும். வீடுகளில் சில விழாக்களையும் சடங்குகளையும் நடத்த வேண்டும். அதற்கு நீங்கள்தான் அருள் புரிய வேண் டும்!’’

அர்ச்சகர்களின் இந்த மாற்றத்துக்கு என்ன காரணம்?

அரசன் என்ன செய்தார்?

வேறொன்றுமில்லை... அர்ச்சகர்கள் அத்தனை பேருக்கும் கல்யாணம் பண்ணி வைத்துவிட்டார். அவ்வளவுதான். அதன் பின், சொன்னபடி கேட்க ஆரம்பித்து விட்டார்கள் அர்ச்சகர்கள். இது, குருதேவர் ராமகிருஷ்ணர் சொன்ன ஒரு கதை.

நண்பர்களே! ஒன்றைப் புரிந்து கொள்ளுங்கள்.

இந்த உலகில் மூன்று வகைத் துறவுகள் இருப்பதாகச் சான்றோர்கள் சொல்லி இருக்கிறார்கள்.

அறிவையும் இன்பத்தையும் சமயத்துக்காக வெறுத்தல் - சமயத் துறவு. அதிகாரத்துக்காக வெறுத்தல் - போர்த் துறவு.

பணத்துக்காக வெறுத்தல் - பணத் துறவு.

இந்த மூன்றாவது வகைத் துறவே இன்றைக்கு அதிகமாகக் காணப்படுகிறது.

## இவன் எதிரி இல்லையே!

- தென்கச்சி சுவாமிநாதன்



ஓ ர் ஊரில் பெரியவர் ஒருவர் இருந்தார்.

அவர் ஒரு நாள் தன் நண்பரின் வீட்டுக்குப் போயிருந்தார். வீட்டு வாசலில் இரண்டு குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தன.

மூன்று வயதில் ஒரு பெண் குழந்தை; இரண்டு வயதில் ஓர் ஆண் குழந்தை. அவர்கள் இருவரும் அந்த நண்பரின் பிள்ளைகள்.

இந்தப் பெரியவர் அங்கே போய்ச் சேர்ந்த சமயத்தில் மூன்று வயதுச் சிறுமி இரண்டு வயதுச் சிறுவனைத் திட்டிக் கொண்டிருந்தாள்... ‘‘உன் மண்டையிலே இருக்கிறது மூளை இல்லை... களிமண்ணு! அதனாலதான் நீ சரியா படிக்க மாட்டேங்கறே. உன்னைப் போல ஒரு முட்டாள் இந்த உலகத்துல யாருமே கிடையாது!’’

பெரியவர் இதைக் கவனித்தார்.

உடனே அந்தச் சிறுமியை அருகில் அழைத்தார். ‘‘குழந்தே... இங்கே வா!’’

அவள் வந்தாள். இவர் கேட்டார்: ‘‘ஏன் இப்படி சண்டை போடுகிறாய்?’’

‘‘அவன் ஒரு திருடன்!’’

‘‘அப்படியா?’’

‘‘ஆமாம்!’’

‘‘அப்படி என்னத்தைத் திருடினான்?’’

‘‘நான் விளையாடுவதற்காக வைத்திருந்த என்னுடைய கரடி பொம்மையைத் திருடி விட்டான்!’’

‘‘அப்படின்னா... அவன் செஞ்சது தப்புதான்.’’

‘‘அதனாலதான் திட்டினேன்.’’

‘‘இதுவும் தப்புதான்!’’

‘‘என்ன சொல்றீங்க?’’

‘‘நான் சொல்லலே... பெரிய மகான்கள் எல்லாம் சொல்லியிருக்காங்க.’’

‘‘என்ன சொல்லி இருக்காங்க?’’

‘‘மனிதன் செய்கிற செயல்களிலேயே மிகவும் சிறந்த செயல் _ அடுத்தவர்களை மன்னிக்கறதுதான் என்று சொல்லியிருக்கிறார்கள்!’’

‘‘அப்புறம் என்ன சொல்லியிருக்காங்க?’’

‘‘நாம் யார் கூடவும் சண்டை போடக் கூடாது. நமக்கு எதிரியாக இருந்தாலும் நாம் அவர்களை மன்னிக்க வேண்டும்!’’

‘‘நீங்க சொல்றது சரி... இவன் என் எதிரியாக இருந்தால் மன்னிக்கலாம். இவன் என் எதிரி இல்லையே!’’

‘‘பின்னே...’’

‘‘என் சகோதரன்!’’

இது ஒரு வேடிக்கைக் கதை. என்றாலும் நடைமுறை வாழ்க்கையில் நாம் ஒன்றைப் புரிந்து கொள்ள வேண்டும்.

அதாவது, ஆன்மிக உலகில் அறிவுரை சொல்கிறவனைவிட, அதை ஏற்றுச் செயல் படுத்துகிறவன் சில சமயம் உயர்ந்து விடுகிறான்.

## வாழ வைக்கும் நம்பிக்கை!



ஓ ர் ஊரில் பெரிய குளம் ஒன்று இருந்தது.

அந்தக் குளம் ஒரு பெரிய மனிதருக்குச் சொந்தமானது.

அதில் பல வகையான மீன்களை விட்டு வளர்த்துக் கொண்டிருந்தார். மீன்கள் வளர வளர அவற்றைப் பிடித்து விற்பனை செய்வது அவரது வழக்கம். அதில் நல்ல லாபம் கிடைத்து வந்தது.

இந்த நிலையில் அந்தக் குளத்தில் இருந்த மீன்கள் அவ்வப்போது திருட்டுப் போக ஆரம்பித்தன.

யார் திருடுவது?

அதைக் கண்டுபிடிக்க ரகசியமாக சில காவலர்களை நியமித்தார்.

வழக்கமாகத் திருடு கிறவன், ஒரு நாள் இரவு நேரத்தில் வலை வைத்து மீன்களைப் பிடித்துக் கொண்டிருந்தான்.

காவலர்கள் கையில் விளக்குடன் வருவது கண்ணில் பட்டது.

அவ்வளவுதான்! அவன் பிடித்த மீன்கள் அனைத்தையும் குளத்திலேயே போட்டுவிட்டு பக்கத்திலிருந்த மரங்களுக்கு இடையே ஓடினான்.

காவலர்கள் நெருங்குவது தெரிந்தது.

பளிச்சென்று அவனுக்குள் ஒரு யோசனை. உடம்பெல்லாம் சாம்பலைப் பூசிக்கொண்டான். ஒரு மரத்தடியில் சாமியார் மாதிரி கண்களை மூடிக் கொண்டு உட்கார்ந்து விட்டான்.

காவலர்கள் ஓடி வந்தார்கள்.

''சுவாமி... இந்தப் பக்கம் யாராவது ஓடி வந்தார்களா?''

சாம்பல் பூசியவன் வாயே திறக்கவில்லை.

''மௌன சாமியார் போல் இருக்கிறது!'' என்றான் ஒருவன். அனைவரும் பொத்தென்று அவன் காலில் விழுந்து வணங்கினார்கள்.

''சாமி! நாங்க தேடுகிற ஆள் எங்களுக்குக் கிடைக்கணும். அதுக்கு நீங்கதான் ஆசீர்வாதம் பண்ணணும்!''

சுவாமி கைகளை உயர்த்தினார்.

காவலர்கள் திருப்தியோடு எழுந்து போனார்கள்.

''இந்தப் பக்கமாகத்தான் ஓடினான்'' என்றான் ஒருத்தன்.

எல்லோரும் அந்தப் பக்கம் ஓடினார்கள்.

மரத்தடியில் சாமியார் இருக்கிற செய்தி பரவியது.

மக்கள் கூட்டம் கூட்டமாக வரத் தொடங்கினார்கள். காணிக்கை செலுத்தினார்கள்.

கணக்குப் பார்த்தார் சாமியார். எதிர்பார்ப்புக்கு அதிகமாகவே பணம் சேர்ந்திருந்தது.

அவர் மனசுக்குள் ஒரு கணக்குப் போட்டார்.

உழைத்துச் சாப்பிடுவதைவிட, உட்கார்ந்து சாப்பிடுவது சுலபமாக இருக்கிறது.

உழைத்துப் பிழைப்பதைவிட மக்களின் நம்பிக்கையில் பிழைப்பது எளிதான வழி என்பது புரிந்தது.

ஆன்மிகம் இன்றைக்கு இப்படித்தான் திசைமாறிப் போய்க் கொண்டிருக்கிறது.

எது மெய், எது பொய் என்பது புரிவதில்லை.

ஆனால், ஒன்று மட்டும் புரிகிறது.

நம்பிக்கை என்பது நம்புகிறவனையும் வாழ வைக்கிறது. நம்பப்படுகிறவனையும் வாழ வைக்கிறது.

## ‘நீங்க ராமசாமிதானே?’



பே ருந்து போய்க் கொண்டிருந் தது.

அதில் பயணம் செய்யும் ஒருவர், பக்கத்தில் உட்கார்ந்திருந்தவரைத் திரும்பிப் பார்த்தார்.

“நீங்க ராமசாமியா..?” என்று கேட்டார்.

“இல்லை!” என்றார் அவர்.

கொஞ்ச நேரம் ஆயிற்று.

இவர் மறுபடியும் கேட்டார்.

“சும்மா சொல்லுங்க... நீங்க ராமசாமி தானே?”

“இல்லீங்க!” என்றார் அவர் அழுத்த மாக.

இவர் விடுவதாக இல்லை.

“என்கிட்டே சொல்றதுலே எந்தத் தப்பும் இல்லே. தைரியமா சொல்லலாம். நீங்க ராமசாமிதான். சரியா?”

“நிச்சயமா சொல்றேன்... நான் ராமசாமி இல்லை. போதுமா?”

கேட்டவர் மௌனமானார்.

கொஞ்ச நேரம் ஆயிற்று.

மறுபடியும் ஆரம்பித்தார்.

“நிச்சயமா சொல்றேன்... நீங்க ராம சாமியேதான்!”

அவர் யோசித்தார்.

இவரிடமிருந்து தப்பிக்க ஒரே வழிதான் உண்டு.

“ஆமாம் சார்! நான் ராமசாமிதான்!” என்றார் சற்று எரிச்சலாக.

*இவர் மறுபடி மெள்ள அவர் பக்கம் திரும்பி னார்.*

*''உங்களைப் பார்த்தா அப்படித் தெரியலையே!'' என்று ஆரம்பித்தார்.*

*அவர் திடீரென்று எழுந்தார். இடத்தை மாற்றிக் கொண்டு போய்விட்டார்.*

*இந்தக் கதை வேடிக்கையாக இருந்தாலும், இதில் இருக்கிற கருத்து ஆழமானது.*

*நாம் பல சந்தர்ப்பங்களில், முதலில் முடிவு எடுத்து விடுகிறோம்.*

*அதன் பிறகு அதை உறுதிப்படுத்த வழி கண்டு பிடிக்கிறோம்.*

*நாம் முடிவு செய்ததுதான் சரி என்று நிரூபிப்பதில் நமக்கு ஒரு பெருமை!*

*அந்தப் பெருமைக்காக பெரும் பொழுதுகளை எல்லாம் வீணாக்கிக் கொண்டிருக்கிறோம்.*

*ஆன்மிக உலகிலும் இந்த மனித சுபாவம் நிறையக் குழப்பங்களை உண்டு பண்ணிக் கொண் டிருக்கிறது.*

*ஆலய வாசலில் நின்று கொண்டு, உள்ளேயிருந்து வெளியே வருகிறவர்களை விசாரித்துக் கொண்டிருந்தார் ஒரு பெரியவர்.*

*''என்ன வேண்டிக்கொண்டீர்கள்?''*

*வந்து கொண்டிருந்தவர்கள் ஆளுக்கொரு பதில் சொன்னார்கள்...*

*''தேர்வில் அதிக மதிப்பெண்கள் பெற வேண்டும்!''*

*''தேர்தலில் வெற்றி பெற வேண்டும்!''*

*''வேலை கிடைக்க வேண்டும்!''*

*இவையெல்லாம் ஏற்கெனவே செய்து கொண்ட முடிவுகள். இந்த முடிவுகளுக்கு ஆதரவு தேடி அவர்கள் ஆலயத்துக்கு வந்திருக்கிறார்கள்.*

*நண்பர்களே!*

*ஒன்றைப் புரிந்து கொள்ளுங்கள்:*

*ஆலயம் என்பது...*

*உங்கள் முடிவுகளை உறுதிப்படுத்துகிற இடம் அல்ல!*

*பரம்பொருளின் இருப்பிடம் என்பது வேறு; பத்திரப் பதிவு அலுவலகம் என்பது வேறு!*

## கை எங்கே? கால் எங்கே?



ஓ ர் ஊரில் பத்து நண்பர்கள் இருந்தார்கள்.

அவர்கள் எங்கே போனாலும் சேர்ந்தேதான் போவார்கள்; வருவார்கள். அப்படியரு பாசப் பிணைப்பு.

பக்கத்து நகரத்துக்கு அவர்கள் ஒரு தடவை சினிமா பார்க்கப் போனார்கள்.

இரண்டாவது ஆட்டம்...

படம் முடிந்து வெளியே வந்தார்கள்.

பக்கத்தில் இருந்த மதுக்கடைக்குள் நுழைந் தார்கள்.

மயக்கத்தோடு வெளியே வந்தார்கள்.

ஊரை நோக்கி நடக்க ஆரம்பித்தார்கள்.

வழியில் ஒரு பெருங்காடு.

அதைத் தாண்டித்தான் செல்ல வேண்டும்.

நள்ளிரவு நேரம்.

நடுக்காட்டில் அவர்கள் நடந்து வந்து கொண்டிருந்த போது திடீரென்று மழை... நேரம் ஆக ஆக மழை வலுத்தது.

*"இனி... நாம இங்கேயே தங்கிக்கறதுதான் நல்லது. விடிஞ்சதும் ஊருக்குப் போகலாம். இப்ப நாம இந்த ஆல மரத்துக்குக் கீழே படுத்துக்கலாம்!" என்று அந்தப் பத்துப் பேரில் ஒருவன் சொன்னான்.*

*எல்லோரும் படுத்துக் கொண்டார்கள்.*

*குளிர் ஒரு பக்கம்; பயம் ஒரு பக்கம்.*

*எப்படியோ தூங்கிப் போனார்கள்.*

*பொழுது விடிந்தது.*

*விழித்துப் பார்த்தால் அவர்களுக்குள் ஒரு புதிய சிக்கல்.*

*ஆமாம்... அவர்களின் கைகளும் கால்களும் ஒன்றோடு ஒன்று பின்னிக் கொண்டிருந்தன.*

*பிரிக்க முடியவில்லை. காரணம் அவரவர்களின் கை எது? கால் எது என்பது அவர்களுக்கே அடையாளம் தெரியவில்லை.*

*அழ ஆரம்பித்தார்கள். இந்த அழுகைச் சத்தம் அந்த வழியாக வந்து கொண்டிருந்த ஒரு வழிப்போக்கனின் காதில் விழுந்தது.*

*நெருங்கி வந்தான்.*

*"என்ன ஆச்சு உங்களுக்கு?"*

*"பயத்துலே நடுங்கிக்கிட்டே படுத்தோம்... காலை யிலே பாத்தா கை - கால் எல்லாம் பின்னிக்கிட்டு கிடக்குது!"*

*"அதாங்க பிரச்னை... எது எங்களுடையதுனு அடையாளம் தெரியலே.. இப்ப என்ன பண்றது..?"*

*"கவலைப்படாதீங்க... நான் உங்க சிக்கலைத் தீர்த்து வைக்கிறேன்!"*

*வழிப்போக்கன் பக்கத்திலிருந்த கருவேல மரத்தி லிருந்து ஒரு நீண்ட முள்ளை ஒடித்துக் கொண்டு வந்தான். ஒரு காலில் குத்தினான்.*

*"ஆ...!" என்றான் ஒருத்தன்.*

*"இந்தக் கால் உன்னுடையது. எடுத்துக்கோ...!" என்று சொல்லிவிட்டு ஒரு கையில் குத்தினான்.*

*"ஐயோ!" என்று அலறினான் ஒருத்தன்.*

*"இந்தக் கை உன்னுடையது. இழுத்துக்கோ" என்றான்.*

*வெடுக்கென்று இழுத்துக் கொண்டான்.*

*இப்படியாக அந்த நண்பர்களின் கை-கால்களை அவர் அடையாளம் காட்டினார். அவர்கள் விடு பட்டார்கள்.*

*பந்தபாசம் இப்படித்தான். பல சமயம் மனிதர்களைக் கட்டிப் போட்டு விடுகிறது. சிக்கிக் கொள்கிறார்கள்.*

*ஆன்மிக வெளிச்சம் என்கிற முள் வந்துதான் அவர்களை விடுவிக்க வேண்டி இருக்கிறது!*

# உள்ளே என்ன இருக்கு?



*ஒ ரு மனிதன். நீண்ட நாளைக்குப் பிறகு கல்யாணம் பண்ணிக் கொண்டான். 'மனைவியிடம் நல்ல பெயர் வாங்குவது எப்படி?' அவன் யோசித்து ஒரு முடிவுக்கு வந்தான்.*

*ஒரு நாள் கடை வீதிக்குப் போனான். கடையில் ஒரு பொருளைப் பார்த்தான். இதுவரையில் அவனுக்குப் பரிச்சயம் இல்லாத ஒரு பொருள் அது. ஆகவே, தனக்குத் தெரியாதது எல்லாமே தன் மனைவிக்கும் தெரியாது என்கிற ஒரு முடிவுக்கு வந்து விட்டான்.*

*''அது என்னங்க?'' என்று விசாரித்தான்.*

*''அதன் பெயர் தர்மாஸ்ஃபிளாஸ்க்!'' என்றார் கடைக்காரர்.*

*''அப்படின்னா என்னங்க... அது எதுக்கு உபயோகம்?''*

*''இதுக்குள்ளே சூடான பொருளை வெச்சா சூடாவே இருக்கும்! குளிர்ச்சியான பொருளை வெச்சா குளிர்ச்சியாவே இருக்கும்!''*

*''அப்படியா சொல்றீங்க...?''*

*''ஆமாங்க!''*

*''அப்படின்னா அதுலே ஒண்ணு கொடுங்க!''*

*வாங்கிக் கொண்டு புறப்பட்டான்.*

*அவனுக்குள் உற்சாகம் உற்பத்தியாயிற்று.*

***மனைவிக்கு இன்ப அதிர்ச்சி கொடுக்க வேண்டும் என்பது அவன் திட்டம். அந்தத் திட்டப்படி மேலும் சில பொருள்களை வாங்கிக் கொண்டு வேகமாக நடந்து வீட்டுக்குள் நுழைந்தான்.***

***‘‘சீக்கிரம் இங்கே வா!’’ என்று மனைவியை அழைத்தான்.***

***அவள் வந்தாள். கவனித்தாள்.***

***‘‘என்னங்க இது?’’***

***‘‘இது ஒரு புதுமையான பாத்திரம்!’’***

***‘‘அப்படியா?’’***

***‘‘ஆமாம்! இதன் பெயர் தர்மாஸ்ஃபிளாஸ்க்!’’***

***‘‘எதுக்கு இது?’’ என்று தெரியாதது போல கேட்டாள்.***

***‘‘இது சூடான பொருளைச் சூடாகவும், குளிர்ச்சியான பொருளைக் குளிர்ச்சியாகவும் அப்படியே வெச்சிருக்கும்! உனக்காக வாங்கிட்டு வந்திருக்கேன்!’’***

***_ கணவன் தலை நிமிர்ந்து நின்றான்.***

***மனைவி கேட்டாள்:***

***‘‘உள்ளே என்ன இருக்கு?’’***

***அவன் சொன்னான்:***

***‘‘அதுவும் உனக்காகத்தான் வாங்கி வந்தேன்!’’***

***‘‘அப்படியா? என்ன அது... சொல்லுங்களேன்.’’***

***‘‘ஒரு கப் காபியும் ஒரு கப் ஐஸ்கிரீமும்!’’***

***மனைவி மயங்கி விழுந்தாள்.***

***நண்பர்களே!***

***ஒன்றைத் தெரிந்து கொள்வது என்பது வேறு; அதைப் புரிந்து கொள்வது என்பது வேறு!***

***ஆன்மிகம் என்பது புரிந்து கொள்ள வேண்டிய ஒன்று. அதைத் தெரிந்து கொள்வதோடு நிறுத்தி விடுகிறவர்களுக்குத்தான், தேவை இல்லாத குழப்பங்கள் எல்லாம் வந்து சேர்கின்றன.***

***‘‘விஞ்ஞானத்துக்கும் மெய்ஞ்ஞானத்துக்கும் என்ன வேறுபாடு?’’ என்று பெர்னாட்ஷாவிடம் கேட்டார்கள். அவர் சொன்னார்: ‘‘விஞ்ஞானம் இருக்கிறதே.... புதிதாகப் பத்துப் பிரச்னைகளை உருவாக்காமல் எந்த ஒரு பிரச்னைக்கும் அது தீர்வு கண்டதில்லை!’’***

***அறிவால் ஏற்படுகிற வெளிச்சம் - விஞ்ஞானம்; ஆன்மாவால் ஏற்படுகிற வெளிச்சம் - மெய்ஞ்ஞானம்!***

# கடவுளைக் காப்பாற்றுங்கள்!




ஒ ருவருக்கு திடீரென்று தலைவலி. உடனே மருத்துவ மனைக்குப் போனார்.

டாக்டரிடம் சொன்னார். அந்த டாக்டர், இவரை ஓர் அறையில் படுக்க வைத்தார். ஒரு மருந்துச் சீட்டு எழுதினார்.



அங்கே நின்று கொண்டிருந்த ஒருவரிடம் கொடுத்து, ''இதை உடனே வாங்கி வா!'' என்றார்.

அவர் அதை வாங்கிக் கொண்டு வெளியே ஓடினார்.

மருந்து வாங்கப் போன ஆசாமி வருவார் என்று காத்திருந்தார்கள். ஆனால், போனவர் வரும் வழியாகத் தெரியவில்லை.

மருந்து கிடைக்காமல் எங்கே அலைகிறாரோ? படுத்திருந்தவருக்குத் தலைவலி இன்னும் அதிகமாயிற்று. டாக்டர் பார்த்தார். உடனடியாக இன்னொரு மருந்தின் பெயரை எழுதினார்.

''இது கிடைத்தாலும் பரவாயில்லை!'' என்று அந்தச் சீட்டை இன்னொருவரிடம் கொடுத்து வாங்கி வரச் சொன்னார்.

அவரும் அவசரமாக வெளியே ஓடினார். ஆனால், வந்து சேரவில்லை.

படுத்திருந்தவரை தலைவலி பாடாகப்படுத்துகிறது. டாக்டரும் தவித்துக் கொண்டிருக்கிறார்.

இந்த சமயத்தில் அந்த மருத்துவமனையின் வாசல் புறத்தில் ஏதோ கூச்சல் கேட்கிறது. அங்கே ஒரு சுழலும் வழி...

ஒருவர் பின் ஒருவராகத்தான் உள்ளே வர முடியும். கால்நடைகள் நுழையாமல் இருக்க அந்த ஏற்பாடு.

அங்கே இரண்டு பேர், 'நான்தான் முதலில் உள்ளே நுழைவேன்!' என்று இருவரும் நின்று கொண்டு தங்களுக்குள் சண்டை போட்டுக் கொண்டிருக்கிறார்கள். விளைவு- இரண்டு பேருமே செல்ல முடியவில்லை.

இவர்கள் போடுகிற சத்தத்தைக் கேட்டு டாக்டர் வெளியே ஓடி வந்து பார்க்கிறார். அந்த இரண்டு பேருமே உள்ளே படுத்திருக்கிற தலைவலிக்காரருக்காக மருந்து வாங்கப் போனவர்கள்.

இருவரின் கையில் இருப்பதும் ஒரே நோய்க்கான மருந்துதான் என்பது அவர்களுக்குப் புரியவில்லை.

உள்ளே படுத்திருப்பவரோ, தலைவலியால் துடித்துக் கொண்டிருக்கிறார். அதற்கான மருந்தை வைத்திருப்பவர்களோ வெளியே சண்டை போட்டுக் கொண்டு இருக்கிறார்கள்.

விளைவு? தலைவலி தொடர்ந்து கொண்டிருக்கிறது! இதுதான் இன்றைய ஆன்மிகம்!

மனித குலம்தான் அந்த நோயாளி. கடவுள்தான் அந்த மருத்துவர். மதவாதிகள்தாம் அங்கே சண்டை போடுகிறவர்கள்.

சரி... இப்போது கதையைத் தொடரலாம். டாக்டர் அவசரமாக வெளியே ஓடி அவர்கள் கையில் இருந்த இரண்டு மருந்தையும் வாங்கிக் கொண்டு உள்ளே ஓடுகிறார்.

ஒரு பாட்டில் மருந்தை அந்த நோயாளிக்குக் கொடுக்கிறார். இன்னொரு பாட்டில் மருந்தை அவசரமாகத் தானே சாப்பிட்டு விடுகிறார்!

ஆமாம்!

இப்போது டாக்டருக்கும் தலைவலி!

மதவாதிகளே!

தயவுசெய்து கடவுளைக் காப்பாற்றுங்கள்!

## ருசிக்கத் தெரிந்த குரு!




“இ ந்த உலகத்துல வாழ்ந்து என்ன சுகத்தைக் கண்டேன்?” என்று அலுத்துக் கொள்கிறவர்கள் அதிகம்!

“ஆகா... என்ன அற்புதமான உலகம்!” என்று ஆனந்தப் படுகிறவர்கள் குறைவு!

ரசிக்கத் தெரிந்தவர்களுக்கு எல்லாமே சுகம்தான்!

இங்கிலாந்து நாட்டில் ஒரு கவிஞர் இருந்தார். அவர் பெயர் ஜார்ஜ் பர்ன்ஸ்.

அவருக்கு 95-வது பிறந்த நாள்.

நண்பர்கள் எல்லாரும் வந்தார்கள். வாழ்த்தினார்கள்.

ஒரு நண்பர் கேட்டாராம்:

“இந்த 95-வது வயது எப்படி இருக்கிறது?”

உடனே கவிஞர் உற்சாகமாகப் பதில் சொல்ல ஆரம்பித்தாராம்.

“சொல்றேன் கேளுங்க.... இதற்கு முன் எப்போதும் நான் இவ்வளவு ஆரோக்கியமாக இருந்ததில்லை. இதற்கு முன் எப்போதும் நான் இவ்வளவு ஜாலியாக இருந்ததில்லை. இதற்கு முன் எப்போதும் நான் இவ்வளவு அற்புதமாகக் காதலித்ததில்லை!” என்று சொல்லி நிறுத்திவிட்டு, “இன்னொரு ரகசியம்... இதற்கு முன் எப்போதும் நான் இவ்வளவு அதிகமாகப் பொய் சொன்னதில்லை!” என்றாராம்.

கூட்டம் ‘கொல்’லென்று சிரித்ததாம்!



அந்தக் கவிஞருக்கு வாழ்க்கை ஒரு சுமையாகத் தெரியவில்லை. சுகமாகத் தெரிகிறது.

வயதான குரு ஒருவர்... அவருக்கு 100 வயது. வாழ்வின் கடைசி நிமிடங்களில் இருக்கிறார்.

சுற்றிலும் சீடர்கள் சோகமாக நின்று கொண்டிருக்கிறார்கள்.

ஒரு சீடர் வேகமாக வெளியே ஓடுகிறார். குரு வழக்கமாக விரும்பிச் சாப்பிடும் ஒரு பலகாரத்தைத் தேடிப் பிடித்து வாங்கி வருகிறார். குருவிடம் நீட்டுகிறார். அவர் ஆவலோடு அதை வாங்கிச் சாப்பிடுகிறார். சாப்பிட்டு விட்டு அந்தச் சீடரை அருகில் அழைக்கிறார். சீடர் அவர் அருகில் குனிகிறார் _ ஏதோ கடைசி உபதேசம் சொல்லப் போகிறார் என்கிற எதிர்பார்ப்பில்!

குருவின் உதடுகள் மெல்ல அசைகின்றன. ‘‘ஆகா! என்ன ருசி!’’ என்று சொல்லி விட்டுக் கண்களை மூடிவிடுகிறார்.

சீடருக்கு அந்த குருவின் உபதேசம் புரிகிறது.

அந்த குருவுக்கு வாழ்க்கையின் கடைசி விநாடிகூட ருசியாக இருந்திருக்கிறது!

வாழ்வின் கடைசி விநாடியைக்கூட ருசிக்கக் கற்றுக் கொள்ளுங்கள் என்பதுதான் அந்த குருவின் உபதேசம்!

ஆன்மிகம் அந்தக் கலையைத்தான் நமக்குக் கற்றுக் கொடுக்க வேண்டும்.

அப்படி ஒரு மனத் தெளிவை உண்டு பண்ணுவதுதான் உண்மையான ஆன்மிகம்!

நண்பர்களே!

வயதாகிவிட்டதே என்று யாரும் கவலைப்படாதீர்கள்.

பல பேருக்கு அந்த வாய்ப்பு கிடைப்பதே இல்லை!

# சுறுசுறுப்பு டானிக்!



தென்கச்சி சுவாமிநாதன்



"எ ன்ன... இப்படி சோர்ந்து போய் நடந்து வந்துக்கிட்டு இருக்கே?"

"நடக்கவே முடியலை... அவ்வளவு சோர்வு. உடம்பில் ஏதோ கோளாறு... டாக்டர்கிட்டே போகணும்!"

"அதுக்கும் முன்னாடி கடற்கரைப் பக்கம் போகலாம் வா!"

"அங்கே எதுக்கு?"

"அங்கே ஒருத்தன் 'சுறுசுறுப்பு டானிக்' விற்கிறான். தினமும் காலையிலேயே ஒரு 'ஸ்பூன்' சாப்பிட்டா போதும். நாள்பூரா உற்சாகமா இருக்கும். சுறுசுறுப்பு தானா வந்துடும்.!"

"அப்படியா சொல்றே?"

"ஆமாம்... நான் கூட வாங்கிச் சாப்பிட்டுப் பார்த்தேன். நல்ல பலன் இருக்கு... நிறைய பேர் தினம் வந்து வாங்கிட்டுப் போறாங்க!"

"அப்படின்னா சரி... வா போகலாம்!"

இருவரும் கடற்கரை நோக்கி நடந்தார்கள்.

அங்கே அவன் அந்த மருந்தை (டானிக்!) விற்றுக் கொண்டிருந்தான்.

அது அமோகமாக விற்பனை ஆகிக் கொண்டிருந்தது.

இவனும் போய் ஒரு பாட்டில் மருந்து வாங்கிக் கொண்டான். அதன் பிறகு அந்த மருந்தைத் தொடர்ந்து சாப்பிட ஆரம்பித்தான்.

என்ன ஆச்சரியம்!

சோர்வாக இருந்த உடம்புக்குள் சுறுசுறுப்பு தெரிய ஆரம்பித்தது.

உற்சாகமாக நடக்க ஆரம்பித்தான். நண்பனைத் தேடிப் போய் நன்றி சொன்னான், ஒரு நல்ல மருந்தை அறிமுகம் செய்து வைத்ததற்காக!

கொஞ்ச காலம் கழிந்தது.

கைவசம் இருந்த மருந்து தீர்ந்து போனது.

மறுபடியும் வாங்க வேண்டும்.

கடற்கரைக்குப் போனான்.

அங்கே அவனைக் காணவில்லை. மருந்து விற்பவன் என்ன ஆனான்? வேறு ஊருக்கு போயிருப்பானோ?

பல ஊர்களிலும் தேடிப் பார்த்தார்கள். பலன் இல்லை.

*இரண்டு ஆண்டுகள் கழித்து ஒரு நாள்- இவர்கள் கடற்கரைக்குப் போனபோது அங்கே அவன் இருந்தான்.*

*இப்போது அவன் மருந்து விற்பனை செய்யவில்லை. பலூன் விற்றுக் கொண்டிருந்தான்.*

*''என்ன ஆச்சு உனக்கு... எங்கேயெல்லாம் உன்னைத் தேடுறது? அந்த 'சுறுசுறுப்பு டானிக்' இன்னும் கொஞ்சம் வேணுமே? அதுசரி... இவ்வளவு நாள் எங்கே இருந்தே?''*

*''ஜெயில்லே இருந்தேன்...!''*

*''ஜெயிலா? என்ன ஆச்சு?''*

*''போலி மருந்து விற்பனை பண்ணினதுக்காக இரண்டு வருடம் சிறைத் தண்டனை!''*

*''போலி மருந்தா... என்ன சொல்றே?''*

*''ஆமாம்... நான் உங்ககிட்டே விற்பனை பண்ணினது உண்மையிலேயே சுறுசுறுப்பு டானிக் இல்லை!''*

*''அப்படிச் சொல்லாதே! அதைச் சாப்பிட்டதும் எங்க உடம்பு சுறுசுறுப்பு ஏற்பட்டது உண்மை!''*

*''இருக்கலாம். அதுக்குக் காரணம் மருந்து இல்லை... நம்பிக்கை!''*

*''என்னப்பா சொல்றே?''*

*''நான் உங்ககிட்டே வித்தது வெறும் தண்ணிதான். உப்பு, மிளகு, சீரகம், வெந்தயம் இதையெல்லாம் பொடி செய்து அதுலே கலந்திருந்தேன்... அவ்வளவுதான். இதைச் சாப்பிட்டதும் சுறுசுறுப்பு வந்துட்டதா நீங்க நினைச்சிட்டீங்க. உங்க நினைப்புதான் உங்களின் உந்து சக்தி!''*

*இப்படி சொல்லிவிட்டு அந்த மனிதன் பலூன் விற்கப் போய்விட்டான்.*

*இவர்கள் யோசிக்க ஆரம்பித்தார்கள். ஒரு சிக்கலான கேள்விக்கு விடை கிடைத்தது.*

*கேள்வி: நமக்கு முக்கியம் கடவுளா? கடவுள் நம்பிக்கையா?*

*பதில்: கடவுளை விடவும் மேலானது கடவுள் நம்பிக்கை!*

## ‘என்னை அடையாளம் தெரிகிறதா?’

அ வன் ஒரு சராசரி மனிதன்தான்.

ஆனாலும் அடுத்தவர் களுக்குத் தன்னால் முடிந்த அளவு உதவ வேண்டும் என்று நினைப்பவன். ஒரு நாள் அவன் கடை வீதி வழியாகச் சென்று கொண்டிருந்தான்.

அப்போது அவன் எதிரே ஒருவன் வந்து நின்றான். ‘‘ஐயா! என்னை உங்களுக்கு அடையாளம் தெரிகிறதா?’’ என்றான்.

‘‘இல்லையே...’’

‘‘என்னை உங்களுக்கு நினைவிருக்காது. ஆனாலும், உங்களை என்னால் மறக்க முடியாது!’’

‘‘என்ன சொல்கிறாய்?’’

‘‘பத்து ஆண்டுகளுக்கு முன்னால் இந்த ஊருக்கு நான் வந்திருந்தேன். அப்போது உங்களைச் சந்தித்தேன். உங்களிடம் கொஞ்சம் பணம் கேட்டேன். உடனே நீங்கள், ஒரு ஆயிரம் ரூபாயை எடுத்துக் கொடுத்து ‘ஒரு மனிதனை வெற்றிப் பாதையில் அழைத்துச் செல்ல இது உதவியாக இருக்கட்டும்’ என்று வாழ்த்திக் கொடுத்தீர்கள்!’’

‘‘அப்படியா...?’’

‘‘ஆமாம். அதை நான் மறக்க முடியாது... எனக்கு ஒரு நல்ல சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொடுத்தீர்கள்... அதை நன்றியோடு நினைத்துக் கொண்டிருக்கிறேன். அதுதான் உங்களைப் பார்த்து...!’’

‘‘அடடா! இதற்கெல்லாம் நன்றி சொல்ல வேண்டிய அவசியமில்லை. எப்படியோ நீ நல்ல படியா இருந்தால் அதுவே போதும்... இதற்காகவா இவ்வளவு தூரம் தேடி வந்தாய்?’’

‘‘அதுக்காக இல்லீங்க!’’

‘‘பின்னே... வேறே எதுக்கு?’’

‘‘இப்போ மறுபடியும் அது மாதிரி ஒரு சந்தர்ப்பத்தை ஏற்படுத்தித் தர முடியுமானு கேட்கற துக்கு வந்தேன்!’’

அவ்வளவுதான், எதிரே இருந்தவர் மாயமாக மறைந்து போனார்!

ஏனென்றால், அவர் கடவுள் மாதிரி.

இன்றைக்குக் கடவுளின் நிலைமையும் இதுதான். திரும்பத் திரும்பத் தேடி வந்து உதவி கேட்கிற பக்தர்களே இன்றைக்கு அதிகமாகிப் போனார்கள்.

ஒரு நோயாளி மருத்துவமனைக்குப் போகிறான். நோய் குணமாகிறது. வீட்டுக்குத் திரும்பி வந்து விடுகிறான். மறுபடியும் மறுபடியும் மருத்துவமனைக்குப் போக வேண்டும் என்று அவன் விரும்பக் கூடாது.

ஆலயத்துக்குப் போகிறவர்களும் அப்படித்தான் இருக்க வேண்டும். அங்கு இருப்பவனே, நம்முள்ளேயும் இருக்கிறான் என்பதைப் புரிந்து கொள்ளத்தான் அங்கே போகிறோம்.

அந்த உண்மை புரிந்துவிட்டால், அங்கே போக வேண்டிய அவசியம் இருக்காது. மற்றவர்களும் இதைப் புரிந்துகொள்ளும் வகையில் அவர்களுக்கு நாம் வழிவிடலாம்.

ஆனால், இன்றைக்கு எவரிடமும் புரிந்துகொள்ளும் இந்தப் பக்குவம் இல்லை. எனவே, அங்கு செல்லும் அவசியம் மீண்டும் மீண்டும் ஏற்படுகிறது. அதனால்தான் ஆலயங்களில் கூட்டமும் நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டே போகிறது!

# கடவுளைக் காணவில்லை!

தென்கச்சி சுவாமிநாதன்



ஓ ர் ஆடம்பரமான மாளிகை. அங்கே ஒரு பாட்டி வாழ்ந்து வந்தாள். அந்தப் பாட்டிக்குப் பார்வை சரியில்லை.

ஒரு நாள் அந்தப் பாட்டி பத்திரிகையில் ஒரு விளம்பரம் கொடுத்தாள். ''என் பார்வையை மீட்டுத் தருகிறவர்களுக்கு இருபதாயிரம் ரூபாய் தரத் தயார்!''

ஒரு டாக்டர் வந்தார்.

''உங்கள் பார்வையை நான் சரி செய்ய முடியும்!'' என்றார்.

உடனே ஓர் ஒப்பந்தம் போட்டுக் கொண்டார்கள். சிகிச்சை ஆரம்பமாயிற்று.

டாக்டர் தினமும் வருவார். சிகிச்சை கொடுப்பார். திரும்பிப் போவார்.

ஒரு நாள் அங்கே இருந்த ஒரு கடவுள் சிலை அவர் கண்ணில் பட்டது.

அழகான சிலை. ஐம்பொன்னால் செய்யப்பட்டது. டாக்டர் மனதில் ஒரு சின்ன சபலம். 'இந்த அம்மாவுக்குத்தான் பார்வை சரியில்லை... இந்த அழகான சிலையை நாம் எடுத்துக் கொண்டு போனால் என்ன?'

சபலம் ஒரு நாள் செயல் வடிவம் பெற்றது. பாட்டி வீட்டில் இருந்த கடவுள் சிலை காணாமல் போனது!

டாக்டர் வீட்டில் காட்சி கொடுக்க ஆரம்பித்தது அந்தச் சிலை.

சில மாதங்களில் சிகிச்சை முடிந்தது.

பாட்டி கண்களைத் திறந்தாள்.

பார்வை தெரிந்தது. விவரமும் புரிந்தது.

கடவுளைக் காணவில்லையே!

இது டாக்டருடைய வேலையாகத்தான் இருக்க வேண்டும்.

இருந்தாலும் எப்படி அதை நிரூபிப்பது?

டாக்டரிடமிருந்து சிகிச்சைக்கான பில் வந்தது. பாட்டி பணம் தர மறுத்தாள்.

டாக்டர் கோர்ட்டுக்குப் போனார்.

''ஒப்பந்தப்படி பாட்டியின் கண்களைக் குணப்படுத்தினேன். பணம் கொடுக்க மறுக்கிறார்!'' என்றார் டாக்டர்.

பாட்டி ஆரம்பித்தார்: நீதிபதி அவர்களே! அவர் சொன்ன மாதிரி என் கண்கள் குணமாகவில்லை. பார்வை திரும்பவில்லை. எனக்குப் பார்வை வந்திருக்குமானால், எனது வீட்டில் இருந்த கடவுள் சிலை கண்ணில் பட்டிருக்க வேண்டுமே! அதை என்னால் பார்க்க முடியவில்லையே...!''

நீதிபதி புரிந்து கொண்டார்.

சிலையைத் திரும்பக் கொடுத்தார் டாக்டர்.

பாட்டி பணத்தைக் கொடுத்தாள்.

வழக்கு முடிந்தது.

இந்தப் பாட்டி, கடவுளின் இருப்பிடத்தைச் சரியாகக் கண்டுபிடிக்க எது காரணம்?

விழியின் வெளிச்சமா? அறிவின் வெளிச்சமா?

அகத்தே இருக்கிற ஒன்று, புறத்தே இருக்கிற ஒன்றுக்கு எப்படித் தெரியும்?

நண்பர்களே!

கடவுளைக் கண்களால் தேடாதீர்கள்!

# வாலைப் பிடித்தால் வழி கிடைக்குமா?

தென்கச்சி சுவாமிநாதன்



ஆ ற்றில் வெள்ளம் கரை புரண்டு ஓடுகிறது. இக்கரையில் இரண்டு பேர் நின்று கொண்டிருக்கிறார்கள். ஓடம் இல்லை. எப்படி அக்கரைக்குப் போவது? இந்த நேரத்தில் ஒரு காளை மாடு அங்கே வந்தது. அதுவும் அக்கரைக்குப் போக வேண்டும். ஆனாலும் அதற்கு ஓடம் எதுவும் தேவைப்படவில்லை. அப்படியே ஆற்றில் பாய்ந்தது... நீந்த ஆரம்பித்தது. இதைப் பார்த்த இரண்டு பேரில் ஒருத்தன் குபீர் என்று ஆற்றில் குதித்தான். அந்தக் காளை மாட்டின் வாலைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான்.

காளை மாடு சுலபமாக அவனை இழுத்துச் சென்று அக்கரையில் சேர்த்துவிட்டது.

அடுத்தவன் பார்த்தான்.

நமக்கு ஒரு ‘வால்’ கிடைக்காதா என்று எதிர்பார்த்தான்.

இந்த நேரம் ஒரு நாய் வந்து ஆற்றில் குதித்தது. இதுதான் நேரம் என்று இவனும் ஆற்றில் விழுந்து அந்த நாயின் வாலைப் பிடித்துக் கொண்டான். இந்த மனிதனையும் இழுத்துக் கொண்டு நாயால் ஆற்றில் நீந்த முடியவில்லை. திணறியது. ஒரு கட்டத்தில் நாய், ‘வாள்... வாள்’ என்று கத்த ஆரம்பித்து விட்டது. விளைவு _ இருவருமே ஆற்று நீர் போகும் திசையிலேயே மிதந்து போய்க் கொண்டிருக்கிறார்கள்.

அவர்கள் போக வேண்டிய திசை வேறு.

போய்க் கொண்டிருக்கிற திசை வேறு.

கரை சேர நினைக்கிற மனிதர்களின் கதை இது. சிலர் கரையிலேயே நின்று விடுகிறார்கள். சிலர் காளையின் வாலைப் பிடித்துக் கொள்கிறார்கள். சிலர் நாயின் வாலைப் பற்றிக் கொள்கிறார்கள்.

ஆன்மிகம் என்ன சொல்கிறது தெரியுமா? நீங்கள் கரை சேர விரும்புகிறீர்களா? அப்படியானால் எதையும் பற்றிக் கொள்ளாதீர்கள். ஏற்கெனவே பற்றிக் கொண்டிருப்பதை எல்லாம் விட்டு விடுங்கள்!

ஆற்றின் நடுவே கம்பளி மூட்டை ஒன்று மிதந்து செல்கிறது. உள்ளே ஏதாவது பொருள் இருக்கும் என்கிற ஆசையில் ஒருத்தன் நீந்திச் சென்று அதைப் பற்றுகிறான். நீண்ட நேரம் ஆகியும் கரை திரும்பவில்லை. நடு ஆற்றில் போராடிக் கொண்டிருக்கிறான். கரையில் நின்று கொண்டிருக்கிற நண்பர்கள் கத்துகிறார்கள்...

‘‘நண்பா... கம்பளி மூட்டையை இழுத்துக் கொண்டு உன்னால் வர முடியவில்லை என்றால் பரவாயில்லை... அதை விட்டுவிடு!’’

ஆற்றின் நடுவே இருந்து அவன் அலறுகிறான்: ''நான் இதை எப்பவோ விட்டுட்டேன்... இப்ப இதுதான் என்னை விடமாட்டேங்குது. ஏன்னா, இது கம்பளி மூட்டை இல்லே. கரடிக் குட்டி!''

தவறாகப் பற்றுகிறவர்கள் தடுமாறிப் போகி றார்கள். சரியாகப் பற்றுகிறவர்கள் கரையேறி விடுகிறார்கள். பற்றையே விடுகிறவர்கள் கடவுளாகி விடுகிறார்கள்!

## கடவுள் அனுப்பி வைத்தாரா?






ஒ ர் ஊருக்கு புதிய மனிதன் ஒருவன் வந்தான்.

''எங்கே இருந்து வருகிறாய்?'' என்று கேட்டார்கள்.

''தேவலோகத்திலிருந்து வருகிறேன்'' என்றான்.

கேட்டவர்கள் சிரித்தார்கள்.

''உன்னை யார் இங்கே அனுப்பி வைத்தது?''

''கடவுள்தான் அனுப்பி வைத்தார்.''

கேட்டவர்களுக்கு மேலும் சிரிப்பு.

புத்தி சரியில்லாதவன் என்பதாகப் புரிந்து கொண்டு அவனை கோயிலுக்குக் கூட்டிச் சென்றார்கள். மனநலம் பாதிக்கப்பட்டவர்களைத் தெளிய வைக்கிற கோயில் அது. அங்கே இருந்த கல் மண்டபத் தூணில் இவனைக் கட்டிப் போட்டு விட்டார்கள்.

இப்போது அவன் சிரித்தான்.

''ஏன் சிரிக்கிறாய்?''

''என்னை அனுப்பி வைக்கிறபோது கடவுளே சொன்னார், இப்படி எல்லாம் நடக்கும் என்று!''

''எப்படி எல்லாம் நடக்கும் என்று?''

''உன்னைக் கட்டிப் போடுவார்கள்... கைகொட்டிச் சிரிப்பார்கள் என்று சொன்னார் கடவுள். அவர் சொன்னபடியே நடக்கிறது. ஆகவே, நான் அவருடைய தூதன் என்பதற்கு இதைவிட வேறு என்ன நிரூபணம் வேண்டும்?''

மக்கள் யோசித்தார்கள்.

''சரி. நீ என்னதான் சொல்ல வருகிறாய்?''

''நம்புங்கள்... நான் ஒரு தீர்க்கதரிசி. கடவுளால் இங்கே அனுப்பப்பட்டவன். உங்களுக்கு வழிகாட்டவே இங்கே வந்திருக்கிறேன்.''

இப்போது இன்னொரு சிரிப்புச் சத்தம்.

*இவனைவிட பலமாகச் சிரிப்பது கேட்டது.*

*அந்தச் சத்தம் எங்கே இருந்து வருகிறது?*

*அவனுக்குப் பின்னால், அதே மண்டபத்தில்! அங்கே இன்னொரு மனிதன் தூணில் கட்டப்பட்டி ருக்கிறான்.*

*''நீ ஏன் சிரிக்கிறாய்?''*

*''நீ பொய் சொல்கிறாய்... அதனால் சிரிக்கிறேன்!''*

*''எது பொய் என்கிறாய்?''*

*''கடவுள் உன்னை அனுப்பி வைத்ததாகச் சொல்வது பொய்!''*

*''அது எப்படி உனக்குத் தெரியும்?''*

*''நான் உன்னை அனுப்பி வைக்கவே இல்லையே!''*

*இவன் அதிர்ச்சியோடு அவனை நிமிர்ந்து பார்த்தான்.*

*அவன் சொன்னான் பரிதாபமாக... ''நான்தான் கடவுள் என்று சொல்லிக் கொண்டு இங்கே வந்தவன். ஒரு மாதமாகக் கட்டிப் போட்டு வைத்திருக்கிறார்கள்.''*

*நண்பர்களே!*

*நானே கடவுளின் தூதன் என்கிறார்கள் சிலர்.*

*நானே கடவுள் என்கிறார்கள் சிலர்.*

*உண்மையான கடவுள் எங்கேதான் இருக்கிறார்?*

*ஒரு மனிதன், ஞானி ஒருவரைத் தேடிப் போனான். ''நான் கடவுளைச் சந்திக்க வேண்டும்!'' என்றான்.*

*அவர் 'பளார்' என்று இவன் கன்னத்தில் அறைந்து விட்டார்.*

*இவன் பயந்து ஓடிப் போனான்.*

*பக்கத்திலிருந்தவர்கள் ஞானியிடம் கேட்டார்கள்: ''அவனை ஏன் அறைந்தீர்கள்?''*

*''அவன் ஒரு பைத்தியக்காரன்!''*

*''அப்படியா?''*

*''ஆமாம்! அவனையே அவன் தேடிக் கொண்டி ருக்கிறான்!''*

# கோபத்தை விரட்ட என்ன செய்வது?


தென்கச்சி சுவாமிநாதன்



*ஒ ருத்தர் தலையில் கட்டுப் போட்டுக் கொண்டு தெருவில் நடந்து வந்து கொண்டிருந்தார்.*

*''என்னங்க இது?'' என்றார் எதிரே வந்த நண்பர்.*

*''எல்லாம் கோபத்தினால் வந்த விளைவு!'' என்றார் அவர்.*

*''கொஞ்சம் விவரமாகத்தான் சொல்லுங்களேன்?''*

*''குடும்பத்துல சண்டை. ஆத்திரப்பட்டு என்னமோ சொல்லிப்புட்டேன்... அதுக்காக ஏதோ ஒரு பாத்திரத்தை எடுத்து என் முகத்துக்கு நேரா வீசிப்புட்டா என் வீட்டுக்காரி... அவ்வளவுதான்!''*

*''குடும்பம்னு இருந்தா இதெல்லாம் சகஜம்தானே...!''*

*''உங்க வீட்டுலேயும் இப்படி நடக்கறது உண்டா?''*

*''தாராளமா உண்டு!''*

*''ஆனா, உங்க தலையில கட்டு எதையும் காணோமே..?''*

*''நாம கொஞ்சம் அனுசரிச்சு நடந்துகிட்டா எதுவும் பிரச்னை வராது!''*

*''எப்படி அனுசரிச்சுப் போறது...? அதைக் கொஞ்சம் எனக்கும் சொல்லிக் கொடுங்களேன்?''*

*''சொல்லிக் கொடுக்கறேன். அதுக்கு முன்னாடி ஓர் உண்மையைப் புரிஞ்சிக்கணும்!''*

*''என்ன அது?''*

*''கோபம்கறது ஒரு தற்காலிகப் பைத்தியம் தான்!''*

*''அப்படியா?''*

*''ஆமாம். தற்காலிகமா ஒருத்தருக்குப் பிடிக்கிற பைத்தியம்தான் கோபம். அந்த நேரத்துலே அவரு மறைச்சு வெச்சிருக்கிற பைத்தியக்காரத்தனம் வெடிச்சிக்கிட்டு வெளியிலே வருது... அவ்வளவு தான்!''*

*''சரி.. இப்ப என்ன செய்யலாம்கறீங்க?''*

"கோபம் வர்ற நேரத்துல நாம் ஒரு காரியம் செய்யலாம்.. அதாவது அஞ்சு தடவை நம்ம மூச்சை ஆழமா உள்ளே இழுத்து மெதுவா மெள்ள வெளியே விடணும்."

"அப்படி செஞ்சா...?"

"மனசுலே கோபத்துக்குப் பதிலா சுவாசம் பத்தின சிந்தனை ஏறும். இதுக்கப்புறம் கோபம் வந்தா கூட அது தீவிரமா இருக்காது. இதைத் தொடர்ந்து செஞ்சா அது ஒரு பழக்கமாகவே ஆயிடும். ஆத்திரத்தை விரட்ட, ஆன்மிகம் சொல்லிக் கொடுக்கிற ஒரு சுலபமான வழி இது!"

"நீங்க இந்த வழியைத்தான் கடைப்பிடிக்கிறீங்களா?"

"இல்லை.. அது வேறே வழி!"

"எப்படி அது?"

"என் மனைவிக்குத் திடீர் திடீர்னு பயங்கரமா கோபம் வந்துடும். கோபம் வந்துட்டா கையிலே கிடைக்கிற பாத்திரத்தையெல்லாம் எடுத்து என் முகத்துக்கு நேரா வீசறது உண்டு!"

"அதை எப்படி சமாளிக்கிறீங்க?"

"அது ரொம்ப சுலபம்.. ஒரு தலையணையை எடுத்து என் முகத்துக்கு நேரா பிடிச்சுக்குவேன்..!"

## சாலையைக் கடந்தாரா பெரியவர்?






ஆ லயம் ஒன்றில் ஆன்மிக உபதேசம் நடந்து கொண்டிருந்தது.

"அடுத்தவர்களுக்கு உதவுங்கள்... ஆண்டவன் உங்களுக்கு உதவுவார்!"

கூட்டம் முடிந்ததும் மூன்று இளைஞர்கள் எழுந்து வந்தனர்.

"ஐயா! உங்கள் உபதேசப்படி நடக்க நாங்கள் தயாராக இருக்கிறோம். நாங்கள் என்ன செய்ய வேண்டும்.... எப்படிச் செய்ய வேண்டும்.... சொல்லுங்கள்.... செய்கிறோம்!"

"எது வேண்டுமானாலும் செய்யலாம். இப்ப உதாரணத்துக்கு, வயசான ஒரு பெரியவர் சாலையைக் கடக்கறதுக்கு நீங்க உதவலாம்!"

இளைஞர்கள் ஆர்வத்தோடு போனார்கள்.

அடுத்த வாரம் திரும்பி வந்தார்கள்.

பெரியவர் கேட்டார்.

''என்ன... யாருக்காவது உதவி செய்தீர்களா?''

''செய்தோம்!'' என்றார்கள் மூன்று பேரும்.

''என்ன செய்தீர்கள்? ஒவ்வொருவராக வந்து சொல்லுங்கள்... பார்க்கலாம்!''

முதல் இளைஞன் வந்தான்.

''முதியவர் ஒருவர் சாலையைக் கடக்க நான் உதவினேன்!''

பெரியவருக்கு மகிழ்ச்சியாக இருந்தது.

உபதேசத்துக்குத் தக்க பலன் கிடைத்ததாக உணர்ந்து பெருமைப்பட்டார்.

அடுத்த இளைஞனைக் கூப்பிட்டுக் கேட்டார்: ''நீ என்ன செய்தாய்?''

''நானும் வயசான பெரியவர் ஒருவர் சாலையைக் கடக்க உதவினேன்!''

பெரியவர் கொஞ்சம் யோசித்தார். அப்புறம் அடுத்தவனை அழைத்தார்:

''நீ என்ன செய்தாய்?''

''நானும் முதியவர் ஒருவர் சாலையைக் கடக்க உதவினேன்!''

பெரியவருக்குச் சந்தேகம்.

''எப்படி இது... உங்க மூன்று பேருக்கும் மூன்று பெரியவர்கள் கிடைத்தார்களா?''

''அப்படியெல்லாம் இல்லை.. ஒரே பெரியவர்தான்!''

''என்னது... அந்த ஒருத்தர் சாலையைக் கடக்க நீங்க மூணு பேர் தேவைப்பட்டதா?''

''மூணு பேர் இருந்தும் அது சிரமமாத்தான் இருந்தது!''

''என்ன சொல்றீங்க?''

''அந்தப் பெரியவர் சாலையைக் கடக்க விரும்பலே... இருந்தாலும் வலுக்கட்டாயமா நாங்க அவரைத் தூக்கிக் கொண்டு போய் அடுத்த பக்கத்திலே விட்டோம்!''

நண்பர்களே! 'ஆண்டவனை உச்சரிக்கிற உதடுகளை விட அடுத்தவனுக்கு உதவுகிற கரங்கள் மேலானவை!' என்று பெரியவர்கள் சொல்கிறார்கள்.

உண்மைதான்! ஆனாலும் ஒன்றைப் புரிந்து கொள்ளுங்கள். திட்டம் போட்டுச் செய்கிற உதவி- அரசியல்.

திட்டம் போடாமல் செய்கிற உதவி- ஆன்மிகம்!

# சொர்க்கத்துக்கு அனுமதிச் சீட்டு!


தென்கச்சி சுவாமிநாதன்



ஒ ரு பெரிய மனிதன். இந்த உலகத்தில் மிகவும் வசதியாக வாழ்ந்தான்.

ஒரு நாள் அவன் உலக வாழ்க்கையை முடித்துக் கொண்டு சொர்க்கத்துக்குப் போனான்.

அங்கே போன பிறகுதான் தெரிந்தது... சொர்க்கத்தின் வாசல் கதவு மூடி இருந்தது.

மூடிய கதவின் முன்னால் போய் நின்றான்.

''இங்கே யாருமே இல்லையா?'' என்று உரக்கக் கத்தினான். பதில் இல்லை.

''நான் ஒரு பெரிய மனிதன் வந்தி ருக்கிறேன். கதவைத் திறந்து விடு!''

சற்று நேரத்தில் சித்ரகுப்தன் அங்கே வந்தான்.

உடனே இந்தப் பெரிய மனிதன், தனது சட்டைப்பையிலிருந்து பத்து ரூபாய் நோட்டை எடுத்து அவன் கையில் திணித்தான்.

''இந்தா... இதை வெச்சுக்கோ... சீக்கிரம் கதவைத் திற... நான் உள்ளே போகணும்!''

சித்ரகுப்தன் சிரித்தான்.

''இதெல்லாம் உங்கள் பூலோக நடைமுறை கள்- லஞ்சம் கொடுக்கறது, கதவைத் திறக்கச் சொல்றது... அதெல்லாம் இங்கே ஒண்ணும் எடுபடாது!''

''அப்படின்னா நான் எப்படி உள்ளே வர்றது?''

''சொர்க்கத்துலே நுழையறதுக்கான அனு மதிச் சீட்டு கொண்டு வந்திருக்கியா?''

''அனுமதிச் சீட்டா? அது எங்கே கிடைக்கும், சொல். எவ்வளவு செலவானா லும் பரவாயில்லை. வாங்கிக்கலாம்.''

''அதைக் காசு கொடுத்து வாங்க முடியாது!''

''வேறே எப்படி வாங்கறது?''

''அடுத்தவர்களுக்கு ஏதாவது உதவி செஞ்சாத்தான் அது கிடைக்கும்.''

''என்ன சொல்றே நீ?''

''பூலோகத்துலே நீ செய்யுற புண்ணிய காரியங்கள்தான் சொர்க்கத்துலே நுழையறதுக் கான அனுமதிச் சீட்டு!''

''இப்ப நான் உள்ளே வர என்ன வழி?''

''பூலோகத்துலே நீ யாருக்காவது... ஏதாவது உதவி செஞ்சிருக்கியா?''

**பெரிய மனிதன் ரொம்ப நேரம் யோசித் தான்.**

**பிறகு சொன்னான்: ‘‘ஒரு முறை ஒரு கிழவிக்கு 10 காசு தானம் கொடுத்திருக்கேன்.... அப்புறம் இன்னொரு நாள் ஓர் அநாதைப் பையனுக்கு ஐந்து காசு கொடுத்திருக்கேன்.’’**

**‘‘கொஞ்சம் பொறு!’’ என்று சொல்லிவிட்டு சித்ரகுப்தன் உள்ளே போனான்.**

**கொஞ்ச நேரம் கழித்து வெளியே வந்தான்.**

**‘‘உள்ளே போய் சொர்க்கத்தின் தலைவர்கிட்டே உனது கதையைச் சொன்னேன். அவர் உடனே உத்தரவு போட்டுட் டார்!’’**

**‘‘என்ன உத்தரவு?’’**

**‘‘அந்தப் பதினஞ்சு காசை உன்கிட்டே திருப்பிக் கொடுத்துடச் சொன்னார்!’’**

**‘‘அப்புறம்?’’**

**‘‘உன்னை நரகத்துக்கே அனுப்பி வெச்சுடச் சொன்னார்!’’ பெரிய மனிதன் மயங்கி விழுந்தான்.**

**ஆன்மிக உலகில் பயணம் செய்கிறவர்கள் புரிந்து கொள்ள வேண்டிய ஒரு முக்கியமான பாடம்:**

**காசு கொடுத்து சொர்க்கத்தை வாங்க முடியாது; ஆனால், கருணையைக் கொடுத்து அதைச் சுலபமாக வாங்க முடியும்!**

## மாளிகையின் விலை ஒரு ரூபாய்!






**க டலில் கப்பல் ஒன்று போய்க் கொண்டிருந்தது.**

**பக்தர் ஒருவர் அதில் பயணம் செய்தார்.**

**நடுக் கடலில், சூறாவளிக் காற்றில் கப்பல் சிக்கிக் கொண்டது.**

***'கரையைத் தொடுவோமா?' என்ற கவலை எல்லோரையும் பற்றிக் கொண்டது.***

***கப்பலைக் கட்டுப்படுத்த முடியவில்லை.***

***கப்பல் திசை மாறிப் போனது.***

***'ஏதாவது பாறையில் மோதி மூழ்கி விடுமோ?' என்கிற நிலைமை. பக்தர் கண்களை மூடினார். கடவுளை நினைத்து வேண்டினார்.***

***''கடவுளே... எப்படியாவது என்னைக் காப்பாற்றி விடு! நான் உயிர் பிழைத்து ஊர் போய்ச் சேர்ந்து விட்டால் எனக்குச் சொந்தமான ஒரு கோடி ரூபாய் மதிப்புள்ள மாளிகையை உனக்குக் காணிக்கையாக்குகிறேன்!''***

***அவரது வேண்டுதல் பலித்தது.***

***புயல் ஓய்ந்தது.***

***கப்பல் பத்திரமாகக் கரைக்கு வந்து சேர்ந்தது.***

***கரையேறிய பக்தன் யோசித்தான்.***

***'கப்பலில் என்னோடு ஏராளமானவர்கள் பயணம் செய்தனர். அவர்களும் பத்திரமாகக் கரையேறியிருக்கிறார் கள். நான் கொஞ்சம் அவசரப்பட்டு விட்டேனோ? ஆண் டவனுக்கு அப்படி ஒரு வாக்குறுதியைக் கொடுத்திருக்க வேண்டியதில்லையோ?'***

***பக்தரின் சிந்தனை தொடர்ந்தது.***

***'எப்படி இருந்தாலும் பிரார்த்தனையிலிருந்து பின்வாங்க முடியாது. அதை நிறைவேற்ற வேண்டியது உண்மையான பக்தனின் கடமை. என்ன செய்யலாம்?' யோசித்தான்.***

***முடிவாக, அவன் ஓர் ஏற்பாடு செய்தான்.***

***அந்த மாளிகையை ஏலம் விடுவதாக அறிவித்தான்.***

***ஏலம் கேட்க எல்லோரும் வந்து கூடினார்கள். அவன் சொன்னான்:***

***''இந்த மாளிகையின் விலை ஒரு ரூபாய். இதன் தூணில் கட்டப்பட்டிருக்கும் பூனையின் விலை ஒரு கோடி ரூபாய். இரண்டையும் சேர்த்தே நீங்கள் ஏலம் கேட்க வேண்டும்!''***

***ஏலம் கேட்டார்கள்.***

***விற்பனை முடிந்தது.***

***கோயிலுக்குப் போனான்.***

***''கடவுளே... சொன்னபடி எனது மாளிகையை ஏலம் விட்டேன். அதற்குரிய தொகையை இதோ உனது உண்டியலில் சேர்த்து விட்டேன்!'' என்றபடி ஒரு ரூபாயை உண்டியலில் போட்டுவிட்டு அந்த பக்தன் கம்பீரமாக வெளியே வந்தான்.***

***நண்பர்களே!***

***கொஞ்சம் யோசித்துப் பாருங்கள்.***

***இன்றைய பக்தி, கடவுளையும் வியாபாரப் பொருளாக்கி விடுகிறது!***

## குளித்தால் புனிதமா?






*ஒ ரு பெரிய மனிதர். வேலைக்காரனைக் கூப்பிட்டார்.*

*''புறப்படு!'' என்றார்.*

*''எங்கே?'' என்றான்.*

*''புனிதமான இடங்களுக்கெல்லாம் போய் வரலாம். புண்ணிய நதிகளிலெல்லாம் நீராடி வரலாம்.''*

*''குளிக்கறதுக்கு அவ்வளவு தூரம் போகணுங்களா முதலாளி?''*

*''அட முட்டாளே! ஒன்றைப் புரிந்து கொள்... புண்ணிய தீர்த்தங்களில் நீராடினால், நாம் செய்த பாவங்கள் எல்லாம் போகும். நாம் புனிதமடையலாம்!''*

*''அப்படின்னா... போயிட்டு வரலாங்க!''*

*''வெளியூர் சாப்பாடு எனக்கு சரிப்படாது... அதனாலேதான் வேளாவேளைக்குச் சமைச்சுப் போட உன்னை அழைச்சிக்கிட்டுப் போறேன். ஒரு மாசத்துக்குத் தேவையானதையெல்லாம் மூட்டை கட்டி எடுத்துக்கோ!''*

*அவர்கள் இருவரும் புறப்பட்டார்கள். புனிதத் தலங்களுக்கெல்லாம் போனார்கள். புண்ணிய நதிகளில் எல்லாம் நீராடினார்கள். ஒரு மாதம் கழித்து ஊருக்குத் திரும்பினார்கள். வீட்டுக்கு வந்தவுடன் அந்த வேலைக்காரன் தன் முதலாளிக்கு வேண்டியதை அவசர அவசரமாகச் சமைத்தான்.*

*''சாப்பிட வாங்க முதலாளி!'' என்றான்.*

*பசியோடிருந்த முதலாளி வேகமாக வந்து உட்கார்ந்தார்.*

*வேலைக்காரன் பரிமாறினான்.*

முதலாளியின் முகம் மாறியது.

முகம் சுளித்தார்.

மோசமான வாசனை. எங்கே இருந்து வருகிறது? சாப்பாட்டில் இருந்துதான்.

''என்னடா சமையல் பண்ணியிருக்கே... துர்வாசனை. சகிக்க முடியல!'' என்று சத்தம் போட்டார்.

அவன் பணிவோடு அவர் முன்னால் வந்து நின்று சொன்னான். ''ஐயா... புனிதமான காய்கறிகளைக் கொண்டுதான் இன்னிக்கு சமையல் பண்ணியிருக்கேன்!''

''என்னடா சொல்றே?''

''அது வந்துங்க ஐயா... நாம இங்கே இருந்து புறப்படும்போது நம்ம தோட்டத்துலே விளைஞ்ச உருளைக் கிழங்கையும் கொஞ்சம் எடுத்துக்கிட்டு வந்தேன். நாம நீராடினபோதெல்லாம் நான் இந்த உருளைக் கிழங்குகளையும் புண்ணிய தீர்த்தத்துலே குளிப் பாட்டினேன். அந்த உருளைக் கிழங்கைத்தான் இப்ப உங்களுக்கு சமைச்சுப் போட்டேன்!''

''என்னடா இப்படி பண்ணிப்புட்டே?''

''புண்ணிய நதிகளிலே குளிச்சா, புனிதமாகலாம்னு சொன்னீங்களே முதலாளி?!''

முதலாளி யோசிக்க ஆரம்பித்தார்.

புழக்கடையில் உள்ள கிணற்றில் குளிப்பதற்கும், புண்ணிய நதிகளில் குளிப்பதற்கும் வித்தியாசம் உண்டு!

ஆன்மிகம் சொல்லுகிறது.

வெளியே சுத்தமாக இருந்தால் மட்டும் போதாது!

உள்ளேயும் சுத்தமாக இருக்க வேண்டும்!

## எதையும் சாப்பிடும் சாமியார்!






ஓ ர் ஊரில் ஒரு சாமியார் இருந்தார். ஆனாலும் அவர் ஒரே ஊரில் இருப்பதில்லை. ஒரு நாளைக்கு ஓர் ஊர் என்று போய்க் கொண்டே இருப்பார். யாரிடமும் எதுவும் பேச மாட்டார். எப்பவும் மௌன விரதம்.

அவரிடம் இன்னொரு விரதமும் உண்டு.

யாராவது விரும்பி அழைத்துச் சாப்பிடச் சொன்னால்... எதைப் போட்டாலும் சாப்பிட்டு விடுவார். பிடிக்கிறதோ பிடிக்கவில்லையோ... சிரமப்பட்டாவது சாப்பிட்டு விடுவார். அப்படி ஒரு பழக்கம்!

இப்படிப்பட்டவரை ஒரு கணவனும் மனைவியும் தங்கள் வீட்டுக்குச் சாப்பிடக் கூப்பிட்டார்கள். மறுக்காமல் போனார் சாமியார். இலை போட்டார் கள். சாப்பாடு பரிமாறினார்கள்.

*சாப்பிட ஆரம்பித்தார் சாமியார். கணவனும் மனைவியும் கவனித்துப் பார்த்தார்கள். இவர் எதை விரும்பிச் சாப்பிடுகிறாரோ, அதை அதிகமாகக் கொண்டு வந்து வைக்க வேண்டும் என்பது அவர்களின் ஆசை.*

*அன்றைக்கென்று பார்த்துச் சமையலில் எதிர்பாராத விதமாக ஒரு கொட்டாங்கச்சித் துண்டு கலந்து விட்டது.*

*சாமியார் எதையும் மிச்சம் வைக்காமல் சாப்பிடுகிறவர் அல்லவா? ஆகவே, அந்தக் கொட்டாங்கச்சித் துண்டை எடுத்து வாயில் போட்டார். எப்படியோ சிரமப்பட்டுக் கடித்து மென்று விழுங்கி விட்டார்.*

*கணவர் இதைக் கவனித்தார். உடனே மனைவியின் காதைக் கடித்தார். ‘‘அடியேய்... இந்த சாமியாருக்குக் கொட்டாங்கச்சின்னா ரொம்பப் பிரியம் போலிருக்கு!’’*

*அவ்வளவுதான்! உடனே அந்தப் பெண்மணி விறுவிறுவென கொல்லைப் பக்கம் ஓடினாள். அங்கே கிடந்த தேங்காய் ஓடுகளையெல்லாம் பொறுக்கி வந்தாள். அம்மியில் வைத்து நொறுக்கினாள். அப்படியே அள்ளிக் கொண்டு வந்து சாமியாரின் இலையில் பயபக்தியோடு வைத்தாள்.*

*சாமியார் விழிக்க ஆரம்பித்தார். என்ன செய்வது? எதுவும் பேசாமல் அவற்றை அள்ளி வாயில் போட்டுக் கடிக்க ஆரம்பித்தார்.*

*கணவன் குதூகலிக்க ஆரம்பித்தான். ‘‘சாமி! இது உங்களுக்குப் பிடிக்கும்னு ஏற்கெனவே எங்களுக்குத் தெரியாமப் போச்சு! மன்னிக்கவும். கொஞ்சம் இருங்க... இன்னும் கொண்டு வர்றேன்!’’ என்றவன் ஒரு பெரிய கூடையை எடுத்துக் கொண்டு அடுத்த வீட்டுக் கொல்லைப் புறத்துக்கு ஓடினான். ஒரு மூட்டையுடன் திரும்பினான்.*

*சாமியாருக்கு விழி பிதுங்க ஆரம்பித்தது.*

*கண்கள் சிவந்து நீர் வழிந்தது!*

*கணவன் மனைவியிடம் சொன்னான்: ‘‘சாமி முகத்தை கவனிச்சியாடீ... ஆனந்தக் கண்ணீர்!’’*

*சாமியார் மெள்ள எழுந்தார்.*

*ஒரே ஓட்டம். கொல்லைப்புறமுள்ள முள் வேலியைத் தாண்டிக் குதித்துப் பறந்து போனார்!*

*‘‘சாமிக்கு நம்ம பேர்லே ஏதோ கோபம்... வாங்க, போய்க் கூப்பிட்டுக்கிட்டு வரலாம்!’’ _ கணவனும் மனைவியும் சாமியாரைத் துரத்திக் கொண்டு ஓடினார்கள்.*

*நண்பர்களே! இன்றைக்கு ஆன்மிகம் இப்படித்தான் நம்மையும் துரத்திக் கொண்டிருக்கிறது.*

*ஒரு வேடிக்கை என்ன தெரியுமா? கடவுளை நம்புகிறவர்களைவிட, கடவுளை எனக்குத் தெரியும் என்று சொல்கிறவர்களை நம்புகிறவர்கள் இன்றைக்கு அதிகமாகிப் போனார்கள்!*

## எலுமிச்சம்பழமும் பலாப்பழமும்!

தென்கச்சி சுவாமிநாதன்



ஆ லயம் ஒன்றின் வாசலில் அந்தப் பெரியவர் உட்கார்ந்திருந்தார். அருகில் ஓர் இளைஞன் நின்று கொண்டிருந்தான்.

பக்தர்கள் விதவிதமான பொருள்களைச் சுமந்தபடி உள்ளே சென்று கொண்டிருந்தனர்.

இளைஞன், பெரியவரிடம் கேட்டான்: ''ஐயா... இவர்கள் எல்லாம் என்ன கொண்டு செல்கிறார்கள்?''

''பழங்கள்... பலகாரங்கள்!''

''எதற்காக?''

''ஆண்டவன் காலடியில் வைத்துப் படைப்பதற்காக!''

''இவை எல்லாம் ஆண்டவனுக்குப் பிடிக்குமா?''

''இவர்களுக்குப் பிடிக்கும்!''

''அப்படியென்றால்?''

''திரும்ப எடுத்துக் கொண்டு வந்து இவர்களே சாப்பிட்டு விடுவார்கள்!''

''வேடிக்கையாக இருக்கிறது!''

''ஒரு மன்னரின் கதை தெரியுமா உனக்கு?''

''என்ன அது?''

*''ஒரு வேடிக்கையான மன்னர். அவருக்குப் பிறந்த நாள் வந்தது. அவருக்கு வாழ்த்துச் சொல்வதற்காக மக்கள் வரிசையாக நின்று கொண்டிருந்தனர். அவர்கள் கையில் விதவிதமான பழங்கள். அந்த மன்னர் சில நேரங்களில் இயல்பாக நடந்து கொள்வார். சில நேரங்களில் விபரீதமாக நடந்து கொள்வார். வரிசையில் நின்றவர்களில் முதல் ஆள் உள்ளே சென்றார். அவர் கையில் ஒரு எலுமிச்சம்பழம். அதை மன்னர் கையில் கொடுத்தார். மன்னர் அதை வாங்கி என்ன செய்தார் தெரியுமா?''*

*''என்ன செய்தார்?''*

*''அதைக் கொடுத்தவர் வாயைத் திறக்கச் சொன்னார். அவர் திறந்தார். மன்னர் உடனே எலுமிச்சம்பழத்தை அவர் வாயில் திணித்து ஒரு நாள் முழுதும் 'இப்படியே இருக்க வேண்டும்' என்று உத்தரவு போட்டு விட்டார். மன்னர் உத்தரவை மீற முடியுமா, என்ன? எலுமிச்சம்பழம் கொண்டு வந்தவர், அதைத் தன் வாயில் கவ்வியபடியே வெளியே சென்றார். அதற்கு முன்பாக மன்னரைப் பார்த்து ஒரு சிரிப்புச் சிரித்தார்.*

*'ஏன் சிரிக்கிறே?' என்றார் மன்னர் கோபமாக.*

*'அதுக்கில்லே மன்னா... இந்த எலுமிச்சம்பழத்தை ஒரு நாள் முழுவதும் என் வாயிலே வெச்சிருக்கிறது எனக்கு ஒன்றும் கஷ்டமில்லே. ஆனா... இதே வரிசையிலே பின்னால ஒருத் தன் வந்துகிட்டிருக்கான். அவன் நிலைமையை நினைச்சுப் பார்த்தேன்... சிரிப்பு வந்துட்டது!' என்றான்.*

*'ஏன்?' என்று கேட்டார் மன்னர்.*

*'அவன் கையிலே பெரிய பலாப் பழத்தை வெச்சிட்டு நிக்கறான்' என்றான் வந்தவன்!''_ முடித்தார் பெரியவர்.*

*இந்தக் கதையைக் கேட்ட இளைஞன் வாய்விட்டுச் சிரித்தான். ''இப்படித்தான் இருக்கிறது இந்த பக்தர்களின் செய்கையும்!'' என்றார் பெரியவர்.*

*''அப்படியானால், ஆண்டவன் காலடியில் வைக்கக் கூடிய எதுவும் நம்மிடம் இல்லையா?''*

*''ஏன் இல்லை... இருக்கிறது. நம் எல்லோரிடமும் அது இருக்கிறது! அதைத்தான் இறைவனிடம் சமர்ப்பிக்க வேண்டும்!''*

*''என்ன அது?''*

*''நம்மிடம் இருக்கிற ஆணவம்!''*

நாயாக மாறிய கழுதை!

தென்கச்சி சுவாமிநாதன்



கா லை நேரம். அந்த மனிதன் நடந்து போய்க் கொண்டி ருந்தான். கூடவே, அவனது நாயும் நடந்து போகிறது. அவன் மிகவும் செல்லமாக வளர்க்கும் நாய் அது. அவன் ஒரு கழுதையையும் வளர்த்து வந்தான்.

நாய், நடு வீட்டில் விளையாடிக் கொண்டிருக்கும். கழுதை, கொல்லைப் புறத்தில் நின்று கொண்டிருக்கும்.அந்த நாய்க்கு வீட்டுக்குள் ராஜ மரியாதை நடக்கும்.

அது குளிப்பதற்கு என்று தனியாக சோப். இரண்டு வேளை பால்; பிஸ்கட். மதியம் சத்துள்ள சாப்பாடு. கொஞ்சம் சோர்ந்து காணப்பட்டால், உடனே தூக்கிக் கொண்டு மருத்துவமனைக்கு ஓடுவார்கள்.

காலையில் முதலாளியுடன் நடைப் பயிற்சி. முதலாளி தனியாக எங்காவது வெளியே சென்று விட்டு, மாலையில் வீடு திரும்பினால்... அந்த நாய் ஆவலோடு ஓடி வரும். அப்படியே எழும்பி முன்னங்கால் இரண்டையும் அவர் தோள் மீது போட்டுக் கொள்ளும். அவரும் சிரித்துக் கொண்டே அதன் முதுகில் செல்லமாகத் தட்டிக் கொடுப்பார்.

சாய்வு நாற்காலியில் சாய்ந்தபடி முதலாளி செய்தித்தாள் படிப்பார் அல்லது தொலைக்காட்சி பார்ப்பார். அப்போதெல்லாம் இந்த நாய் அவர் காலடியில் படுத்துக் கிடக்கும். அவரின் கை இதன் தலையை செல்லமாகத் தடவிக் கொண்டிருக்கும்.

அந்த நாய் படுப்பதற்கென்றே ஒரு மெத்தை. சில நேரம் அது அங்கே இருக்கும் மேஜை- நாற்காலி மீது கூட ஏறி விளையாடும். சோபாவில் ஏறி உட்கார்ந்து கொள்ளும். அவ்வளவு செல்வாக்கு. இவ்வளவையும் அந்தக் கழுதை கொல்லைப் புறத்தில் இருந்தே கவனித்தது. அப்புறம் யோசித்தது.

‘என்ன இது... இந்த வீட்டுல நாம கழுதையா உழைக்கிறோம். பொதி சுமக்கிறோம். நமக்கு ஒரு நல்ல சாப்பாடு கிடையாது... படுக்கை கிடையாது... ஒரு நாளாவது நம்ம தலையையோ, முதுகையோ நம்ம முதலாளி தடவிக் கொடுத்தது கிடையாது. ஆனா, இந்த நாய் இந்த வீட்டுக்காக ஒரு நாள் கூட ஒரு துரும்பைக்கூட அசைச்சது இல்லை. அதைப் போய் இந்த வீட்டுல உள்ளவங்க இப்படி தலையிலே வெச்சுத் தாங்கறாங்களே?’ இப்படி யோசித்த கழுதை, இறுதியாக ஒரு முடிவுக்கு வந்தது. ‘சரி... இனிமே நாமும் அந்த நாய் மாதிரியே நடந்துக்குவோம். அதுக்குப் பிறகாவது நமக்கும் அந்த மரியாதை கிடைக்குதா பார்க்கலாம்!’

முதலாளி எங்கோ வெளியே சுற்றிவிட்டுக் களைப்போடு வீடு திரும்பினார். இந்தக் கழுதை அவரிடம் ஓடியது. முன்னங்கால்களை அவர் தோள் மீது தூக்கிப் போட்டது. நடுங்கிப் போனார் முதலாளி. விலகி ஓடினார். கழுதை அவர் பின்னாலேயே ஓடி, நாய் மாதிரி தன் வாலை ஆட்டிக் கொண்டே அவரைச் சுற்றிச் சுற்றி வந்தது. உள்ளே ஓடினார். கழுதை விடவில்லை. உள்ளே ஓடி அங்கே இருந்த மேஜை மீது தாவி ஏறி உட்கார்ந்தது. பொருள்கள் எல்லாம் கீழே விழுந்து சிதறின.

முதலாளி பார்த்தார். ''இந்தக் கழுதைக்கு என்னமோ ஆயிட்டுது!'' என்று முனகிக் கொண்டே ஓடிப் போய் ஒரு பெரிய கயிறு கொண்டு வந்தார். கழுதையின் கால்களையும் கழுத்தையும் சேர்த்துக் கட்டினார். கொல்லைப் புறத்துக்கு இழுத்துப் போய் தள்ளி விட்டார். சாப்பாடு எதுவும் கொடுக்காமல் பட்டினி போட்டார்.

இப்போது அந்தக் கழுதை யோசித்ததாம்: 'இந்த மனிதனுக்கு என்ன ஆயிற்று?'

இயல்பு மாறினால் இதுதான் நிலைமை. இயற்கையின் படைப்புகள் பாதை மாறிப் போகக் கூடாது. இது ஆன்மிகத்தில் ஒரு முக்கியமான பாடம்.

ஆகவே, இன்றைய மனிதர்கள் முக்கியமாகத் தெரிந்து கொள்ள வேண்டியது: தாங்கள் எப்போதும் மனிதர்களாக நடந்து கொள்ள வேண்டும் என்பதுதான்!

## கரடிகள் சொல்லும் உண்மை!






இரண்டு நண்பர்கள் ஒரு காட்டில் நடந்து போய்க் கொண்டிருக்கிறார்கள். எதிரே திடீரென்று ஒரு கரடி நடந்து வந்து கொண்டிருக்கிறது.

''இப்ப என்னடா பண்றது?'' என்றான் ஒருத்தன்.

''எப்படியாவது தப்பிக்கணும்!'' என்றான் இன்னொருத்தன்.

ஒருவன் பக்கத்தில் இருந்த மரத்தைப் பார்த்தான். கிடுகிடுவென்று அதில் ஏறி உச்சியில் போய் உட்கார்ந்து கொண்டான்.

இன்னொருவன், அருகே தெரிந்த குகை ஒன்றில் ஓடி ஒளிந்து கொண்டான்.

கரடி வந்தது. மரத்தடியில் நின்று கொண்டது.

குகைக்குள் ஓடியவன் இரண்டு நிமிடங்கள் கழித்து வெளியே வந்து எட்டிப் பார்த்தான்.

கரடி கண்ணில் பட்டது. உடனே உள்ளே போய்விட்டான்.

இரண்டு நிமிடங்கள் கழிந்தன. மறுபடி வந்து எட்டிப் பார்த்தான். உடனே உள்ளே போய் விட்டான்.

இப்படியே தொடர்ந்து செய்து கொண்டிருந்தான்.

*மர உச்சியில் இருந்தவன் இதைத் தொடர்ந்து கவனித்துவிட்டு, அங்கே இருந்து கத்தினான்: ''ஏய்... முட்டாள்... எதுக்காக இப்படி அடிக்கடி வந்து வெளியே தலையை நீட்டுறே? பேசாம உள்ளேயே இருக்க வேண்டியதுதானே?''*

*இதற்கு அவன் சொன்னான்: ''உள்ளேயும் ஒரு கரடி இருக்கிறது!''*

*நண்பர்களே! இது ஒரு வேடிக்கைக் கதை.*

*அந்த இரண்டு கரடிகளுமே உண்மையில் கரடிகள் அல்ல.*

*அவை... அச்சத்தின் அடையாளங்கள்.*

*அந்த இரண்டு நண்பர்கள் யார் தெரியுமா?*

*ஒருவர் 'கடவுள் உண்டு' என்று சொல்கிறவர்; இன்னொருவர் 'கடவுள் இல்லை' என்று சொல்கிறவர்.*

*உண்டு என்பதில் உறுதியாக இருக்கிறவர்களும் பயப்படத் தேவை இல்லை; இல்லை என்பதில் உறுதியாக இருப்பவர்களும் பயப்படத் தேவையில்லை!*

*ஆனால், இன்றைக்கு பயப்படாத மனிதர்கள் யாருமே இல்லை!*

*ஒரு ஞானியிடம் கேட்டார்கள். ''கடவுள் எப்போதும் நம்முடன் இருக்கிறார் என்பதை ஏன் எல்லோரும் ஏற்க மறுக்கிறார்கள்?''*

*ஞானி சொன்னார்: ''எல்லாம் ஒரு பாதுகாப்புக்காகத் தான்!''*

*''என்ன சொல்கிறீர்கள்... புரியவில்லையே!''*

*''விவரமாகச் சொல்கிறேன்... கடவுள் தன்னுடனே இருக்கிறார் என்று நம்பினால், அவனால் எந்தக் குற்றமும் செய்ய முடியாது. ஒரு நல்லவன் உங்கள் கூடவே இருக்கிறான் என்பதை உங்களால் சகித்துக் கொள்ள முடியுமா?*

*இதை ஈடுகட்டுவதற்காகவேதான் உருவ வழிபாடு வந்தது! நம் உள்ளே இருக்கிற கடவுளைத் தூக்கி வெளியே வைத்துவிட்டு, குற்றங்கள் பல புரிந்து, அதற்கு ஈடாக வேண்டுதல், பாவ மன்னிப்பு, கொண்டாடுதல் - இப்படி சௌகரியமாகப் பல காரியங்களைச் செய்து... ஒரு பொய் சக்தியைத் தேடிக் கொள்வது எவ்வளவு எளிது?''*

## கதவைத் திறக்க முடிந்ததா?

*'எ ல்லாம் என்னால்தான் நடக்கிறது!' என்று மனிதன் நினைத்துக் கொண்டிருக்கிறான். ஆனால், இவன் இல்லாமலே எல்லாம் நடந்து கொண்டிருக்கிறது.*

*இந்த உண்மையைப் புரிந்து கொள்வதுதான் ஆன்மிகம்.*

*ஒரு மனநோய் மருத்துவமனை. ஏராளமானவர்கள் அங்கு சிகிச்சைக்காகச் சேர்க்கப்பட்டிருந்தார்கள். எட்டுப் பேர் மட்டும் அவர்களின் மத்தியில் கொஞ்சம் தெளிந்தவர்களாகத் தெரிந்தார்கள். ஆனாலும் முற்றிலும் குணமாகவில்லை!*



*தலைமை மருத்துவர் யோசித்தார்.*

*அந்த எட்டுப் பேருக்கும் ஒரு சோதனை வைப் போம்... அதில் தேறியவர்களை மட்டும் வீட்டுக்கு அனுப்பி விடலாம் என்று முடிவு செய்தார்.*

*என்ன சோதனை தெரியுமா?*

*ஒரு நீளமான சுவர் அங்கே இருந்தது. அதில் 'பெயிண்ட்'டால் அழகான கதவு மாதிரி வரைய வேண்டும்.*

*அதற்கென சிறந்த ஓவியர் ஒருவரை அங்கே வரவழைத்தார். ''பார்த்தால் நிஜக் கதவு மாதிரியே தெரிய வேண்டும். வரையுங்கள்'' என்றார்.*

*அவரும் அப்படியே வரைந்து வண்ணம் பூசிக் கொடுத்தார்.*

*மறு நாள் அந்த எட்டு மன நோயாளிகளையும் அங்கே அழைத்துக் கொண்டு வந்தார். ''நண்பர்களே! அந்தக் கதவைத் திறந்து காட்டுங்கள், பார்க்கலாம்'' என்றார்.*

*ஏழு பேர் அதன் மீது முட்டி மோதி, அதைத் திறக்க முயன்றார்கள்.*

*ஒருவர் மட்டும் சிரித்துக் கொண்டே ஒரு மூலை யில் உட்கார்ந்திருந்தார். 'இவர் பரவாயில்லை!' என்று நினைத்த டாக்டர் அவரிடம் போனார்.*

*''ஏன் சிரிக்கிறீர்கள்?'' என்று கேட்டார்.*

*''பாவம்... அவர்கள் அநாவசியமாக அங்கே முட்டி மோதிக் கொண்டு கிடக்கிறார்கள்!''*

*''ஏன்... அதில் என்ன தவறு?''*

*''அவர்களால் அந்தக் கதவைத் திறக்க முடியாது!''*

*''ஏன்?''*

*''அவர்கள் ஏழு பேரும் முட்டாள்கள்!''*

*''இருக்கட்டுமே... அதனால் என்ன? தொடர்ந்து முயற்சி செய்தால் முடியாதா?*

*''நிச்சயமாக முடியாது!''*

"எப்படி அவ்வளவு உறுதியாகச் சொல்றீங்க?"

"அந்தக் கதவோட சாவி என் கையில் இருக்கும் போது அவர்களால் எப்படி அந்தக் கதவைத் திறக்க முடியும்?" என்றான் சிரித்துக் கொண்டே!

அவன் கையில் இருப்பது டாக்டரின் கார் சாவி. நண்பர்களே! ஆணவத்துக்குத் தீனி போடாதீர்கள்.

அது, நமது ஆன்மிகப் பயணத்தின் வேகத்தைக் குறைக்கும்!

## பல் இல்லாத பக்தர்கள்...!






ஒ ரு பெரிய மனிதர். பக்தி மான். அவருக்குப் பல் வலி. வேலைக்காரனைக் கூப்பிட்டார்.

"நீ உடனே போய் பல் வைத்தியர் ஒருவரை அழைத்து வா!" என்றார்.

பல் வைத்தியர் வந்து சேர்ந்தார். இவர் பல்லைக் காட்டினார். சோதித்துப் பார்த்து விட்டு அவர் சொன்னார்: "இந்தப் பல்லை எடுத்துடறதுதான் நல்லது!"

"சரி... எடுத்துடுங்க!" என்றார் இவர்.

இந்த நேரத்தில் வாசல் பக்கம் யாரோ வருவது தெரிந்தது. பார்த்தார். அவர் அடுத்த ஊரைச் சேர்ந்த இன்னொரு பெரிய மனிதர். வேறொரு கடவுளின் பக்தர் அவர். உடனே இவர், ஒரு 'ஐடியா' பண்ணினார்.

"வைத்தியரே... நீங்க கொஞ்ச நேரம் அடுத்த அறையில் போய் இருந்துக்கோங்க. நான் கூப்பிடும் போது வரலாம். எடுக்க வேண்டிய பல் இதுதான்... பார்த்துக்கோங்க!"

அவரும் "சரி" என்று சொல்லிவிட்டு, அடுத்த அறைக்குள் சென்று விட்டார்.

அடுத்த ஊர் பெரிய மனிதர் உள்ளே வந்தார். இருவரும் பேச ஆரம்பித்தார்கள்.

"உங்கள் கடவுளிடம், நீங்க வெச்சிருக்கிற பக்தியை விட, எங்கள் கடவுள் மேலே நான் வெச்சிருக்கிற பக்தி அதிகம்!" என்றார் இவர்.

"எப்படி சொல்றீங்க...?" என்றார் அவர்.

"நீங்க, உங்க கடவுளுக்கு என்ன காணிக்கை செலுத்தறீங்க?"

"முடி காணிக்கை செலுத்துவோம்!"

"நான் எங்க கடவுளுக்கு என் பல்லையே காணிக்கையா இப்ப செலுத்தப் போறேன்."

''என்ன சொல்றீங்க?''

''கொஞ்சம் பொறுங்க!'' என்று சொல்லிவிட்டு வேலைக்காரனைக் கூப்பிட்டு, ''அவரை அழைத்துக் கொண்டு வா!'' என்றார்.

பல் வைத்தியர் வந்தார்.

''இதோ பாருங்க... என் கடவுளுக்கு என் பல்லையே காணிக்கையா செலுத்த விரும்பறேன். அதனால ஒரு பல்லைப் பிடுங்கி எடுத்துடுங்க!''

பல் வைத்தியர் புரிந்து கொண்டார். அந்தச் சொத்தைப் பல்லைச் சரியாகப் பிடுங்கி எடுத்து விட்டார்.

இதைப் பார்த்த அடுத்த ஊர்ப் பிரமுகருக்கு ஆவேசம் வந்து விட்டது.

''நானும் பக்தியில் உங்களைவிட குறைந்தவன் இல்லை!'' என்று சொல்லிவிட்டு, ''ஐயா வைத்தியரே... அவரு ஒரு பல்லைத்தானே தியாகம் பண்ணினார். நான் என் கடவுளுக்காக இரண்டு பற்களைத் தியாகம் பண்றேன். வாங்க... என்கிட்டே இருந்து இரண்டு பற்களைப் பிடுங்கி எடுத்துடுங்க!'' என்றார்.

வைத்தியர் பார்த்தார். அவருக்கா வலிக்கப் போகிறது? நல்ல பல்லாகப் பார்த்து இரண்டைப் பிடுங்கிப் போட்டு விட்டார். இப்போது பல் இல்லாத அந்த இரண்டு பக்தர்களும் ஒருவரைப் பார்த்து ஒருவர் பெருமையாகச் சிரித்துக் கொண்டிருக்கிறார்கள்.

இவர்களைப் பற்றி நான் என்ன சொல்வது? கடவுளே இவர்களைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருக்கிறார்!

## விதியா காரணம்?






'வி தி என்றால் என்ன?'' என்று கேட்டான் அந்த இளைஞன்.

''இப்படி நடக்க வேண்டும் என்று நாம் எதிர்பார்க்கிறோம். ஆனால், வேறு விதமாக அது நடந்து முடிந்து விடுகிறது. அதைத்தான் விதி என்று சொல்கிறார்கள்!'' என்றார் ஒரு பெரியவர்.

இப்படி அவர்கள் பேசிக் கொண்டிருக்கும்போதே... எதிரே ஓர் ஆள், குதிரைக்கு மருந்து புகட்ட முயன்று கொண்டிருந்தான்.

''அதை கவனி!'' என்றார் பெரியவர்.

இளைஞன் கவனிக்கத் தொடங்கினான். அந்தக் குதிரையை இரண்டு பேர் பிடித்துக் கொள்கிறார்கள். அது ஓடிப் போகாமல் இருக்க, தூணோடு சேர்த்து ஒரு கயிற்றால் கட்டி இருக்கிறார்கள். ஓர் ஆள் அந்தக் குதிரையின் வாயை அகலமாகத் திறந்து பிடித்துக் கொள்கிறான். மருந்து கொடுக்க வேண்டிய ஆள் ஒரு மூங்கில் குழாயோடு அங்கே வருகிறான்.

அந்தக் குழாயின் ஒரு முனை சற்றுச் சரிவாகச் சீவப்பட்டிருக்கிறது. குதிரையின் வாயினுள் வைக்க, அது வசதியாக இருக்கும். குழாயின் மறு முனையில் ஒரு துவாரம். குதிரைக்குக் கொடுக்க வேண்டிய மருந்தை வெல்லத்தோடு கலந்து ஒரு பந்து போல உருட்டி அந்த துவாரத்தில் வைக்கிறான்.

இப்போது அந்த மூங்கில் குழாயின் ஒரு முனை குதிரையின் வாயில்; இன்னொரு முனை அந்த மனிதனின் வாயில். இப்போது அந்த மனிதன் மூச்சை உள்ளே இழுத்து பலம் கொண்ட மட்டும் வேகமாக, ''ப்பூ!'' என்று ஊத வேண்டும்.

துப்பாக்கி குண்டு போல அந்த மருந்து உருண்டை, குதிரையின் வயிற்றுக்குள் போக வேண்டும். இதுதான் திட்டம்.

அந்த ஆள் திட்டமிட்டபடி ஒரு முனையில் வாயை வைத்து பலமாக ஊத முயன்ற அதே விநாடியில் குதிரைக்குத் தும்மல் வந்துவிட்டது!

விளைவு? குதிரையின் வயிற்றுக்குள் போக வேண்டிய மருந்து, அவன் வயிற்றுக்குள் போய்ச் சேர்ந்து விட்டது!

அவன் மல்லாக்க விழுந்தான். அந்த ஆசாமியைக் காட்டி இளைஞனிடம் பெரியவர் சொன்னார்: ''பார்த்தாயா? அதுதான் விதி என்பது. நினைத்தது ஒன்று... நடந்தது வேறொன்று!''

''அப்படியானால் விதியை வெல்வது எப்படி?''

''இங்கே அவன் ஏமாந்து போனதற்குக் காரணம், விதி மட்டுமல்ல. கவனக் குறைவும்தான். எனவே, எச்சரிக்கை தேவை!''

''எல்லாம் விதிப்படி நடக்கும் என்று சும்மா இருந்து விடலாமா?''

''கூடாது! வருவதை எதிர்கொள்ளக் கற்றுக் கொள். வாழ்க்கையின் சுவாரஸ்யமே அங்குதான் ஆரம்பம் ஆகிறது!''

## குதிரை விசுவாசிகள்!




ஒ ரு மருத்துவமனை. அங்கே ஒருவர் படுத்திருந்தார். பக்கத்தில் அவர் மகன் நின்று கொண்டிருந்தான். படுத்திருந்தவர், நோயின் கடுமையால் மிகவும் பாதிக்கப் பட்டிருந்தார்.

மருத்துவரும் செவிலியரும் தங்களால் முடிந்த அளவுக்கு ஏதேதோ செய்து கொண்டிருந்தார்கள்.

ஒரு நாள் அடுத்த ஊர்க்காரர் ஒருவர், அவரைப் பார்க்க வந்தார். மகனைத் தனியே அழைத்து, ''தம்பி! உன் அப்பா எனக்கு ஆயிரம் ரூபாய் பணம் தர வேண்டும். அதை இப்போ கொடுத்தா எனக்கு மிகவும் உதவியா இருக்கும்!'' என்றார்.

***“அப்பபடியா?” என்ற மகன் அவரை அழைத்துக் கொண்டு அப்பாவை நெருங்கினான்.***

***“அப்பா...!” என்றான்.***

***அவர் மெள்ள கண் விழித்தார்.***

***“அப்பா! இவருக்கு நீங்க ஆயிரம் ரூபாய் பணம் கொடுக்க வேண்டியிருக்காமே... சரிதானா?”***

***அப்பா மிகவும் சிரமப்பட்டு வாயைத் திறந்து, “ப்பே... ப்பே... பா... பா...” என்றார். பேச்சு வரவில்லை. வந்தவர் பார்த்தார்.***

***“தம்பி... பரவாயில்லை. பாவம்... அவரால் பேசக்கூட முடியவில்லை. நான் வருகிறேன்!” என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்.***

***கொஞ்ச நேரத்தில் இன்னொருவர் வந்தார்.***

***“தம்பி... அப்பாவுக்கு நான் ஐயாயிரம் ரூபாய் தர வேண்டி இருக்கிறது...” என்று ஆரம்பித்தார்.***

***அப்போது படுக்கையில் இருந்தவர் பட்டென்று எழுந்து உட்கார்ந்தார். தெளிவாகப் பேசத் தொடங்கினார்:***

***“ஆமாம்... ஆறு மாசத்துக்கு முன்னாடி அவசரத் தேவைனு வாங்கிக்கிட்டுப் போனீங்களே!” என்றார்.***

***கொஞ்ச நேரத்துக்கு முன்னால் பேச முடியாத அந்த மனிதரால், இப்போது எப்படி இவ்வளவு நன்றாக பேச முடிந்தது?***

***இன்றைக்கு இப்படியும் சில பக்தர்கள் இருக்கிறார்கள். ஆண்டவனே சிபாரிசு பண்ணினாலும், அடுத்தவர்களுக்கு உதவத் தயங்குவார்கள்.***

***ஆனால், ஆண்டவனே ‘வேண்டாம்’ என்று சொன்னாலும் கூட, அடுத்தவர்கள் செய்கிற உதவிகளைப் பெற்றுக் கொள்ளத் தயங்க மாட்டார்கள்.***

***இப்படிப்பட்ட அடியார்களைப் பற்றி என்ன நினைப்பது?***

***இவர்களை எல்லாம் ‘குதிரை விசுவாசிகள்’ என்று சொல்கிறார்கள் பெரியவர்கள்.***

***ஏன் அப்படிச் சொல்கிறார்கள்?***

***புல் என்றால் வாயைத் திறப்பதும், கடிவாளம் என்றால் வாயை மூடிக் கொள்வதும் குதிரைகள்தானே!***

# கடவுள் வேண்டுமா? வேண்டாமா?






அ டர்ந்த காட்டு வழியே அந்த மனிதன் நடந்து போய்க் கொண்டிருந்தான். எதிர்பாராத விதமாக எதிரே ஒரு சிங்கம் வந்து விட்டது. எப்படித் தப்பிப்பது?

மரத்தில் ஏற முடியாது. வேகமாக ஓடவும் முடியாது. என்ன செய்யலாம்? 'இறைவனைக் கூப்பிடுவதுதான் ஒரே வழி!' என்று முடிவு செய்தான்.

அப்படியே அந்த இடத்திலேயே உட்கார்ந்தான். கண்களை மூடினான். கடவுளை வேண்டினான். ''இறைவா! என்னைக் காப்பாற்று!''

அப்படியே உட்கார்ந்திருந்தான். எதுவும் நிகழவில்லை. அவன் நிம்மதியடைந்து மெள்ளக் கண்ணைத் திறந்தான். எதிரே அந்த சிங்கம் - அதுவும் தரையில் தனது கால்களைப் பரப்பிக் கொண்டு கண்களை மூடிக் கொண்டிருந்தது.

இவன் நினைத்துக் கொண்டான்: 'இறைவன் எனது வேண்டுதலுக்குச் செவி சாய்த்து விட்டார். எனது பிரார்த்தனைக்குப் பலன் கிடைத்து விட்டது!'

கொஞ்ச நேரத்தில், சிங்கம் மெதுவாகத் தனது கண்களைத் திறந்தது. மனிதனைப் பார்த்தது.

இவன் சொன்னான்:

''சகோதரரே! வணக்கம். நான் ஆரம்பத்தில் கொஞ்சம் பயந்துதான் போனேன்!''

''ஏன்?'' என்று கேட்டது சிங்கம்.

''உன்னால் என் உயிருக்கு ஆபத்து ஏற்பட்டு விடுமோ என்று பயந்து விட்டேன்... நீ இப்படி கண் மூடி தியானம் செய்வது எனக்கு எவ்வளவு பெரிய ஆறுதலாக இருக்கிறது தெரியுமா?''

சிங்கம் சொன்னது: ''அட... நீ வேறே... உன்னை எனக்கு இரையாக அனுப்பி வைத்த கடவுளுக்கு கண் மூடி நன்றி சொல்லிக் கொண்டிருக்கிறேன்!''

அவ்வளவுதான். அந்த மனிதன் அரக்கப் பரக்க எழுந்தான். வெறி பிடித்த மாதிரி எடுத்தான் ஓட்டம்!

ஒரு பெரியவர் சொல்கிறார்: ''கடவுள் இருக்கிறாரா... இல்லையா என்பதல்ல எனது தர்க்கம். 'கடவுள் வேண்டுமா அல்லது வேண்டாமா?' என்பதே என் அவசரமான கேள்வி. இன்றைய உலகுக்குக் கடவுள் நம்பிக்கை மிகவும் அவசியம் என்பதை நான் உணர்கிறேன்!''

*எல்லாம் சரி... இருந்தாலும் ஓர் உண்மை என்ன தெரியுமா?*

*ஒருவனுக்கு, 'எனக்குள்ளே அவன் இருக்கிறான்!' என்கிற ஞானம் பிறக்கிறபோது... அவனது தன்னம்பிக்கைக்கும், அவன், இறைவன் மீது வைக்கும் நம்பிக்கைக்கும் இடை வெளி இல்லாமல் போய்விடும்!*

*அதன் பிறகு, சிங்கத்தைக் கண்டால் அங்கேயே அமர்ந்து தியானம் பண்ணலாம் என்கிற எண்ணம் வராது!*

## எது நல்ல தண்டனை?




*ஒ ரு மனிதன், இந்த உலகத்தில் நிறையப் பாவங்களைச் செய்தான். அதன் விளைவு _ நரகத்துக்குப் போய்ச் சேர்ந்தான்.*

*அங்கு ஏற்கெனவே, இவனைப் போல பல பேர் போய்ச் சேர்ந்திருந்தார்கள். அங்கு மூன்று விதமான தண்டனைகள்..!*



*''இதோ பார்! இங்கே மூன்று விதமான தண்டனைகள் வழங்கப்படுகின்றன. இதில் ஏதாவது ஒன்றை நீயே தேர்ந் தெடுத்துக் கொள்ளலாம்'' என்று சொன்னார்கள்.*

*இவன் மெள்ள முதல் அறையில் நுழைந்து பார்த்தான். அங்கே எல்லோரும் தலைகீழாக நின்று கொண்டிருந்தார்கள். ''இப்படி ஒரு தண்டனையா?'' என்றவன் விதிர்விதிர்த்துப் போய் வெளியே வந்தான்.*

*அடுத்த அறைக்குள் சென்றான். அங்கே... எல்லோரும் தலையில் பனிக்கட்டியைச் சுமந்தபடி நின்று கொண்டிருந்தார்கள். ''இது அதைவிட மோசம்!''*

மூன்றாவது அறைக்குள் நுழைந்தான். அங்கே... எல்லோரும் ஓய்வாக உட்கார்ந்து காபி சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். 'ஆகா... இதுதான் சரி!' என்று முடிவு செய்து கொண்டான்.

''நான் இந்த அறையிலேயே இருந்து கொள்கிறேன்!'' என்றான்.

''சரி!'' என்று அனுமதியளித்து விட்டுப் போய் விட்டார்கள் உடன் வந்தவர்கள்.

''எங்கே காபி?'' என்றான்.

காபி வந்தது. குடித்தான். நன்றாகவே இருந்தது.

'இது ஒரு தண்டனையா? என்ன... இங்கே எல்லோரும் இவ்வளவு ஏமாளியாக இருக்கிறார்களே!' என்று தனக்குள் சிரித்துக் கொண்டான். அப்போது அந்தக் கொடூரமான குரல் கேட்டது:

''சரி... இப்போது உங்களது காபி இடைவேளை முடிந்தது. இனி, எல்லோரும் தீச்சட்டியை எடுத்துத் தலையில் வைத்துக் கொள்ளுங்கள்!''

பாவம் செய்கிறவர்கள் எந்த வகையிலும் தப்பிக்க முடியாது என்று சொல்லி மனிதர்களைப் பயமுறுத்துவதற்காக இப்படிப்பட்ட கதைகள் சொல்லப்படுகின்றன. பகுத்தறிவு இந்தக் கதைகளை வேடிக்கையாகப் பார்க்கிறது; கேலி பண்ணுகிறது, மூட நம்பிக்கை என்று முத்திரையும் குத்தி விடுகிறது.

அறிவு வளர்ச்சி ஏற்பட ஏற்பட... அறிவுக்குப் புறம்பான சில 'நல்ல கதை'களும் தேவைப்படாமல் போய் விடுகின்றன. உண்மைதான்!

ஆனாலும் நடந்தது என்ன தெரியுமா? ஆத்திகர்கள் சிலர், பயிரை வளர்ப்பதாக எண்ணிக் கொண்டு களைகளையும் வளர்த்து விட்டார்கள்; நாத்திகர்கள் சிலர், களைகளை எடுப்பதாக எண்ணிக் கொண்டு பயிரையும் எடுத்து விட்டார்கள்!

## சாவியை வாங்கினான்... சாப்பிட்டுப் படுத்தான்

தென்கச்சி சுவாமிநாதன்



ஒ ரு நீண்ட சாலை. இரு நண்பர்கள். நடந்து கொண்டு இருக்கிறார்கள். பயணம் தொடர்ந்து கொண்டே இருந்தது. பாதியில் களைத்துப் போனார்கள். பசி வயிற்றைக் கிள்ளியது. வழியில் எதுவும் கிடைக்கவில்லை.

*‘‘என்ன செய்யலாம்?’’ என்றான் ஒருவன்.*

*‘‘வேறு வழியில்லை... கடவுளை வேண்டிக் கொள்ளலாம்!’’ என்றான் இன்னொருவன்.*

*அங்கே தெரிந்த ஒரு கோயிலுக்குள் நுழைந்தார்கள்.*

*‘‘சாமி! எங்க பசியைப் போக்கு!’’ என்று வேண்டிக் கொண்டு வெளியே வந்தார்கள். எதிரே ஒரு பெரியவர் வந்தார். இவர்களின் முகங்களைப் பார்த்தார்.*

*‘‘என்ன... பசியா?’’ என்றார்.*

*‘‘ஆமாம்!’’ என்றார்கள்.*

*‘‘சரி... வாங்க... நான் ஒரு ஏற்பாடு பண்றேன்!’’*

*இருவரும் பின்தொடர்ந்தார்?கள். வழியில் ஒரு கட்டடம். அதில் இரண்டு தனித் தனி அறைகள். பெரியவர் சொன்னார்: ‘‘இதோ பாருங்கள்... நீங்கள் இருவரும் இந்த இரண்டு அறைகளில் இரவு தங்கிக் கொள்ளலாம். உங்கள் பசியைப் போக்கிக் கொள்ளலாம். காலையில் மறுபடி உங்கள் பயணத்தைத் தொடரலாம்!’’*

*இப்படிச் சொல்லிவிட்டு ஆளுக்கு ஒரு சாவியைக் கொடுத்துவிட்டுப் போனார். அவசரமாக அதை வாங்கிக் கொண்டு உள்ளே ஓடினார்கள்.*

*மறு நாள் விடிந்தது. பெரியவர் வந்தார். முதல் அறைக் கதவைத் திறந்தார். அங்கே இருந்தவன் வயிறு நிறையச் சாப்பிட்டுவிட்டு நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தான். அடுத்த அறைக் கதவைத் திறந்தார். அவன் வயிற்றில் ஈரத் துணியைச் சுற்றிக் கொண்டு பசியோடு உட்கார்ந்திருந்தான். அவன் பெரியவரை கோபமாகப் பார்த்தான்.*

*‘‘இப்படி ஏமாற்றி விட்டீர்களே... இது நியாயமா?’’*

*‘‘இருவருக்கும் ஒரே மாதிரி அறைதான் ஒதுக்கினேன்... உன்னோடு வந்தவன் நிம்மதியாகத் தூங்குகிறானே!’’*
*‘‘அது எப்படி?’’*

*‘‘நீ ஏன் சாப்பிடவில்லை?’’*

*‘‘இங்கே சாப்பிட ஏதுமில்லை...’’*

*‘‘அவன் மட்டும் எப்படி சாப்பிட்டான்?’’*

*‘‘தெரியலையே...’’*

*‘‘வா... கேட்போம்!’’ அவனிடமே கேட்டார்கள்.*

*அவன் சொன்னான்: ‘‘இங்கே வந்து பார்த்தேன்... சமையலுக்கு வேண்டிய எல்லாம் இருந்தது. சமைத் தேன். சாப்பிட்டேன்!’’*

*‘‘கேட்டாயா? உனது அறையிலும் எல்லாம் இருந்தன. நீ சமைக்கவில்லை... ஆகவே சாப்பிடவில்லை!’’*

*‘‘ஹி! ஹி! நான் சாப்பாடு ரெடியா இருக்கும்னு பார்த்தேன்!’’ என்று சொல்லி வயிற்றைத் தடவிக் கொண்டான். பெரியவர் சொன்னார்: ‘‘மனிதர்களே! உங்களிடம் சாவியைக் கொடுக்க வேண்டியது எனது வேலை. சமைக்க வேண்டியது உங்கள் வேலை!’’ _ சொல்லிவிட்டு அந்தப் பெரியவர் மறைந்து போனார்.*

# ஆசாரன்ய்ன் அபசாரமும்!

தென்கச்சி சுவாமிநாதன்



அ வர் ஆசாரமான ஒரு மனிதர். ‘எதையும் முறையாகச் செய்ய வேண்டும்; சரியாகச் செய்ய வேண் டும்!’ என்று நினைக்கிறவர். இதில் ஏதாவது சிறு தவறு நேர்ந்தாலும், அவருக்குக் கோபம் வந்துவிடும். காலையில் எழுவார். ஆற்றுக்குப் போவார். குளிப்பார். அப்படியே கோயி லுக்குப் போவார். சாமி கும்பிடுவார். வீட்டுக்கு வரு வார். அதற்குப் பிறகுதான் மற்றவர்களிடம் பேசவே ஆரம்பிப்பார். எனவே, இதற்கென்று ஒரு குதிரை வண்டியை வாடகைக்கு ஏற்பாடு செய்திருந்தார்.

வண்டிக்காரனுக்கு அவரது இயல்பு புரியும். ஆகவே, சரியான நேரத்தில் வண்டி வாசலில் வந்து நிற்கும். இவர் தயாராக வாசலில் நின்று கொண்டிருப்பார். ஏறி அமர்ந்ததும் வண்டி புறப்படும். ஆற்றுக்குப் போவார்கள். அதன் பிறகு ஆலயத்துக்குப் போவார்கள். பிறகு வீட்டுக்கு வருவார்கள். இவர் இறங்கிக் கொள்வார். வண்டிக்கு உரிய வாடகைப் பணத்தைக் கொடுப்பார். அவன் வாங்கிக் கொண்டு போய்விடுவான். இது வழக்கமாக நடக்கிற செயல்.

அன்றைக்கும் அப்படித்தான் புறப்பட்டார்கள். ஆற்றுக்குப் போனார்கள். அவர் குளித்துவிட்டு ஈர உடையோடு கரையேறி வந்தார். வண்டியில் ஏறி அமரும் நேரம், அது நடந்து விட்டது! வண்டிக்காரன் உடல் அவர் மீது லேசாகப் பட்டு விட்டது. அவ்வளவுதான். அவர் துடித்துப் போனார்.

‘‘அபசாரம்... அபசாரம்!’’ என்று கத்திக் கொண்டே ஆற்றுக்கு ஓடினார். மறுபடி குளித்துவிட்டு வந்தார். வண்டியில் ஏறி உட்கார்ந்தார். வண்டிக்காரனைத் திட்ட ஆரம்பித்தார். ஆலயத்துக்கு வரும் வரை திட்டிக் கொண்டே வந்தார். அவன் வாய் பேசவில்லை. கோயிலுக்குப் போய் சாமி கும்பிட்டு விட்டு வந்தார். மறுபடி வண்டி புறப்பட்டது. இவர் திட்ட ஆரம்பித்தார்.

வீடு வரும் வரை திட்டினார். அவரது இயல்பு அவனுக்குத் தெரியும். ஆகவே, மௌனமாகவே வந்தான். வண்டியை விட்டு இறங்கியதும் வாடகைப் பணத்தைக் கொடுத்தார். அவன் அதை வாங்கிக் கொண்டு அங்கேயே நின்றான்... அவருக்குக் கோபம் அதிகமாயிற்று.

‘‘இது போதாதா? இன்னும் என்ன வேணும் உனக்கு?’’ - கத்தினார்.

அவன் மெள்ள வாய் திறந்தான். ‘‘ஐயா! அவசரத்துலே என் மேல்துண்டை எடுத்து உங்க தோள் மேலே போட்டுட்டிருக்கீங்க... அதை கொடுத்தீங்கன்னா... நான் போயிடுவேன்!’’

இந்த நேரத்தில் ஆகாயத்தில் இருந்து ஒரு குரல்...

‘‘ஏ! மனிதர்களே! உள்ளும் புறமும் அன்பாக இருங்கள். அதுதான் உண்மையான ஆன்மிகம். உள்ளே அன்பு மயமாக இருக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டு, வெளியே கட்டுப்பாடுகளை ஏற்படுத்திக் கொள்ளாதீர்கள். அப்புறம்... உள்ளே இருக்கிற அன்புக்கும் அர்த்தம் இல்லாமல் போய்விடும்!’’

# ‘இறைவனைப் பார்த்தாயா?’






ஒ ரு மனிதன். அவனுக்குக் கடவுளைப் பார்க்க வேண்டும் என்று ஆசை. அதற்கு என்ன வழி என்று ஒரு பெரியவரைப் பார்த்துக் கேட்டான். அவர் சொன்னார்:

‘‘காட்சிகளைப் பார்க்க வேண்டும் என்றால் கண்களைத் திறக்க வேண்டும். கடவுளைப் பார்க்க வேண்டும் என்றால் கண்களை மூடிக் கொள்ள வேண்டும்!’’

அவன் காட்டுக்குப் போனான். ஒரு மரத்தடியில் உட்கார்ந்தான். கண்களை மூடிக் கொண்டான். ‘‘கடவுளே! உன் குரலைக் கேட்க வேண்டும்!’’ என்றான்.

காத்திருந்தான். அவனிடம் கடவுள் பேசவில்லை. ‘‘இறைவா, என்னுடன் கொஞ்சம் பேச மாட்டாயா?’’ அப்போதும் ஒன்றும் நடக்கவில்லை. ‘‘உன்னைப் பார்க்கவே முடியாதா?’’

காத்திருந்தான். எதுவும் நிகழவில்லை. ‘‘சரி! ஒரு முறை என்னைத் தொட்டு விட்டாவது போயேன்... அதுகூட முடியாதா உன்னால்?’’ அப்போதும் அமைதி!

இறுதியாக அவன் ஒரு முடிவுக்கு வந்தான். ‘இறைவன் இல்லை!’ இந்த முடிவோடு எழுந்தான்.

அப்போது அந்தப் பெரியவர் மறுபடியும் அந்த வழியாக வந்தார். ‘‘என்ன தம்பி! கடவுளைக் கண்டாயா?’’

‘‘இல்லை!’’

‘‘நான் பார்த்தேனே...’’

‘‘என்ன பார்த்தீங்க?’’

‘‘கடவுளின் குரலைக் கேட்டேன்... கடவுள் உன்கிட்டே பேசியதைக் கேட்டேன்... கடவுளைப் பார்த்தேன்... கடவுள் உன்னைத் தொட்டதைப் பார்த்தேன்!’’

‘‘நான் பார்க்கலையே?’’

‘‘உனக்கு புத்திசாலித்தனம் போதாது!’’

‘‘என்ன சொல்றீங்க?’’

‘‘கடவுள் குரலைக் கேக்கணும்னு நீ ஆசைப்பட்டப்போ... நீ எந்த மரத்தின் அடியில் உட்கார்ந்திருந்தியோ... அதே மரத்தின் உச்சிக் கிளையில் ஒரு குயில் அழகாகக் கூவியது! கடவுள் உன்கிட்டே பேசணும்னு எதிர்பார்த்தப்போ உச்சியிலிருந்து ஓர் இடியோசை கேட்டது! கடவுளைப் பார்க்க வேண்டும் என்று நீ நினைத்தபோது, வானத்தில் ஓர் அழகான வானவில் தெரிந்தது! கடவுள் உன்னைத் தொட வேண்டும் என்று

நீ விரும்பியபோது ஒரு வண்ணத்துப்பூச்சி பறந்து வந்து உன் தோளில் அமர்ந்தது. இதையெல்லாம் நீ கவனிக்கத் தவறி விட்டாய்!''

''அதற்கு நீங்கள்தான் காரணம்!''

''என்ன சொல்கிறாய்?''

''நீங்கள்தானே என்னைக் கண்களை மூடிக் கொள்ளச் சொன்னீர்கள்!''

''அவசரப்பட்டுச் சொல்லி விட்டேன்... இப்போது நானே ஓர் உண்மையைப் புரிந்து கொண்டேன். நான் உனக்குச் செய்த உபதேசத்தில் ஒரு சின்னத் திருத்தம்!''

''என்ன...?''

''கடவுளை உணர விரும்புபவர்கள், கண்களை மூடிக் கொள்ளலாம். கடவுளைப் பார்க்க விரும்புபவர்கள் கண்களைத் திறந்து வைக்க வேண்டும்!''

''அப்படியென்றால்...?''

''இயற்கையின் மொழி புரியாதவர்களுக்கு, இறைவனின் மொழி புரியாது! இதுதாம்பா விஷயம்!'' _ சொல்லிவிட்டு நடக்க ஆரம்பித்தார் அந்தப் பெரியவர்.






தென்கச்சி சுவாமிநாதன்



ஒ ரு பழங்கால கிராமத்தில், ராம நாடகம் நடந்து கொண்டிருக்கிறது. நடுத்தெருவில் நாடகக் கொட்டகை.

வீதியெல்லாம் மக்கள் உட்கார்ந்து விடிய விடிய நாடகம் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். கதாபாத்திரங்கள் மேடையில் கம்பீரமாக வந்து போய்க் கொண்டிருக்கிறார்கள். கிராமத்து ஆசாமிகளே வேடம் போட்டு, நடத்துகிற நாடகம் அது.

அதில் ராவணன் வேடம் போட்ட இளைஞனும், சீதை வேடம் போட்ட பெண்ணும் உண்மையிலேயே காதலர்கள். நாடகத்துக்காக அப்படி நடிக்க வேண்டிய சூழ்நிலை. இந்த இருவரும் நிஜ வாழ்க்கையில் காதலர்கள் என்கிற விவரம், நாடக நிர்வாகிகளுக்குத் தெரியாது.

நாடகம் தொடர்கிறது. சீதையின் சுயம்வரக் காட்சி. சிவதனுசு என்கிற வில்லை ஒடிப்பவர்களுக்குச் சீதையை மணமுடிக்க வேண்டும். இந்தச் சுயம்வரத்துக்காக இளவரசர்கள் பலரும் வந்திருக்கிறார்கள். ராவணனும் வந்திருக்கிறான். வரிசையாக பல இளவரசர்கள் தோற்றுப் போகிறார்கள். இப்போது ராவணன் வர வேண்டிய தருணம். எழுந்து நிற்கிறான். நாடகம் பார்த்துக் கொண்டிருந்த மக்கள் அஞ்சுகிறார்கள். 'எங்கே இவன் வில்லை ஒடித்து விடுவானோ!' என்ற பயம் அவர்களுக்கு. ஆகவே அவர்கள், அவனைப் பார்த்து, ''ராவணா! உடனே ஓடு இலங்கைக்கு! இலங்கை தீப்பற்றி எரிகிறது!'' என்று கத்துகிறார்கள்.

ராவணன் அலட்சியமாக அவர்களைப் பார்க்கிறான்: ''இன்று போக மாட்டேன்!'' என்று சொல்லிக் கொண்டே வில்லை நெருங்குகிறான். அலட்சியமாக அதைத் தூக்கி 'படார்' என்று இரண்டு துண்டாக ஒடித்துப் போட்டு விட்டு, ஜனகரைப் பார்க்கிறான். அவர் பதறிப் போய் நிற்கிறார். நாடகம் திசை மாறிப் போகிறதே என்கிற தடுமாற்றம். ராவணன் ஜனகரைப் பார்த்து, ''எங்கே சீதை? அழைத்து வா இங்கே!'' என்கிறான்.

ஜனகர் ஒரு கணம் திகைத்தவர், மறுகணம் சமாளித்துக் கொண்டு புத்திசாலித்தனமாக, ''எங்கே அரண்மனைச் சேவகன்? இங்கே வா!'' என்றார்.

சேவகன் வந்து நின்றான். அவனைப் பார்த்து ஜனகர் சொன்னார்: ''சேவகா! இங்கே நீ கொண்டு வந்து வைத்தது நம் அரண்மனைக் குழந்தைகள் விளையாடும் வில் அல்லவா? உண்மையான சிவதனுசு எங்கே? உடனே அதைக் கொண்டு வா!''

திரை போடப் பட்டது. நாடக நிர்வாகி ராவணனை விரட்ட ஆரம்பித்தார். அவன் தப்பித்துக் கொல்லைப்புற வழியாக ஓடிப் போனான். வேறு ஒருவனுக்கு வேடம் போட்டு நாடகத்தை முடித்தார்களாம்.

நண்பர்களே! நாடக மேடை என்று சொல்லப்படுகிற இந்த உலகத்தில், நாமும் இப்படித்தான் நடித்துக் கொண்டிருக்கிறோம். இங்கே நமது வேடம் என்ன என்பதை நமக்குப் புரிய வைப்பது ஆன்மிகம்.

போட்டிருக்கிற வேடம் என்ன என்பதைப் புரிந்து கொண்டு நடிக்க வேண்டும். அதுதான் வாழ்வின் வெற்றி!

# 'மாமா... 'செக்' எங்கே?'



தென்கச்சி சுவாமிநாதன்



அவர்கள் இரண்டு பேரும் தினமும் அந்த ஆலயத்துக்கு வருவார்கள். அங்கே உள்ள மண்டபத்தில் உட்காருவார்கள். தங்களது கவலைகளைப் பகிர்ந்து கொள்வார்கள்.

''பட்டணத்துலே படிச்சிட்டிருக்கிற என் பையனுக்கு இதுவரை பத்துக் கடிதம் போட்டுட்டேன். பதிலே வரலை... எப்படி இருக்கானோ தெரியலே!''

''இந்தக் காலத்துப் பசங்க அப்படித்தான். தேவை இருந்தா போடுவாங்க. இல்லேன்னா போட மாட்டாங்க!''

''அப்படியா சொல்றீங்க?''

''இப்ப வேணும்னா ஒரு பந்தயம் வெச்சுக்குவோமா? உங்க பையனுக்கு நான் ஒரு கடிதம் போடுறேன். அதுக்கு உடனே பதில் வரவழைக் கிறேன். என்ன சொல்றீங்க?''

''அது எப்படி வரும்? முடியாதுங்க. அவன் எழுத மாட்டான்; சோம்பேறி!''

''எழுத வெக்கிறேன்... என்ன சொல்றீங்க?''

''அப்படி செஞ்சுட்டீங்கன்னா உங்களுக்கு நூறு ரூபா கொடுத்துடறேன்!''. இப்படி ஒரு பந்தயத்தோடு அவர்கள் பிரிந்தார்கள். அன்றைக்கே இவர் அந்தப் பையனுக்கு ஒரு கடிதம் எழுதினார். அடுத்த மூன்றாவது நாள் அவனிடமிருந்து ஒரு பதில் கடிதம் பறந்து வந்தது! அதை எடுத்துக் கொண்டு வந்தார்.

''இதோ பாருங்கள்... உங்கள் மகன் எழுதிய கடிதம்!''

அந்த அப்பாவுக்கு ஆச்சரியம். தன் கண்களையே நம்ப முடியவில்லை. ''எப்படி இது...?''

''எழுத வேண்டிய முறையில் எழுதினேன். பதில் வந்தது!''

''என்ன எழுதினீர்கள்?''

''அதுவா... 'தம்பி! நீ நல்லா படிக்கிறதா உங்கப்பா சொல்றார். பதில் எழுதக்கூட உனக்கு நேரம் இல்லையாம். பரவாயில்லை... இந்தக் கடிதத்துக்குக் கூட நீ பதில் எழுத வேண்டாம். உன் அப்பா சொல்படி நான் இந்தக் கடிதத்துடன் உன் செலவுக்காக ஆயிரம் ரூபாய்க்கான காசோலை அனுப்பியிருக்கிறேன். பெற்றுக் கொள்ளவும்!' அப்படினு கடிதம் போட்டேன். உடனே பதில் கடிதம் பறந்து வந்தது. 'மாமா! உங்க கடிதம் வந்தது. அதில் 'செக்' இணைத்து அனுப்ப மறந்து விட்டீர்கள்!' என்று எழுதி இருக்கிறான். இதோ அந்தக் கடிதம்!'' _ மகனின் கடிதத்தை அப்பாவிடம் நீட்டினார் இவர். அப்பா யோசிக்க ஆரம்பித்தார். பந்தயப் பணம் நூறு ரூபாயை எடுத்து நீட்டினார். அவர் வாங்க மறுத்தார். ''இதெல்லாம் ஒண்ணும் வேணாம். ஓர் உண்மையை உங்க ளுக்குப் புரிய வைக்கிறதுக்காகத்தான் சும்மா அப்படி பந்தயம் கட்டினேன்!''

''என்ன உண்மை அது?''

''மனித மனம் எதையும் இழக்க விரும்புவ தில்லை. ஆனால், நாம் இழப்பதற்குக் கற்றுக் கொள்ள வேண்டும். அதற்காகத்தான் கோயிலுக்கு வருகிறோம்!''

''என்ன சொல்கிறீர்கள்?''

''அதோ பாருங்கள்... கோயில் சுவரில் என்ன எழுதி இருக்கிறது?''

அவர் பார்த்தார். அங்கே எழுதப்பட்டிருந்த வாசகம்: 'ஆசைகளை விட்டவனே ஆண்டவனைத் தொட்டவன்!'. நண்பர்களே! இன்றைய பக்தர்களுக்கு ஆலயங்களை நெருங்கத் தெரிகிறது; ஆண்டவனை நெருங்கத் தெரிவதில்லை!

## வழிகாட்டியும் நிபந்தனையும்!

தென்கச்சி சுவாமிநாதன்



அ வர் ஒரு சுற்றுலாப் பிரியர். ஊர் ஊராகச் சுற்றிக் கொண்டிருப்பார். உடன் எவரையும் அழைத்துச் செல்வ தில்லை. தனியாகவே போவார்... வருவார்.

ஒரு முறை அவர், ஒரு வெளிநாட்டுக்குச் சென்றார். அங்கு ஓட்டல் ஒன்றில் அறை எடுத்துக் கொண்டார். குளித்துவிட்டுப் புறப்பட்டார்.

வழக்கம்போல முதலில் ஒரு சுற்றுலா அலுவலகத்துக்குப் போனார். அவர்கள் வெளியிடும் குறிப்புப் புத்தகம் ஒன்றை வாங்கிக் கொண்டார்.

அதைப் புரட்டத் தொடங்கும் முன்...

''ஐயா... வணக்கம்!'' என்று ஒரு குரல்.

இவர் நிமிர்ந்து பார்த்தார். எதிரே ஒருத்தர் நின்று கொண்டிருந்தார்.

''ஊர் சுற்றிப் பார்க்கணுமா?''

''ஆமாம்!''

''வாங்க... நான் சுற்றிக் காட்டுகிறேன்.''

''நீங்க..?''

''நான் ஒரு வழிகாட்டி... டூரிஸ்ட் கைடு!''

''அப்படியா... சரி, வாங்க!''

''ஆனால், ஒரு நிபந்தனை...!''

''என்ன?''

''நான் இந்த ஊரை முழுமையாக உங்களுக்குச் சுற் றிக் காட்டுகிறேன். ஆனால், நீங்கள் இந்தக் குறிப்புப் புத்தகத்தை உபயோகப்படுத்தக் கூடாது.''

“ஏன்?”

“ஏற்கெனவே அதை நான் படித்து விட்டேன். நானே உங்களுக்கு விளக்கமாகச் சொல்வேன். எனவே, நீங்கள் அதைப் புரட்ட வேண்டிய அவசியமில்லை!”

“சரி... அப்படியே ஆகட்டும்!”

வழிகாட்டி இவரை அழைத்துக் கொண்டு போனான். பார்க்க வேண்டிய இடங்கள் எல்லா வற்றையும் சுற்றிக் காட்டினான். அதற்காக ஐந்நூறு ரூபாய் கட்டணம் பெற்றுக் கொண்டு போனான்.

இவர் அறைக்கு வந்தார். இரவு உணவு முடிந்த பிறகு சாவகாசமாக அந்தப் புத்தகத்தை எடுத்தார். புரட்டினார்.

“அந்த வழிகாட்டி, ஏன் அப்படி ஒரு நிபந்தனை போட்டான்? புத்தகத்தில் உள்ள விவரங்களைத்தானே அவனும் சொன்னான். அப்புறம் ஏன்..?”

_ இப்படி யோசித்தபடி கடைசிப் பக்கத்தைப் புரட்டி னார்.

அதில் இப்படி எழுதப் பட்டிருந்தது:

‘டூரிஸ்ட் கைடுக்குக் கட்டணமாக ஐம்பது ரூபாய் தந்தால் போதுமானது!’

நண்பர்களே... ஆன்மிக வழிகாட்டிகளிலும்கூட இப்படிப்பட்ட ஆபத்தானவர்கள் உண்டு!

அற நூல்களை நீங்கள் சரியாகப் படித்து விட்டால், அதன் பிறகு ஆண்டவனை அடையாளம் காட்ட இன்னொருவர் உங்களுக்குத் தேவைப்பட மாட்டார்!

## நிலாவைக் காப்பாற்றிய கயிறு ஆசாமி!






நி லா வெளிச்சத்தில் ஒரு மனிதன் நடந்து கொண்டிருந்தான். வழியில் ஒரு பெரிய கிணறு. இவன் அந்தக் கிணற்றின் அருகே போய் உள்ளே எட்டிப் பார்த்தான். ஆழமான கிணறு. அதிகமான தண்ணீர். கிணற்று நீரில் நிலா தெரிந்தது.

“ஐயோ... பாவம்... ஆகாயத்துலே இருந்த நிலா அநியாயமா இப்படி இந்தக் கிணற்றுக்குள்ளே விழுந்துட்டுதே!” என்று அந்த நிலாவுக்காகப் பரிதாபப்பட்டான். கூடவே, “கவலைப்படாதே... உன்னை நான் எப்படியாவது காப்பாற்றுகிறேன்!” என்றான்.

உடனே பக்கத்தில் இருந்த ஊருக்குள் ஓடினான். ஒரு நீண்ட கயிற்றைக் கொண்டு வந்தான். அதைக் கிணற்றுக்குள் விட்டான். உள்ளே தெரிந்த நிலாவைப் பார்த்து உரக்கக் கூவினான்.

“இந்த கயித்தைக் கெட்டியா பிடிச்சிக்கோ... அப்படியே உன்னை இழுத்து வெளியே கொண்டு வந்துடறேன்!”

உள்ளே விட்ட கயிற்றை இழுத்துப் பார்த்தான். உள்ளே எங்கேயோ ஒரு கல் இடுக்கில் அது சிக்கிக் கொண்டு விட்டது. எனவே, இழுக்க முடியவில்லை.

'ஆகா... நிலா இப்போது இந்தக் கயிற்றைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு விட்டது!' என்று இவன் நினைத்துக் கொண்டான்.

''அப்படித்தான்... விடாதே... பிடிச்சுக்கோ...'' என்று சொல்லிக் கொண்டே அந்த நீளமான கயிற்றின் மறு முனையை இடுப்பில் சுற்றிக் கொண்டான்.

இப்போது மூச்சுக்கட்டிக் கொண்டு கயிறை பலமாக இழுத்தான். கல்லில் சிக்கியிருந்த கயிறு திடீரென்று விடுபட்டது. இவன் அப்படியே மல்லாக்க விழுந்தான். மூச்சு வாங்கியது. ஆகாயத்தில் பார்த்தான்.

அங்கே- நிலா தெரிந்தது. அதைப் பார்த்துச் சொன்னான்: ''நல்லவேளை! சரியான நேரத்துல நான் வந்து உன்னைக் காப்பாத்தினதால உயிர் பிழைச்சே! இல்லேன்னா உன் கதி என்ன ஆகி இருக்கும்? நினைச்சிப் பாரு!''

இன்றைய மனிதர்கள் இப்படித் தான் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். எல்லாம் தன்னால்தான் நடக்கிறது என்று இவன் நினைத்துக் கொண்டிருக்கிறான். ஆனால், இவன் இல்லாமலே எல்லாம் நடந்து கொண்டிருக்கிறது.

அகந்தை இருக்கிற வரையில் ஆண்டவனை நெருங்க முடியாது என்கிறார்கள் பெரியோர்கள். உண்மைதான்.

ஒரு பொன்மொழி இப்படிச் சொல்கிறது: கர்வம் உள்ளவன் கடவுளை இழக்கிறான்; பொறாமை உள்ளவன் நண்பனை இழக்கிறான்; கோபம் உள்ளவன் தன்னையே இழக்கிறான்!

## அண்டங் காக்கா பார்த்தா அதிர்ஷ்டம்?

ஓ ர் ஊரில் ஒரு மன்னன். அவன் ஒரு சோதிடப் பைத்தியம். அடுத்த நாட்டின் மீது படையெடுக்க வேண்டும் என்றால் கூட, முதலில் சோதிடர்களுடன் ஆலோசனை நடத்துவான். அதன் பிறகே படைத் தளபதிகளைக் கூப்பிட்டுப் பேசுவான்.



இப்படிப்பட்ட மன்னன் இவன் என்பதைப் புரிந்து கொண்ட சோதிடர்கள் பலரும் அவனைத் தேடி வர ஆரம்பித்தனர். ஏதாவது சொல்லி விட்டுப் பொன்னும் பொருளும் பெற்றுச் செல்வது வழக்கமாயிற்று. இப்படிப்பட்ட சூழ்நிலையில் ஒரு நாள் சோதிடர் ஒருவர் வந்தார்.

“மன்னா! இரண்டு அண்டங் காக்கைகளை ஒன்றாகப் பார்த்தால் அதிர்ஷ்டம்!” - என்றார்.

அவ்வளவுதான். உடனே அமைச்சரைக் கூப்பிட்டான் மன்னன். “அமைச்சரே! இன்று முதல் உமது வழக்கமான பணிகளையெல்லாம் ஒத்தி வையுங்கள்... இனி உங்களுக்கு ஒரே வேலைதான்!”

“என்ன வேலை மன்னா?”

“எங்காவது இரண்டு அண்டங் காக்கைகள் ஒன்றாக உட்கார்ந்திருப்பதைப் பார்த்தால், உடனே ஓடி வந்து என்னிடம் சொல்ல வேண்டும். அதுதான் உங்கள் வேலை!”

“அப்படியே ஆகட்டும் மன்னா!”

அன்று முதல் அமைச்சர் அண்டங் காக்கைகளைத் தேட ஆரம்பித்தார். மறு நாளே அந்தக் காட்சி கிடைத்தது. அரண்மனை வாசற்புறத்தில் ஒரு மரக்கிளையில் இரண்டு காகங்கள் ஜோடியாக உட்கார்ந்திருந்தன. பார்த்தார் அமைச்சர்.

உடனே ஒரே ஓட்டமாக உள்ளே ஓடினார். “மன்னா! சீக்கிரம் வாருங்கள்... நீங்கள் விரும்பிய அதிர்ஷ்ட தேவதைகள் அங்கே காட்சியளிக்கின்றன!”

மன்னர் விரைந்து வந்து பார்த்தார். ஆனால், அதற்குள் இரண்டில் ஒரு காகம் பறந்து சென்று விட்டது. ஒன்று மட்டும் தனியே இருந்தது. பார்த்தார் மன்னர். அவருக்குக் கடுமையான கோபம்.

“அமைச்சரே! நீங்கள் இரு காகங்களைப் பார்த்துவிட்டு, எனக்கு மட்டும் ஒரு காகத்தைக் காட்டுகிறீர்கள். இதற்கான தண்டனை உமக்குப் பத்து கசையடிகள்!”

அடிவாங்கிய அமைச்சர் சிரித்தார்.

“எதற்காகச் சிரிக்கிறீர்கள்?”

“இரண்டு அண்டங் காக்கைகளைப் பார்த்த அதிர்ஷ்டம் எப்படி இருக்கிறது என்று சற்று நினைத்துப் பார்த்தேன்... சிரிப்பு வந்தது மன்னா!”

பக்தியானது பாதை மாறிப் போகிறபோது, பகுத்தறிவு அதைப் பார்த்துச் சிரிப்பதில் ஆச்சரியம் ஏதுமில்லை!

“சிரிப்பே உனது ஒரே பிரார்த்தனையாக இருக்கட்டும். மகிழ்ச்சியே உனது ஒரே காணிக்கையாக இருக்கட்டும்!” என்கிறார் ஓஷோ.

“வாழ்வை நேசி. சிறிய பொருட்களை நேசிக்கத் தொடங்கு. ஒரு கணத்தைக் கூட தவறவிட்டு விடாதே. மேன்மேலும் மகிழ்ச்சியடையும்போது இறைவன் உன்னிடம் மேன்மேலும் வருவதைக் கண்டுபிடிப்பாய்!”

நண்பர்களே! பகுத்தறிவின் வெளிச்சம் பரவுகிற போது, பக்தியின் பாதை இன்னும் தெளிவாகும்!

## நூலை அறுப்பது கடினமே!

ஒ ரு கணவன்- மனைவி. கல்யாணம் ஆன புதிதில் மகிழ்ச்சியாகத்தான் இருந் தனர். காலப்போக்கில் கருத்து வேறுபாடு வந்தது. அது வளர்ந்தது... முற்றியது.



கடைசியில் நீதிமன்றத்தை நாடினார்கள். விவாகரத்து வேண்டினர். 'இந்த உறவு அறுந்து போக வேண்டியதுதான். வேறு வழி இல்லை!' என்கிற முடிவுக்கு இருவருமே வந்து விட்டார்கள்.

உற்றார், உறவினர்கள் எல்லாம் கவலைப்பட்டார்கள். வேண்டினார்கள்.

''கடவுளே... இவர்களுக்கு நல்ல புத்தியைக் கொடு.''

ஒரு நாள் ஒரு பெரியவர் அவர்களது வீட்டுக்கு வந்தார். அந்தக் கணவனையும் மனைவி யையும் அருகில் அழைத்தார்:

''இப்போது நமக்குள் ஒரு போட்டி. அதில் நீங்கள் ஜெயித்து விட்டால், நானே முன்னின்று உங்களுக்கு விவாகரத்து வாங்கித் தருகிறேன். நான் ஜெயித்து விட்டால், நான் சொல்கிறபடி நீங்கள் கேட்க வேண்டும்!''

''சரி... என்ன போட்டி? அதைச் சொல்லுங்கள்!''

''முதலில் ஒரு மெல்லிய நூல் கொண்டு வாருங்கள். போட்டி என்ன என்பதை அப்புறம் சொல் கிறேன்!''

கொண்டு வந்தார்கள். சுமார் இரண்டு அடி நீளமுள்ள மெல்லிய நூல் அது. பெரியவர் அதை வாங்கிக் கொண்டார்.

''இதோ பாருங்கள்... இப்போது இந்த நூலின் ஒரு முனையை நீங்கள் பிடித்துக் கொள்ளுங்கள். இன்னொரு முனையை நான் பிடித்துக் கொள்கிறேன். நீங்கள் இருவரும் சேர்ந்து இழுத்து, இந்த நூலை அறுத்துவிட வேண்டும். அவ்வளவுதான்!''

''இது ஒரு பெரிய காரியமா?'' என்று சொல்லிக் கொண்டே இருவரும் அவர்களது பக்கம் இழுக்க ஆரம்பித்தார்கள்.

இந்தப் பக்கம் நின்ற பெரியவரோ அவர்கள் இழுக்க இழுக்க அந்தப் பக்கம் நகர்ந்து போய்க் கொண்டே இருந்தார். அப்புறம் எப்படி நூல் அறுபடும்?

அவர்கள் சுற்றிச் சுற்றி வந்தார்கள். இவரும் கூடவே சுற்றிச் சுற்றி வந்தார். இறுதியாக அந்தக் கணவன்- மனைவி தங்களது தோல்வியை ஒப்புக் கொண்டார்கள்...

இப்போது பெரியவர் சொன்னார்: ''இவ்வளவுதான் வாழ்க்கை. விட்டுக் கொடுக்கத் தெரிந்தால், உறவு அறுந்து போகாது!''

வாழ்க்கையின் மகத்துவத்தைக் கண நேரத்தில் புரிந்து கொண்ட கணவனும் மனைவியும் கண்கள் பனிக்க பெரியவரின் காலில் விழுந்தார்கள்.

விட்டுக் கொடுக்கத் தெரிந்தவர்களே, ஆன்மிகப் பாதையில் அடியெடுத்து வைக்க முடியும்!

# அந்த மூன்று நண்பர்கள்!






அரண்மனையிலிருந்து வந்திருக்கிறேன்!'' என்றான் அந்த ஆள்.

''என்ன வேண்டும் உனக்கு?''

''நீதான் வேண்டும்!''

''என்ன சொல்கிறாய்?''

''உன் மீது ஒரு புகார் வந்திருக்கிறது. அது பற்றி மன்னர் விசாரிக்க விரும்புகிறார். நாளைக் காலையில் நீ அரண்மனை விசாரணை மண்டபத்துக்கு வர வேண்டும். இது மன்னர் உத்தரவு!'' _ இப்படிச் சொல்லிவிட்டு அவன் போய் விட்டான்.

இவன் யோசித்தான்: 'நாம எந்தத் தப்பும் செய்யலையே. இருந்தாலும் மன்னர் உத்தரவை மீற முடியுமா?' என்றாலும் தனியே செல்லத் தயங்கினான். என்னுடன் யாராவது வந்து எனக்காக மன்னரிடம் கொஞ்சம் வாதாடினால் தேவலை! என்ன செய்யலாம்? தீவிரமாக யோசித்தான். முக்கியமான மூன்று நண்பர்கள் நினைவுக்கு வந்தார்கள். சரி... அவர்களைக் கேட்டுப் பார்க்கலாம். அந்த மூவரில் ஒருவன் மிகவும் நெருக்கமானவன். அந்த நண்பனிடம் போனான். விவரம் சொன்னான்:

''என்னை விசாரிக்க அரண்மனையிலிருந்து ஓலை வந்திருக்கிறது. எனக்காக வந்து நீ வாதாடணும்!''

''அது என்னால் முடியாத காரியம்!'' என்று சொல்லி விட்டான் அவன்.

இவனுக்கு அதிர்ச்சி! 'இவனே இப்படிச் சொல்லிவிட்டானே!' என்கிற வேதனை. இருந்தாலும் அடுத்த நண்பனைத் தேடிப் போனான். அவனிடம் விவரம் சொன்னான். அவன் என்ன சொன்னான் தெரியுமா?

'வர முடியாது' என்று சொல்லவில்லை. ''வருகிறேன்... ஆனால், அரண்மனை வாசல் வரைதான் வர முடியும். அதைத் தாண்டி என்னால் வர முடியாது!'' என்றான்.

வாசல் வரைக்கும் வந்து என்ன பயன்? எனவே, மூன்றாவது நண்பனிடம் போனான். அவன் அதிக நெருக்கம் இல்லைதான். என்றாலும் விவரம் கேட்டவுடன் எதுவும் சொல்லாமல் உடனே எழுந்து நின்று, ''புறப்படு... போகலாம்!'' என்றான்.

அவன் கடைசிவரை வந்தான். மன்னனிடம் இவனுக்காகப் பரிந்து பேசினான். விடுதலை வாங்கிக் கொடுத்தான்! இப்படி ஒரு கதை உண்டு.

சரி... ஆந்த மூன்று நண்பர்கள் யார் தெரியுமா? முதல் நண்பன்- பணம். இரண்டாவது நண்பன்- சொந்தம். மூன்றாவது நண்பன்- நற்செயல்கள். கடைசி வரையில் நம் கூட வந்து நம்மைக் காப்பாற்றுவது நாம் செய்கிற நல்ல செயல்கள்தாம்! அதைத்தான் புண்ணியம் என்கிறது ஆன்மிகம்.

நம்ம ஆள் ஒருத்தன். ஒரு சிக்கலில் மாட்டிக் கொண்டான். ஒரு சைக்கிளைத் திருடிவிட்டதாக அவன் மீது வழக்கு. ஒரு நண்பனைத் தேடிப் போனான். ''எனக்குச் சாதகமா சாட்சி சொல்லணும்!'' என்று கூப்பிட்டான்.

“வரக் கூடிய நிலையில் நான் இல்லை... என்னை மன்னித்துக் கொள்!” என்றான் அவன்.

“ஏன் வர முடியாது?” என்று கேட்டான் இவன்.

அவன் சொன்னான்: “அதற்கு மூன்று காரணங்கள். முதல் காரணம்- இது வரைக்கும் சாட்சி சொல்லி எனக்குப் பழக்கம் இல்லை. இரண்டாவது, பொய் சாட்சி சொல்றது தப்புனு பெரியவங்க சொல்லியிருக்காங்க! மூன்றாவது, நீ திருடிக்கிட்டுப் போன சைக்கிள்... என்னோடதுதான்!”

## அழுகையா.. ஆனந்தக் கண்ணீரா?






அது ஒரு காடு. அங்கே ஒரு கழுதை வாழ்ந்து வந்தது. ஒரு நாள் ஒரு மரத்தின் அடியில் அந்தக் கழுதை கவலையோடு நின்று கொண் டிருந்தது. அதே மரத்தின் உச்சியில் உட்கார்ந்திருந்த ஒரு குரங்கு இதை கவனித்தது. உடனே கிடுகிடுவென இறங்கிக் கீழே வந்தது. கழுதையைப் பார்த்துக் கேட்டது:

“ஏன் ஒரு மாதிரியா இருக்கிறே?”

“கவலைதான் காரணம்!”

“உனக்கு என்ன கவலை?”

“அதோ... தெரியுது பாரு ஒரு புதர். அங்கே ஒரு சிங்கம் இருக்கு. அந்தப் பக்கமா போறப்ப வர்றப்போ எல்லாம் அது என்கிட்டே வம்பு வளர்க்குது. என் மேலே பாய வருது... என்னைத் தாக்குது!”

“அப்படியா? சரி... இனிமே நீ அதைப் பத்திக் கவலைப் படாதே... நான் உன்னைக் காப்பாத் தறேன்!”

“எனக்கு உன்னை மாதிரி ஒரு துணை கிடைச்சது, நான் செய்த புண்ணியம்!”

அந்த விநாடியே இருவரும் நண்பர்கள் ஆனார்கள். ‘இனிமே நமக்கு பயமில்லே.’

அதற்குப் பிறகு ஒரு நாள்- கழுதையும் குரங்கும் அந்தப் புதர் வழியே போய்க் கொண்டிருந்தபோது... திடீரென்று அந்தச் சிங்கம் எதிரே வந்து நின்றது.

அடுத்த கணம் கழுதையின் மீது பாய்ந்தது. அதே கணம். கூட வந்த குரங்கு ‘குபீர்’ என்று ஒரு மரத்தின் மீது தாவி ஏறி, உச்சிக் கிளைக்குப் போய் உட்கார்ந்து கொண்டு வேடிக்கை பார்க்க ஆரம்பித்தது. கொஞ்ச நேரம் அங்கே கூச்சல்... குழப்பம்! எப்படியோ அந்தக் கழுதை தப்பித்து வந்தது. உடல் முழுக்கக் காயங்கள். மெள்ள நடந்து வந்தது. உச்சியிலிருந்த குரங்கு இறங்கி வந்தது. கழுதை அதை நிமிர்ந்து பார்த்தது...

“என்ன... கடைசியிலே இப்படி பண்ணிட் டியே?”

“என்ன சொல்றே நீ?”

“என்னைக் காப்பாத்துவேன்னு சொல்லிபுட்டு மரத்து மேலே ஏறி உக்கார்ந்துகிட்டியே?”

இதற்கு அந்தக் குரங்கு சொன்ன விளக்கம்: "நீங்க இரண்டு பேரும் சண்டை போடுறதை நான் மேலேயிருந்து கவனிச்சேன். அதுலே உன்னோட சத்தம்தான் அதிகமா இருந்துது. அது நீ சிரிக்கிற மாதிரி எனக்குத் தெரிஞ்சிது. அதனாலே நீதான் ஜெயிச்சிக்கிட்டிருக்கேனு நான் நினைச்சேன்!"

இது ஒரு வேடிக்கைக் கதை. கழுதை கத்துகிற போது அது சிரிக்கிறதா, அழுகிறதா என்பது நமக்குப் புரிவதில்லை.

அது போல, கடவுளைக் கும்பிடுகிறவர்களின் கண்களில் வருவது அழுகையா... ஆனந்தக் கண்ணீரா என்பதும் புரிவதில்லை!

உண்மையாக வழிபட நினைக்கிற வர்கள் அழ வேண்டியதும் இல்லை; சிரிக்க வேண்டியதும் இல்லை! அப்போது தேவை... சத்தமில்லாத மௌனம். அது சுத்தமான அன்பின் பரிமாற்றம். அது ஓர் ஆனந்த அனுபவம்!

## பேய் பயம்!






ஊ ருக்கு வெளியே ஒரு சிறு குடிசை. அது ஒரு பிச்சைக்காரனுக்குச் சொந்தம். அவன் ஓர் அநாதைச் சிறுவனை வளர்த்து வந்தான். அந்தக் குடிசைக்குப் பக்கத்தில் ஒரு சுடுகாடு. ஒரு நாள் அந்தப் பிச்சைக்காரன் குடிசைக்குத் திரும்பி வரும் நேரத்தில், இந்தச் சிறுவன் விவரம் புரியாமல் சுடுகாட்டுப் பக்கம் நடந்து போனதை கவனித்தான்.

ஓடிப் போய் அவனைப் பிடித்துக் கொண்டு வந்தான்: "இதோ பாரப்பா! இரவு வேளையில் நீ அந்தச் சுடுகாட்டுப் பக்கம் எல்லாம் போகக் கூடாது!"

"ஏன்?"

"அங்கே பேய் பிசாசு எல்லாம் இருக்கும். அதெல்லாம் உன்னைப் பார்த்தா பிடிச்சு சாப்பிட்டுடும்!" என்று சொல்லி அந்தச் சிறுவனை பயமுறுத்தி வைத்தான்.

அதன் பிறகு அந்த சிறுவன் சுடுகாட்டுப் பக்கம் போகவே பயந்தான்.

காலம் கடந்தது. சிறுவன் வளர்ந்து இளைஞனானான். அவன் படித்த வாலிபன் என்றாலும், இன்னமும் அவனுக்குள் பேய் பற்றிய பயம் அப்படியே இருந்தது.

ஒரு நாள் பிச்சைக்காரன் அவனைக் கூப்பிட்டு, "மகனே... பக்கத்து ஊருக்குப் போய், படுக்கிற பாய் ஒன்று வாங்கி வா!"

அவன் தயங்கினான். "விடிஞ்சதும் போறேனே..."

"ஏன்?"

“வழியிலே சுடுகாடு இருக்கு... அதைத் தாண்டிப் போக எனக்கு பயமா இருக்கு!”

பிச்சைக்காரன் யோசித்தான். இப்போ என்ன செய்யலாம்? “இங்கே வா!” என்று கூப்பிட்டு அவன் கையில் தாயத்து ஒன்றைக் கறுப்புக் கயிற்றில் கோத்துக் கட்டி விட்டான். “இனிமே பயப்படாதே! பேய்- பிசாசு எல்லாம் உன்னை ஒண்ணும் பண்ண முடியாது. கடவுள் உன்னை அதுகள்கிட்டே இருந்து காப்பாத்துவார்!”

இளைஞனுக்குத் துணிச்சல் வந்தது. புறப்பட்டான். போகும்போது யோசித்தான். ‘இப்ப... நாம பேய்களைப் பாத்துப் பயப்படுறோம். இந்தப் பேயே கடவுளைப் பார்த்து பயப்படும்னா... அந்த கடவுள் எவ்வளவு பெரிய பேயா இருக்கணும்?’ இப்போது அவனுக்குப் பேய் பயத்தைவிட, கடவுள் பயம் அதிகமாகிப் போச்சு!

இரவில் பேய்க்கு பயந்தான். பகலில் கடவுளுக்கு பயந்தான். கடவுளின் தரகர்கள் மாதிரி நடிக்கிற ஆசாமிகளைக் கண்டும் பயந்தான். பிச்சைக்காரனுக்கு விபரீதம் புரிந்தது. மகனை அழைத்துக் கொண்டு சுடுகாட்டுக்குப் போனான். அங்கே ஒன்றும் இல்லை என்ற உண்மையைச் சொன்னான். ஏன் தாயத்து கட்டி விட்டான் என்பதையும் விளக்கினான்.

“இனி அது உனக்குத் தேவை இல்லை!” என்று சொல்லி அதைக் கழற்றி வீசி எறிந்தான்.

பக்தியோடு பயம் வந்து சேர்ந்த கதை இது. இந்த பயத்திலிருந்து இன்னமும் மனித குலம் மீளவில்லை! ஒன்றைப் புரிந்து கொள்ளுங்கள்: ஆண்டவனை அச்சத்தின் வழியாக அடைய முடியாது.

“இந்தக் காலத்தில் பேய்- பிசாசு எல்லாம் சர்வ சாதாரணம்!” என்றார் ஒரு குடும்பத் தலைவர்.

“நீங்க பேயைக் கண்ணால பார்த்திருக்கீங்களா?” என்று கேட்டார்கள் அவரிடம்.

அவர் சொன்னார்: “என்ன... இப்படிக் கேட்கிறீங்க? நான் அதுகூடத்தானே முப்பது வருஷமா குடும்பம் நடத்திட்டு வர்றேன்!”

## மலைக்க வைத்த பிச்சைப் பாத்திரம்!


தென்கச்சி சுவாமிநாதன்



அவன் ஒரு மன்னன். தனது நாட்டின் எல்லையை விரிவுபடுத்திக் கொண்டே போக வேண்டும் என்பது அவனது ஆசை. அதன் முதல் கட்டமாகப் பக்கத்து நாட்டுடன் போர் தொடுக்க வேண்டும் என்பது அவன் திட்டம். அதனால் ரகசியமாக படைபலத்தைப் பெருக்கிக் கொண்டே இருந்தான். ‘சரி, போரை எப்போது ஆரம்பிக்கலாம்?’ என்று எண்ணிக் கொண்டே குதிரை மீது ஏறி அவன் நகர்வலம் வந்தான். வழியில் மரத்தடி ஒன்றில் துறவி ஒருவர் நிம்மதியாக அமர்ந்திருந்தார்.

அவர் கையிலே ஒரு பிச்சைப் பாத்திரம். மன்னன் அவர் முன்னால் போய் நின்றான்.

“துறவியாரே! நான் இந்த நாட்டு மன்னன். இன்னும் கொஞ்ச நாளில் பக்கத்து நாடுகளுக்கும் நானே மன்னனாகி விடுவேன்!”

“அப்படியா?”

“ஆமாம்! அதனால் எனது நாட்டில் இப்படி ஒருவர் பிச்சைப் பாத்திரத்தோடு இருக்கக் கூடாது!”

“அப்படியானால்...”

“உங்களுக்கு என்ன வேண்டுமோ கேளுங்கள்... கொடுக்கிறேன்!”

துறவி சிரித்தார்.

“ஏன் சிரிக்கிறீர்கள்?”

“உன்னால் முடியாததை எல்லாம் கொடுக்கிறேன் என்று சத்தியம் செய்யாதே!”

மன்னனுக்கு இது அவமானமாகத் தோன்றியது. “வாருங்கள் என் அரண்மனைக்கு!” என்று வலுக்கட்டாய மாக அந்தத் துறவியை அரண்மனைக்கு அழைத்துப் போனான். “இப்போது சொல்லுங்கள்... என்ன வேண்டும் உங்களுக்கு?”

துறவி தனது பிச்சைப் பாத்திரத்தை நீட்டியபடி சொன்னார்: “இது நிறைய பொற்காசுகள் வேணும்!”

“ப்பூ... இவ்வளவுதானா? யாரங்கே... பொற்காசுகளைக் கொண்டு வாருங்கள்!” _ உத்தரவிட்டான்.

ஒரு தாம்பாளம் நிறைய பொற்காசுகளோடு ஒருவன் வந்தான். அரசன் அதை அள்ளி பிச்சைப் பாத்திரத்தில் போட்டான். போடப் போட பொற்காசுகள் உள்ளே போய்க் கொண்டே இருந்தன. பாத்திரம் நிரம்பவில்லை. ஆனால், கொஞ்ச நேரத்தில் அரசுக் கருவூலமே காலியாகி விட்டது. இருந்தது அத்தனையும் கொட்டியாயிற்று. பிச்சைப் பாத்திரம் நிரம்பவே இல்லை!

மன்னன் மலைத்துப் போனான். அவனிடமிருந்த கர்வம் அகன்றது. அப்படியே பொத்தென்று துறவியின் காலில் விழுந்தான். பிறகு எழுந்தான்.

துறவி சொன்னார்: “மன்னா... இந்தப் பிச்சைப் பாத்திரத்தை உன்னால் மட்டுமல்ல... வேறு எவராலும் நிரப்ப முடியாது. காரணம்- இது சாதாரணப் பிச்சைப் பாத்திரம் அல்ல!”

“அப்புறம்?”

“பேராசைகளுடன் வாழ்ந்து செத்துப் போன ஒரு மனிதனின் மண்டை ஓடு இது!”

இப்படி ஒரு கதை உண்டு. ஆன்மிக வழியில் பேராசைக்கு இடமில்லை. அது அமைதியை நோக்கிச் செல்கிற ஒரு பயணம். இப்போது நாம் பொய்யான ஓர் அமைதியில் வாழ்ந்து கொண்டிருக்கிறோம்.

ஒரு பெரிய மனிதர் படுத்திருந்தார். அவரைப் பார்க்க ஒரு சந்நியாசி வந்தார். “ஐயா!” என்று குரல் கொடுத்தார்.

“எனது அமைதியைக் கெடுக்காதீர்கள்!” என்றார் பெரிய மனிதர்.

சந்நியாசி சிரித்துவிட்டுச் சொன்னார்: “கெடக்கூடிய நிலையில் இருந்தால், அது அமைதியே அல்ல!”

## எங்கே மகான்?



அந்த ஆலயத்தை நோக்கி நிறையப் பேர் வந்து கொண்டிருந்தனர். அன்றைக்கு அங்கே ஒரு சொற்பொழிவு நடைபெற இருக்கிறது. யாரோ ஒரு மகான் வரப் போகிறார். ஊர் மக்களுக்கு உபதேசம் செய்யப் போகிறார். அதைக் கேட்பதற்காகவே அவ்வளவு பேரும் வருகிறார்கள்!

ஆலய வாசலில் யாரோ ஒரு மனிதன் படுத்துக் கிடக்கிறான். வரும் மனிதர்கள் எல்லோரும் கீழே விழுந்து கிடக்கும் மனிதனை வெறுப்போடு பார்த்தபடி விலகிச் செல்கிறார்கள்.

''ஏம்ப்பா... இன்றைக்குக் கோயில்ல ஒரு முக்கியமான கூட்டம்... பெரிய மகான் ஒருத்தர் வந்து உபதேசம் பண்ணப் போறார். அதைக் கேக்கறதுக்காக மக்கள் எல்லாம் ஆர்வத்தோடு வந்துட்டிருக்காங்க. இந்த நேரம் பார்த்து இப்படி வந்து வழியிலே படுத்துக் கிடக்கிறியே! எழுந்திரிச்சு ஒரு ஓரமா போய் படு!'' என்று சொல்லிவிட்டுப் போனார் ஒருவர்.

இன்னொருவர் கொஞ்சம் இரக்கப்பட்டு, ஒரு ரூபாய் காசை அந்த மனிதனின் மீது வீசி எறிந்துவிட்டுப் போனார். சிலர் அவனைத் திட்டி விட்டுப் போனார்கள். பலர் முணுமுணுத்தபடி போனார்கள். எல்லோரும் போய் ஆலய மண்டபத்தில் அமர்ந்து கொண்டனர்.

ஆனாலும் வர வேண்டிய மகான் இன்னும் வந்து சேரவில்லை. எல்லோரும் வாசற் பக்கம் திரும்பிப் பார்க்கிறார்கள். அப்போது அந்த அதிசயம் நடக்கிறது.

கீழே படுத்துக் கிடந்த அந்த எளிய மனிதன் மெள்ள எழுந்து உள்ளே வருகிறான். மக்கள் முன்னால் போடப்பட்ட மேடையில் ஏறி அமர்கிறான். பேச ஆரம்பிக்கிறான். மக்களுக்குப் புரிகிறது.

நாம் எதிர்பார்க்கும் மகான் இவர்தான்! அதிர்ச்சியோடு எல்லோரும் அவரைப் பார்க்கிறார்கள். அவர் சொல்கிறார்:

''எனது முதல் போதனை என்ன என்பதை நீங்கள் புரிந்து கொண்டிருப்பீர்கள் என்று நம்புகிறேன்... யாரையாவது எடைபோட்டுக் கொண்டிருந்தால், அவர்களை நீங்கள் நேசிக்க முடியாது. நிபந்தனை எதுவும் இன்றி, பிறரை நேசியுங்கள்!'' போதனை தொடர்ந்தது.

இந்த இடத்தில் உங்களுக்கு ஒரு தகவல்:

''வாழ்க்கையில் அமைதியான நேரம் எது தெரியுமா?'' என்று கேட்டார் ஒரு பெரியவர்.

எதிரே நின்றவர்கள் விழித்தார்கள்.

பெரியவர் சொன்னார்.

''எந்த விதமான நிபந்தனைகளும் இல்லாமல் அன்பு செலுத்தும் நேரம் இருக்கிறது, பாருங்கள்... அதைவிட அமைதியான நேரம் வேறு எதுவுமே இல்லை!''

## ‘எங்கே தேடுவேன்?‘

*அது ஒரு தேசத்தின் தலைநகரம்.அங்கே ஓவியக் கண்காட்சி ஒன்று நடந்தது. வரிசையாகப் பல ஓவியங்கள் காட்சிக்கு வைக்கப் பட்டிருந்தன. கண்காட்சியின் ஒரு பகுதியில், கொஞ்சம் வித்தியாசமான ஓவியங்கள் இரண்டு அருகருகே தொங்கின.*

*வேறொரு தேசத்தில் இருந்து வந்திருந்த பெரிய மனிதர் ஒருவர் அந்த ஓவியங்களைப் பார்த்தார்.*



*அதில் ஓர் ஓவியத்தைச் சுட்டிக்காட்டி, அங்கே நின்று கொண்டிருந்தவரிடம் விசாரித்தார்.*

*“இது யார்?”*

*“இவர்தான் கோரோசோவ்!”*

*பெரிய மனிதருக்கு ஒன்றும் புரியவில்லை.*

*“கோரோசோவ்... வா... அப்படின்னா?”*

*“இவரைப் பற்றி உங்களுக்குத் தெரியாதா... இதுவரை கேள்விப்பட்டதில்லையா?” “இல்லையே...!”*

*“இவர் ஒரு பெரிய மேதை!”*

*“அப்படியா...?”*

*“ஆமாம்... நீராவி எந்திரம், ரயில் இன்ஜின், ரேடியோ, விமானம் எல்லாம் கண்டுபிடித்தவர் இந்த கோரோசோவ்!”*

*“ஓ... அப்படியா? சரி... அடுத்த படத்தில் இருப்பவர்?” - பெரிய மனிதர் கேட்டார்.*

*“மஞ்சு கௌங்கி!”*

*“இவரது பெருமை என்னவோ?”*

*“கோரோசோவைக் கற்பனை செய்து படைத்தவரே இவர்தான்!” கேட்டவர் குழம்பிப் போய் வெளியே வந்து விட்டார். நண்பர்களே... நம் பெரியவர்கள் ஆண்டவனையும் இப்படித்தான் நமக்கு அறிமுகப் படுத்துகிறார்கள். ஓர் உருவத்தைக் காட்டி, ‘இவர்தான் கடவுள். இந்த உலகத்தில் உள்ள எல்லாவற்றையும் படைத்தவர் இவரே!’ என்கிறார்கள்.*

*‘சரி! இவரைப் படைத்தவர் யார்?’ என்று ஒரு கணம் யோசித்தால், அவர் ஒரு சிற்பியாக இருப்பார் அல்லது ஓவியராக இருப்பார். சரி... அப்படியானால் கடவுளை எப்படிப் பார்ப்பது? எங்கே பார்ப்பது?*

*இந்தக் கேள்விக்கு சுவாமி விவேகானந்தர் தெளிவாக பதில் சொல்கிறார்:*

*“ஆலயத்தில் உள்ள சிலைகளில் கடவுளைப் பார்ப்பவன் பக்தியின் அடிமட்டத்திலேயே நிற்கிறான். அடுத்தவரது துன்பத்தைப் போக்குவதில் கடவுளைப் பார்ப்பவன், ஆகாயம் அளவுக்கு உயர்ந்து நிற்கிறான்!”*

# 'நினைப்பதெல்லாம் நிறைவேற வேண்டும்!'

தென்கச்சி சுவாமிநாதன்



ஒ ரு தேசத்தில் ராணுவ ஆட்சி நடந்தது. அந்த தேசத்தின் மக்கள் எல்லாரும் மிகவும் சிரமப்பட்டார்கள். ஜனநாயகம் எப்போது வரும் என்று எல்லோருமே எதிர்பார்த்தார்கள். ஆகவே, ராணுவ ஆட்சியைக் குறை சொல்ல ஆரம்பித்தார்கள். இது இப்படியே போனால், மக்கள் புரட்சி வெடிக்கக் கூடும்.

ராணுவத் தலைவர் யோசித்தார். வெளி உலகத்தைத் திருப்திப்படுத்துவதற்காக தேர்தல் அறிவிப்பு ஒன்றை வெளியிட்டார். அதன்படி தேர்தல் நாள் வந்தது.

ஆனால், அன்றைக்கு என்ன நடந்தது தெரியுமா? ராணுவ வீரர்களே வாக்குச் சாவடிகளைக் கைப்பற்றினார்கள். அவர்களே எல்லா வாக்குச்சீட்டுகளிலும் முத்திரையைக் குத்தி பெட்டிகளில் போட்டார்கள். மறு நாள் வாக்கு எண்ணிக்கை. 'எல்லாப் பத்திரிகையாளர்களும் வரலாம்... எவர் வேண்டுமானாலும் வரலாம்... எல்லாரின் முன் னிலையில்தான் வாக்கு எண்ணிக்கை நடைபெறும்' என்று சொல்லி, அனைவரையும் அழைத்திருந்தார் ராணுவ அதிகாரி.

பலரும் கூடி இருக்க, பெட்டிகளைக் கொட்டி வாக்குகளை எண்ண ஆரம்பித்தார்கள். ராணுவத் தலைவரும் உற்று கவனித்துக் கொண்டிருந்தார்... வரிசையாக எல்லா வாக்குகளும் அவருக்கே விழுந்திருக்கிறது. எல்லாரும் குழப்பத்தோடு அதைப் பார்த்துக் கொண்டிருந்தனர்.

இடையிலே திடீரென்று ஒரு வாக்கு எதிர்க்கட்சிக்கு விழுந்திருந்தது. "பார்த்தீங்களா? எனது ஆட்சியிலே ஜனநாயகம் இல்லேன்னீங்களே... பாருங்க... எதிர்க்கட்சிக்கும் ஒரு வோட்டு விழுந்திருக்கு...!" என்று பத்திரிகையாளர்களைப் பார்த்து உரக்கக் கூவினார் அந்த ராணுவத் தலைவர். ஓட்டு எண்ணிக்கை தொடர்ந்தது.

கொஞ்ச நேரத்தில்... இன்னொரு வோட்டும் எதிர்க் கட்சிக்கு விழுந்திருந்தது! இதைப் பார்த்ததும் ராணுவத் தலைவர் முகத்தில் கோபம்...

"திருட்டுப்பயல்... ஒருத்தனே ரெண்டு வோட்டுப் போட் டிருக்கான் போலிருக்கு!" என்று முணுமுணுத்தவாறே கோபத்துடன் எழுந்து வெளியே போனாராம் அந்த ராணுவத் தலைவர்!

இப்படி ஒரு கதை உண்டு. சரி... இதற்கும் ஆன்மிகத்துக்கும் என்ன சம்பந்தம்?

அந்த ராணுவத் தலைவரின் விருப்பத்துக்கும், இந்தக் கால பக்தர்களின் விருப்பத்துக்கும் வித்தியாசம் ஏதுமில்லை என்பதுதான் உண்மை!

ஆண்டவனின் முன்னால் நின்று கொண்டிருக்கும் பல பக்தர்கள் வேண்டுவது இதுதான்:

"இறைவா! நான் நினைப்பதெல்லாம் நிறைவேற வேண்டும்!"

# எதிர்பாராத அதிர்ச்சி!


தென்கச்சி சுவாமிநாதன்

அது ஒரு நெடுஞ்சாலை. ஆனாலும் வாகனப் போக்குவரத்து அதிகமில்லை. இரவு நேரம். இரண்டு கார்கள் எதிரும் புதிருமாக வருகின்றன. எதிர்பாராத விதமாக அவை மோதிக் கொள்கின்றன.

ஒரு காரை ஓட்டி வந்தவர் வக்கீல். இன்னொரு காரை ஓட்டி வந்தவர் டாக்டர். நல்லவேளையாக இந்த இரண்டு பேருக்கும் எந்த பாதிப்பும் இல்லை. இரண்டு கார்களது முன் பகுதிகளிலும் கொஞ்சம் சேதம் ஆகி இருந்தது. லேசான அதிர்ச்சிக்குப் பின் இவர்கள் இருவரும் காரின் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தார்கள்.



வக்கீல் சொன்னார்: ''பதற்றப்படாதீர்கள்... பயப்படுவதற்கு ஒன்றுமில்லை!''

''என்றாலும் எனக்கு இது எதிர்பாராத ஓர் அதிர்ச்சிதான்!'' என்றார் டாக்டர் பதற்றத்துடன்.

அந்த வக்கீல் உடனே தனது கார் கதவைத் திறந்து உள்ளே இருந்த ஒரு மது பாட்டிலை எடுத்தார். ஒரு கண்ணாடிக் கோப்பையில் ஊற்றினார். டாக்டரிடம் கொடுத்தார். ''முதலில் இதைக் குடியுங்கள்... அதிர்ச்சி அடைந்திருக்கிறீர்கள்!'' என்று சொல்லி அன்புடன் உபசரித்தார்.

''மிக்க நன்றி!'' என்று சொல்லி அதை வாங்கி அருந்தினார் அந்த டாக்டர். அதன் பிறகு எதிரே நிற்கும் வக்கீலை நிமிர்ந்து நோக்கினார். ''நீங்களும் அதிர்ச்சி அடைந்திருக்கிறீர்கள் என்றுதான் நான் நினைக்கிறேன். சரிதானே?''

''உண்மைதான்!''

''அப்படியானால், நீங்களும் கொஞ்சம் மதுவைச் சாப்பிடலாமே!'' என்று வக்கீலைப் பார்த்துப் பரிவுடன் கேட்டார் டாக்டர்.

''சாப்பிடத்தான் போகிறேன். ஆனால், இப்போது இல்லை!''

''பின் எப்போது...?''

வக்கீல் சொன்னார்: ''இன்னும் கொஞ்ச நேரத்தில் விபத்தைப் பற்றி விசாரிக்க போலீஸ் வரும். அவர்கள் வந்து போன பிறகு, நான் சாப்பிடுவேன்!''

நண்பர்களே... வாழ்க்கையில் நெருக்கடி வருகிறபோது மனிதர்கள் மறைந்து போகிறார்கள். வேடங்கள் வெளியே வருகின்றன.

ஒரு ஞானி சொன்னார்: ''என்னைச் சந்திக்க வருகிறவர்கள் எல்லாரும் நான் டாக்டர், நான் வக்கீல், நான் தொழிலதிபர், நான் அரசியல்வாதி... என்றே தங்களை அறிமுகப்படுத்திக் கொள்கிறார்கள். இதுதான் எனக்குக் கவலையாக இருக்கிறது!''

''இதில் கவலைப்பட என்ன இருக்கிறது?''

''எவரும் தன்னை ஒரு மனிதன் என்று இதுவரை அறிமுகப்படுத்திக் கொள்ளவில்லையே!''

# எல்லாம் இலவசம்!

தென்கச்சி சுவாமிநாதன்



இ ல்லறத்தில் ஒற்றுமையுடன் வாழ்ந்து வந்தனர் அந்த முதிய தம்பதி. ஒன்றாக வாழ்ந்தவர்கள் ஒரு தினத்தில் ஒன்றாகவே இறந்து போயினர்.

இருவரும் சொர்க்கத்துக்குப் போய்ச் சேர்ந்தனர். அங்கே எல்லா வசதிகளும் இருந்தன. எந்தக் குறையும் இல்லை. அங்கே இருந்தவர்கள் தாத்தாவையும், பாட்டியையும் அன்புடன் வரவேற்றனர். அங்கிருந்த பெரிய மாளிகை ஒன்றை இவர்கள் தங்குவதற்காக ஒதுக்கிக் கொடுத்தனர். தாத்தா அந்த மாளிகையின் உள்ளே நுழைந்தார். சுற்றிப் பார்த்தார். மிகவும் பிடித்திருந்தது.

''இதுக்கு எவ்வளவு வாடகை?'' என்று கேட்டார்.

''வாடகை கிடையாது... இலவசம்!'' என்றனர்.

மாளிகையின் பின்புறம் மிகப்பெரிய புல் வெளி...

''இங்கு விளையாட ஏதாவது கட்டணம் உண்டா?'' என்று கேட்டார் தாத்தா.

''அதெல்லாம் கிடையாது. நீங்க எப்ப வேணும்னாலும் விளையாடலாம்... கட்டணம் இல்லை!'' என்றார்கள்.

பக்கத்திலேயே பிரமாண்டமான கட்டடம் ஒன்று தெரிந்தது.
''அது என்ன கட்டடம்?''- தாத்தா.

''ஓ... அதுவா? உணவு விடுதி! வாங்க சாப்பிடலாம்!''

தாத்தாவையும், பாட்டியையும் அங்கே அழைத்துச் சென்றனர். விதவிதமான உணவு வகைகள் இருந்தன. அவரவர் விருப்பப்படி எடுத்துச் சாப்பிடலாம்.

''இதுக்கெல்லாம் எவ்வளவு கட்டணம்?''

''அதுதான் சொன்னோமே... இங்கே எல்லாமே இலவசம். எவ்வளவு வேணும்னாலும் சாப்பிடலாம்!''

''நீங்க சொல்றீங்க சரி... ஆனா, நான் சர்க்கரை சேர்க்கக் கூடாது... உப்பு சேர்க்கக் கூடாது... பாட்டி கையாலே எப்பவும் பத்தியச் சாப்பாடுதான்!''

''இதோ பாருங்க... இங்கே உங்களுக்கு அந்தக் கவலை தேவையில்லை. நீங்க இனிப்பு, காரம் எது வேணும்னாலும் சாப்பிடலாம்... உங்களுக்கு எந்த நோயும் வராது!''

இதைக் கேட்டதும் அந்தத் தாத்தா பக்கத்தில் நின்றிருந்த பாட்டியைப் பார்த்து, பயங்கரமாக முறைத்தபடி கத்தினாராம்: ''அடிப் பாவி, எல்லாத்தையும் கெடுத்துட்டியே... நீ எனக்குப் பத்தியச் சாப்பாடு போடாம, கண்டதைத் திங்க விட்டிருந்தா... பத்து வருஷத்துக்கு முன்னாடியே நான் இங்கே வந்து சேர்ந்திருப்பேனே!''

இந்தக் கதை வேடிக்கையாக இருந்தாலும், இதில் நாம் புரிந்து கொள்ள வேண்டிய உண்மை ஒன்று உண்டு.

சொர்க்கம்- நரகம் என்று ஆன்மிகம் குறிப்பிடுவது வேறு எங்கேயோ இருக்கிற உலகங்களை அல்ல. நாம் மகிழ்ச்சியாக இருந்தால், சொர்க்கத்தில் வாழ்கிறோம் என்று பொருள். நாம் கவலையாக இருந்தால், நரகத்தில் வாழ்கிறோம் என்று பொருள்.

ஆகவே அந்த சொர்க்கம்- நரகம் ஆகிய இரண்டும் இருக்கும் இடத்துக்கு ஒரு பெயர் உண்டு...

அந்தப் பெயர் - மனம்!

## ‘ஒரு காது, சரி... ரெண்டு காதுமா?’



ஆ லய வாசல் திறந்திருந்தது. அங்கே இருந்து ஒருவர் வந்து கொண்டிருந்தார். அவர் முகம் வாடி இருந்தது.

“என்ன காரணம்?” என்று விசாரித்தார் எதிரே வந்த நண்பர்.

“ஒரு தப்பு பண்ணிட்டேன்... அதான் ஆண்டவன் கிட்டே மன்னிப்பு கேட்டுட்டு வர்றேன்.”

“என் கூட வா... உனக்கு ஒரு கதை சொல்றேன்!” என்று சொல்லி இவர், அவரை அழைத்துக் கொண்டு போனார். இருவரும் அந்த ஆலயத்தின் எதிரே ஒரு மரத்தின் அடியில் உட்கார்ந்தார்கள்.

நண்பர் கதை சொல்ல ஆரம்பித்தார்.

“ஒரு ஊர்லே ஒருத்தன் இருந்தான். ஒரு முறை அவன் தன் இரண்டு காதுலேயும் பெரிசா கட்டு போட்டுக்கிட்டு வந்தான்.

‘என்னப்பா சந்திர மண்டலம் புறப்பட்டுட்டியா?’னு கிண்டல் செய்தான் அவன் நண்பன்.

‘அதெல்லாம் ஒண்ணுமில்லேப்பா... வீட்டுலே ஒரு சின்ன விபத்து நடந்துடுச்சு... அதுதான் இப்படி!’

‘என்ன... மனைவி கூட சண்டை போட்டியா?’

‘அந்தப் பழக்கம்லாம் என்கிட்டே கிடையாது!’

‘வேற என்ன நடந்தது? கொஞ்சம் விவரமாத்தான் சொல்லேன்.’

அவன் சொல்ல ஆரம்பித்தான்...

‘அது... வந்து... வேறே ஒண்ணுமில்லே. டி.வி-யிலே கிரிக்கெட் மேட்ச் நடந்துது. அதை நான் ரொம்ப ஆர்வமா பார்த்துக்கிட்டிருந்தேன். அப்போ என் மனைவி துணிக்கு அயர்ன் பண்ணிக்கிட்டிருந்தா. அயர்ன் பாக்சை அப்படியே வெச்சுட்டு அடுப்பங்கரை பக்கம் போயிருக்கா. அந்த நேரம் பார்த்து டெலிபோன் மணி அடிச்சுது. அவசரமா நான் எழுந்திரிச்சு ஓடிப் போய் அதை எடுத்துக் காதிலே வெச்சேன். அப்புறம்தான் தெரிஞ்சது. நான் காதுலே வெச்சது டெலிபோன் ரிசீவர் இல்லே... அயர்ன் பாக்ஸ்! சூடா இருந்துதா, சுட்டுப்புட்டுது!’

*‘நீ சொல்றபடி பார்த்தா ஒரு காது இப்படி ஆனது சரி. ரெண்டு காதுலேயும் கட்டுப் போட்டிருக்கியே? அது எப்படி?’*

*‘அதே ஆளு... மறுபடியும் போன் பண்ணுவான்னு நான் எதிர்பார்க்கலியே!’*

*மரத்தடியில் அமர்ந்து இந்தக் கதையைக் கேட்டுக் கொண்டிருந்த அன்பர் விழுந்து விழுந்து சிரித்துக் கொண்டிருந்தார்.*

*‘‘சிரிக்காதீர்கள்... சிந்தித்துப் பாருங்கள்!’’ என்றார் நண்பர்.*

*‘‘என்ன சொல்கிறீர்கள்?’’*

*‘‘இப்போ ஒரு தப்பு பண்ணிபுட்டு ஆண்டவன்கிட்டே மன்னிப்பு கேட்டுக்கிட்டு வர்றதா சொன்னீங்க. இது முக்கியம் இல்லை. இதே தப்பை மறுபடியும் நீங்க செய்யாம இருக்கணும்... அதுதான் முக்கியம்!’’*

*அவர் சிந்திக்க ஆரம்பித்தார்.*

*‘பாவங்கள் மன்னிக்கப்படுவது ஏன்?’*

*சற்று நேரத்தில் விடை அவருக்கு விளங்கியது.*

*பாவங்களை மனிதன் மறுபடியும் செய்யாமல் இருப்பதற்காகவே அவன் மன்னிக்கப்படுகிறான்!*

## கடவுளுக்குப் பின்னால் யார்?



*அ வர் ஒரு சந்நியாசி. ஒரு நாள் கனவு ஒன்று கண்டார். கனவில் அவர் சொர்க்கத்துக்குச் சென்றார். அங்கு ஏதோ பெரிய திருவிழாவுக்கான அறிகுறி தெரிந்தது. பாதை ஓரங்களில் நிறைய பேர் கூட்டமாக நின்று கொண்டிருந்தனர்.*

*அவர்களிடம், ‘‘இங்கு என்ன விசேஷம்?’’ என்று விசாரித்தார் சந்நியாசி.*

*அவர்களுள் ஒருவன், ‘‘என்ன இப்படிக் கேக்கறே... நீ என்ன ஊருக்குப் புதுசா?’’ என்று கேட்டான்.*

*‘‘ஆமாம்!’’- சந்நியாசி.*

*இதைக் கேட்டதும் ஒருவன் விஷயத்தைக் கூறினான்: ‘‘இன்று கடவுளின் பிறந்த நாள் விழா!’’*

*‘‘ஓ... அப்படியா?’’*

*‘‘ஆமாம்... இன்னும் கொஞ்ச நேரத்தில் இந்த வழியே மாபெரும் ஊர்வலம் ஒன்று வரப் போகிறது. அதில் கடவுளும் கலந்துக்கப் போறார்!’’*

*இதைக் கேட்டதும் சந்நியாசிக்கு ஆர்வம் அதிகமானது. அவர், சாலை ஓரமாக மர நிழலில் ஒதுங்கி நின்று கொண்டார். சிறிது நேரத்தில் ஊர்வலம் வந்தது.*

முதலில் ஒரு குதிரை. அதன் மீது கம்பீரமாக ஒருவர் அமர்ந்திருந்தார். அவரைப் பின்தொடர்ந்து நிறைய பேர் நடந்து வந்து கொண்டிருந்தனர்.

''இவருக்கு பின்னாடி இவ்வளவு கூட்டம் வருதே... யார் இவர்?'' என்று விசாரித்தார் சந்நியாசி.

அவரிடம் ஒரு மதத்தின் பெயரைச் சொன்னவர்கள்,
''குதிரையில் வருபவர் அந்த மதத்தின் தலைவர். அவரைப்
பின்பற்றும் மக்கள் கூட்டம் அவரைத் தொடர்கிறது!'' என்று விவரம் சொன்னார்கள். அடுத்தபடியாக இன்னொருவரும் குதிரையில் வந்தார். அவருக்குப் பின்னாலும் ஏகப்பட்ட கூட்டம்.

''இவர் யார்?''

உடனே, இன்னொரு மதத்தின் பெயரைச் சொன்னவர்கள், ''இவர், அந்த மதத்தின் தலைவர். அவரது வழியைப் பின்பற்றுவோர் அவரைப் பின் தொடர்கிறார்கள்'' என்று விவரித்தனர்.

இப்படி ஒவ்வொருவராகக் குதிரை மீது வந்தார்கள். அவர்கள் ஒவ்வொருவரையும் பின்பற்றி ஒரு கூட்டம் வந்து கொண்டிருந்தது. ஒருவழியாக அந்த நீண்ட ஊர்வலம் முடிந்தது. சிறிது நேரம் கழித்து வயதான ஒருவர் குதிரை மீது வந்து கொண்டிருந்தார். அவருக்குப் பின்னால் எவருமே இல்லை. மிக பரிதாபமாக, தனியே வந்து கொண்டிருந்த அவர், ஊர்வலத்தைச் சேர்ந்தவரா இல்லையா என்பதே தெரியவில்லை.

''இவர் யார்... ஏன் இப்படி தனியே வந்துக்கிட்டிருக்கார்?'' என்று கேட்டார் சந்நியாசி. கூட்டத்தில் ஒருவர் சொன்னார்: ''என்ன இப்படி கேட்கிறீங்க? இவர்தான் கடவுள். முன்னாடி போகும் கூட்டம் எல்லாம் இவரது பிறந்த நாளைக் கொண்டாடுறதுக் காகத்தான்!''

இதைக் கேட்டதும் அந்த சந்நியாசிக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவர் தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்டார். அப்புறம் யோசித்துப் பார்த்தார். 'தான் உண்மைக்குப் பின்னால் போய்க் கொண்டிருப்பதாக நிறைய பேர் சொல்கிறார்கள். ஆனால், அந்த 'உண்மை' அநாதையாகப் போய்க் கொண்டிருக்கிறது. கடவுளைப் பின்பற்றுவதாக நினைக்கிறார்கள் பக்தர்கள். ஆனால், கடவுளுக்குப் பின்னால் எவருமே இல்லை!'

## ஊசியில் ஏன் கோக்க முடியவில்லை?



'இ ல்லறம் நல்லதா? துறவறம் நல்லதா?'

இரண்டும்தான். ஆனால் ஒன்று... இல்லறத்தில் இருப் பவர்களுக்கு துறவறத்தின் பக்கமோ, துறவறத்தில் இருப்பவர்களுக்கு இல்லறத்தின் பக்கமோ பார்வை திரும்பக் கூடாது. அதுவே முக்கியம்!

ஒருவருக்கு இல்லற வாழ்க்கை பிடிக்கவில்லை. 'எல்லாவற்றையும் விட்டு விட்டு, துறவற வாழ்க்கைக்குப் போய்விடலாம்!' என்று முடிவு செய்தார்.

'சரி... அதற்கு முன் ஒரு மகானை சந்திக்கலாம்!' என்று நினைத்தவர், திருவண்ணாமலைக்குப் புறப்பட்டார். ரமண மகரிஷியை சந்திக்க வேண்டும் என்பது இவரது விருப்பம். அங்கு போய்ச் சேர்ந்தபோது, இலைகளை ஒன்றாகச் சேர்த்துத் தைத்துக் கொண்டிருந்தார் ரமண மகரிஷி. அதாவது, இலைகளை ஈர்க்குச்சியால் தைத்து, 'தையல் இலை' தயாரித்துக் கொண்டிருந்தார்.

‘பேச்சை எப்படி ஆரம்பிப்பது?’ என்று நம்மவர் யோசிக்கத் துவங்க... ரமணரே பேச ஆரம்பித்தார்:

‘‘இதோ பார்... கஷ்டப்பட்டு இந்த தையல் இலையைச் செய்யறோம்; அதைப் பயன்படுத்தறோம். அதோட வேலை முடிஞ்சப்புறம்தான் அதைத் தூக்கி எறியறோம்!’’ _ இதைக் கேட்ட நம்மவருக்கு மேற்கொண்டு கேள்விகள் கேட்க வேண்டிய அவசியமே ஏற்படவில்லை; வாயை மூடிக் கொண்டார்!

பிறகு, யோசிக்க ஆரம்பித்தார். ‘உண்மைதான். நமது வாழ்க்கையும் ஒரு தையல் இலைதான். நமக்கென்று சில வேலைகள் இருக்கின்றன. அவற்றை முடிக்காமல், துயரங்களுக்கு பயந்து வாழ்க்கையை விட்டு ஓடிப் போய்விட முடியாது!’

குழப்பத்துடன் வந்தவர், தெளிவோடு ஊருக்குத் திரும்பினார்; மீண்டும் தன் குடும்பத்தைத் தேடி நடந்தார்.

அவரவர் கடமையை ஒழுங்காகச் செய்ய வழி காட்டுவதே ஆன்மிகம். ஆனால் இன்று, ‘தமது கடமைகளில் இருந்து தப்பிக்க ஆன்மிகம் உதவுமா?’ என்று அலைகிறவர்களே அதிகம்.

இல்லறக் கடமையை ஒழுங்காகச் செய்ய வேண்டும் என்று முடிவு செய்தார் ஒருவர். முதற் கட்டமாக மனைவிக்கு உதவியாக, வீட்டில் உள்ள கிழிந்த துணிமணிகளைத் தைத்துத் தர தீர்மானித்தார்.

முதலில், ஊசி ஒன்றைக் கையில் எடுத்தார். இன்னொரு கையில் நூலை எடுத்தவர், அதை ஊசியில் கோக்க முற்பட்டார். ஆனால், எவ்வளவு முயன்றும் முடியவில்லை. ஒரு மணி நேரமாகப் போராடிக் கொண்டிருந்தார்.

தற்செயலாக அந்தப் பக்கம் வந்த அவரின் மனைவி அதைக் கவனித்து விட்டுச் சொன்னார்:

‘‘எவ்வளவு நேரம் போராடினாலும் உங்களால் ஊசியில் நூலைக் கோக்க முடியாது!’’

‘‘ஏன்?’’

‘‘நீங்கள் கையில் வைத்திருப்பது குண்டூசி!’’

## நீரும் நெருப்பும்!



ஓர் ஆலயத்தில், பக்தி பிரசங்கம் நடந்தது. ஏராளமானோர் உட்கார்ந்து கேட்டுக் கொண்டிருந்தனர். கூட்டத்தின் நடுவே கிராமத்து பாட்டி ஒருவரும் உட்கார்ந்திருந்தார்.

பிரசங்கம் முடிந்து வீட்டுக்குத் திரும்பும்போது, அந்தப் பாட்டி, இன்னொரு பெண்ணிடம் சொன்னார் ''அந்தப் பெரியவர் நரகத்தைப் பத்தி எவ்வளவு பிரமாதமா பேசினார் பார்த்தியா... என்னமோ அங்கேயே பிறந்து, வளர்ந்தது மாதிரி!''

நமக்குத் தெரிந்த விஷயங்களைப் பற்றி தெரிந்த வரையில்தான் பேச முடியும். தெரியாத விஷயங்களைப் பற்றி என்ன வேண்டுமானாலும் பேசலாம். அதனால்தான், கடவுளைப் பற்றி அதிகமாகப் பேசிக் கொண்டிருக் கிறோம்.

அவர், பெரிய ஞானி. ஒரு நாள் தெருவில் போய்க் கொண்டிருந்தார். அவரின் ஒரு கையில்- தீப்பந்தம். மறு கையில்- ஒரு வாளி தண்ணீர். எதிரே வந்தவர்களுக்கு இது வேடிக்கையாக இருந்தது.

''என்ன இது?'' என்று கேட்டனர்.

''தண்ணீரும் நெருப்பும்!''

''தெரிகிறது... அதுதான் எதற்கு என்று கேட்கிறோம்!''

ஞானி கூறினார் ''நரகத் தீயை, தண்ணீரால் அணைக்கப் போகிறேன். அப்படியே, சொர்க்கத்தையும் கொளுத்தப் போகிறேன்!''

கேட்டவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. ஞானி தொடர்ந்தார் ''அப்போதுதான் நரக பயமோ, சொர்க்க ஆசையோ இல்லாமல், மக்கள் சத்தியத்தை நாடி கண்டுகொள்ள முடியும்!''

சொர்க்கத்துக்குப் போக வேண்டும் என்று ஆசைப்படும் மனிதர்கள், நரகத்துக்குப் போய்விடக் கூடாது என்றும் விரும்புகிறார்கள். இந்த ஞாபகத்தி லேயே வாழும் இன்றைய பக்தர்கள் சத்தியத்தை அடையாளம் கண்டுகொள்ளாமலேயே காலத்தைக் கழித்து விடுகின்றனர்.

'கத்தினால்தான் கடவுள் கண்ணைத் திறந்து பார்ப்பார்.தட்டினால்தான் கதவு திறக்கும்!'_ இது இன்றைய பக்தனது நம்பிக்கை.

அந்த ஞானியிடம் ஒருவர் சொன்னார் ''ஒருவன் விடாமல் கதவைத் தட்டிக் கொண்டே இருந்தால், அந்தக் கதவு ஒரு நாள் அவனுக்காகத் திறக்கத்தானே செய்யும்?''

ஞானியின் முகத்தில் சிரிப்பு!

அவர் சொன்னார் ''இப்படியே எவ்வளவு காலம் சொல்லிக் கொண்டிருக்கப் போகிறீர்கள்? கதவு எப்போது மூடியிருந்தது, இப்போது திறப்பதற்கு?''

## ஆச்சரியம் தந்த ஆசாமி!



ஒரு குழந்தை, வீட்டில் விளையாடிக் கொண்டிருந்த போது, தவறுதலாக அங்கே இருந்த ஒரு ரூபாய் நாணயம் ஒன்றை எடுத்து விழுங்கி விட்டது.

குழந்தையின் தாய் பதறிப் போனாள். உடனே மருத்துவமனைக்குப் போக வேண்டும். குழந்தையைத் தூக்கிக் கொண்டு அவசரமாக வெளியே ஓடி வந்தாள்.

வாகனங்கள் ஏதும் கிடைக்கவில்லை.

தவித்துக் கொண்டிருந்த நிலையில், நல்ல வேளையாக ஒருவர் மோட்டார் சைக்கிளில் அந்த வழியாக வந்தார். கை நீட்டி நிறுத்தினாள்.

''என்னம்மா விஷயம்?''

"குழந்தை... ஒரு ரூபா காசை முழுங்கிட்டான்.அவசரமா ஆஸ்பத்திரிக்குப் போகணும்... கொஞ்சம் உதவ முடியுமா?"

"இங்கேயே என்னால் உதவ முடியும்!"

"எப்படி?"

"குழந்தையை இப்படிக் கொடுங்க...!"

குழந்தையை வாங்கியவர், ஒரு கையால் கால்களைப் பிடித்து தலைகீழாகத் தொங்குகிற மாதிரி தூக்கிப் பிடித்தார்! இடது கையால் அப்படித் தூக்கிப் பிடித்துக் கொண்டு, வலது கையின் சுட்டு விரலை நீட்டி, வயிற்றுக்கு நேராக பின்பக்கம் இடுப்பில் குறிப்பாக ஓர் இடத்தைக் குறி வைத்து ஒரு தட்டு தட்டினார்.அவ்வளவுதான். வாயின் வழியாக இரண்டு காசுகள் வெளியே வந்து விழுந்தன!

அந்த அம்மா அதைப் பொறுக்கி எடுத்தாள். ஒரு ரூபாய் நாணயம் ஒன்றும், ஐம்பது காசு நாணயம் ஒன்றும் இருந்தன.

அவளுக்கு ஆச்சரியம்! 'இது எப்படி? விழுங்கியது ஒரு ரூபாய்தானே... ஐம்பது காசு அதிகமாக வெளியே வந்திருக்கிறதே...?'

வியப்போடு நிமிர்ந்து, அந்த மோட்டார் சைக்கிள் மனிதரைப் பார்த்தாள்!

"ஐயா! இது என்ன அதிசயம்? விழுங்காத காசைக் கூட சேர்த்து வெளியே எடுத்துட்டீங்களே! நீங்க என்ன மந்திரவாதியா?"

"இல்லை!"

"டாக்டரா?"

"இல்லை!"

"அப்புறம்?"

"நான் ஒரு இன்கம்டாக்ஸ் அதிகாரி!"

அதிகாரிகளுக்குத் தெரிகிறது, தட்ட வேண்டிய இடம் எது என்பது! ஆனால், 'எது நாம் தட்ட வேண்டிய இடம்' என்பது ஆன்மிகவாதிகளுக்குத் தெரிவதில்லை. அதனால்தான் அவர்கள், ஆலயங்களின் கதவுகளைத் தட்டிக்கொண்டிருக்கிறார்கள். ஆலயம் என்பது மனிதன் கடவுளுக்காகக் கட்டிக் கொடுத்திருக்கிற வீடு! அந்த வீடு ஆண்டவனுக்குத் தேவைப்படுவதில்லை. மனிதனுக்குத் தேவைப்படுகிறது!

உள்ளம் என்கிற பெருங்கோயிலின் உள்ளே ஆண்டவன் இருப்பதாக உண்மை உணர்ந்தவர்கள் சொல்கிறார்கள்.

இதயக் கதவுகளைத் தட்டுங்கள்.

இறைவன் உங்கள் கண்களுக்குத் தெரிவார்!

## குப்புசாமியா... கந்தசாமியா?



உயர்தரமான தங்கும் விடுதி அது. இருபது அடுக்குகளைக் கொண்ட அந்த விடுதியின் தரை தளத்தில், ஒரு நீச்சல் குளம்.

அந்தக் கட்டடத்தின் உச்சியில் நின்று கொண்டிருந்த ஒருவன், கீழே இருந்த நீச்சல் குளத்தை எட்டிப் பார்த் தான். அப்போது, குளத்தின் அருகில் நின்று கொண் டிருந்த ஓர் ஆசாமி சத்தமாகக் கத்தினான்

"ஏ... குப்புசாமி, உன் மகன் நீச்சல் குளத்தில் விழுந்துட் டான்!"

இதைக் கேட்டதும் உச்சியில் நின்று கொண்டிருந்தவன் பதறிப் போய்க் கீழே குதித்தான்.

இப்போது, அவன் இருபதாவது மாடியில் இருந்து நீச்சல் குளத்தை நோக்கித் தலைகீழாக வந்து கொண்டிருக் கிறான். அவன், பதினைந்தாவது மாடியைக் கடக்கும்போது 'பளிச்'சென்று ஒரு சிந்தனை

'ஆமாம்... நமக்குத்தான் மகனே கிடையாதே! அப்புறம் எதுக்கு அவசரப்பட்டு கீழே குதிச்சோம்?'

பத்தாவது மாடியைக் கடந்தபோது, மற்றுமொரு சிந்தனை 'அது சரி, நமக்குத்தான் இன்னும் கல்யாணமே ஆகலையே!'

ஐந்தாவது மாடியைக் கடந்தபோது, இன்னும் ஓர் உண்மை புரிந்தது 'அவன் குப்புசாமியிடம்தானே சொன்னான்? நாம்தான் குப்புசாமி இல்லையே!'

கந்தசாமி கண் விழித்தான். கனவு கலைந்தது.

நல்லவேளை... அவன் நீச்சல் குளத்தில் கிடக்கவில்லை. படுக்கையில்தான் கிடக்கிறான்.

அந்தக் குளத்தில் விழுகிற கணத்தில், அவனுக்கு விழிப்பு வந்து விட்டது. தான் கண்டது கனவு என்பது புரிந்தது. 'தான் யார்?' என்ற உண்மையும் அவனுக்கு விளங்கியது.

இன்றைய மனிதனுக்கு, 'தான் யார்?' என்ற உண்மை புரிவதில்லை. அது புரியாமலேயே... கட்டடத்தின் உச்சியில் இருந்து நீச்சல் குளத்தை நோக்கி விழுவது போல அவனது உலகப் பயணமும் போய்க் கொண்டிருக்கிறது. அந்த பயணம் முழுவதும் பதற்றம்; நிம்மதி இன்மை!

விடிகிற வேளையில்தான் சிலருக்கு விழிப்பு வருகிறது. பலரும், விழிக்காமலேயே வாழ்க்கைப் பயணத்தை முடித்துக் கொள்கிறார்கள்.

நீங்கள், ஆரம்பத்திலேயே விழித்துக் கொள்ளுங்கள்; ஆனந்தமாக பயணத்தை மேற்கொள்ளுங்கள். அதற்கு ஆன்மிகம் உதவும்; நீங்கள் யார் என்பதை உங்களுக்கு அடையாளம் காட்டும்.

உலகியலைப் பொறுத்தவரையில், விடியும் நேரமே விழிப்பு!

உண்மையைப் பொறுத்தவரையில், நீங்கள் விழித்துக் கொள்ளும் நேரமே விடியல்!

# ஆலோசனை தேவையா?

தென்கச்சி சுவாமிநாதன்



நண்பரின் மகளுக்குத் திருமணம். அவசரமாகப் புறப்பட வேண்டும். எனவே, காத்திருந்த நோயாளிகளை ஒவ்வொருவராக அழைத்தார் அந்த டாக்டர். கவனமாகப் பார்த்து முடித்து விட்டு, காரில் புறப்பட்டார். திருமண மண்டபத்தில் ஏகக் கூட்டம். உட்கார இடம் தேடினார்.

"இங்கே வாங்க!" என்றொரு குரல்.

அழைத்தது வக்கீல் நண்பர் ஒருவர். அவருக்குப் பக்கத்து நாற்காலி காலியாக இருந்தது. அங்கே போய் உட்கார்ந்து கொண்டார் டாக்டர்.

"எப்படி இருக்கீங்க?"

"நல்லா இருக்கேன்!"

அப்போது டாக்டரை நெருங்கிய ஒருவர், "டாக்டர், எனக்கு லேசா தலை வலிக்குது... என்ன செய்யலாம்?" என்று கேட்டார். டாக்டர், அவரிடம் ஒரு மாத்திரையின் பெயரைச் சொல்லி அனுப்பி விட்டு, நண்பரது பக்கம் திரும்பினார். அதற்குள் இன்னொருவர் வந்து நின்றார்.

"மூட்டு வலிக்கு என்ன செய்யலாம் டாக்டர்?"

அவருக்கும் சில ஆலோச னைகளைச் சொல்லி விட்டுத் திரும்பினார். மறுபடியும் ஒருவர் வந்தார்.

"வயிறு வலிக்கிற மாதிரி இருக்கு டாக்டர்!"

அவருக்கும் யோசனைகள் சொல்லி விட்டு நண்பரது பக்கம் திரும்பியவர், "டாக்டருக்குப் படிச்சதுக்கு பதிலா, பேசாம உங்களை மாதிரி வக்கீலுக்குப் படிச்சிருக்கலாம்!" என்றார்.

"ஏன் அப்படிச் சொல்றீங்க?"- கேட்டார் வக்கீல்.

"பின்னே என்ன? கல்யாண வீட்டுல கூட நிம்மதியா உட்கார முடியலை. எல்லாருக்கும் இலவசமாவே மருத்துவ ஆலோசனை சொல்ல வேண்டி இருக்கு!" என்று சலித்துக் கொண்டார் டாக்டர். இப்போது வக்கீல் நண்பர் சொன்னார் "பொது இடங்கள்ல எங்கிட்டயும் சில பேர் வந்து, ஓசியில சட்ட ஆலோசனைகள் கேட்பது உண்டு!"

"நீங்க எப்படிச் சமாளிக்கிறீங்க?"

"அதைத்தான் இப்போ உங்களுக்கு ஆலோச னையா சொல்ல விரும்பறேன்!"

"சொல்லுங்க... சொல்லுங்க!"- ஆர்வத்துடன் கேட்டார் டாக்டர்.

"இதுமாதிரி நண்பர்கள் வந்து உங்ககிட்ட ஆலோசனை கேட்டா, தாராளமா சொல்லுங்க... ஆனால், அடுத்த நாளே அவங்க வீட்டுக்கு 'பில்' அனுப்பிடுங்க!"

**"நல்ல யோசனை... இனிமே அப்படியே செய்றேன்!" என்றார் டாக்டர்.**

**மறு நாள் என்ன ஆயிற்று தெரியுமா?**

**டாக்டர் வீட்டுக்கு ஒரு 'பில்' வந்தது, வக்கீலிட மிருந்து! அத்துடன் ஒரு குறிப்பு 'இது, நேற்று உங்களுக்கு நான் கொடுத்த ஆலோசனைக்காக!'**

**ஆரோக்கிய வாழ்வுக்காக 'பில்' அனுப்புவதில் தவறு இல்லை. ஆனால், ஆன்மிக வாழ்வுக்காக 'பில்' அனுப்புவது சரியில்லை!**

**நண்பர்களே... இன்றைக்கு பணம் வாங்கிக் கொண்டு 'பக்தி'யைப் பெருக்குகிறவர்கள் பெருகி வருகின்றனர். எச்சரிக்கையாக இருங்கள்!**

## மகிழ்ச்சியும் நிம்மதியும்!






**அந்த ஞானியிடம் வந்த செல்வந்தர் ஒருவர், "எனக்கு நிம்மதியே இல்லை!" என்றார்.**

**அதற்கு, "உங்களுக்கு என்ன குறை? ஏராளமான செல்வம் இருக்கிறது. எங்கு வேண்டுமானாலும் போகலாம்; வரலாம். எதை வேண்டுமானாலும் வாங்கலாமே!" என்றார் ஞானி.**

**உடனே, "இப்போது எனக்கு மகிழ்ச்சி தேவை. வாங்க முடியுமா?" என்று கேட்டார் செல்வந்தர்.**

**"அப்படின்னா, புறப்படுங்க! கால்பந்து விளை யாட்டைப் பார்க்கப் போகலாம்" என்றார் ஞானி.**

**கிளம்பினர். பெரிய திடலில், வீரர்கள் உற்சாகமாக கால்பந்து விளையாடிக் கொண்டிருந்தனர். இந்த இருவரும் விளையாட்டைக் கவனிக்க ஆரம்பித்தனர்.**

**ஞானி சொன்னார் "அவர்கள் என்னமாக விளையாடுகிறார்கள்... பாருங்கள்!"**

**உடனே செல்வந்தர், "அந்த பந்து எப்படியெல்லாம் உதைபடுகிறது... அதைக் கவனித்தீர்களா?" என்றார்.**

**"அதை ஏன் கவனிக்கிறீர்கள்?"**

**"எனது நிலைமையும் அப்படித்தான்! ஒரு பக்கம் வருமான வரிக்காரர்கள்; இன்னொரு பக்கம் தொழிலாளர்கள். இதுல... 'சொத்தைப் பிரிச்சுக் கொடு'னு பிள்ளைகள் செய்யும் தகராறு வேற! இப்படி, நாலா பக்கமும் உதைபட்டுக்கிட்டு இருக்கேன்!" என்று புலம் பினார் செல்வந்தர்.**

**"சரி... இனிமே இங்கே இருக்க வேண்டாம். வேறொரு இடத்துக்குப் போகலாம்!" என்ற ஞானி, செல்வந்தரை இசை நிகழ்ச்சி ஒன்றுக்கு அழைத்துச் சென்றார்.**

**அங்கே புல்லாங்குழல் இசைத்துக் கொண்டி ருந்தனர். அந்த இசை, மனதுக்கு இதமாக இருந்தது. கொஞ்ச நேரம் நிம்மதியாக கழிந்தது. நிகழ்ச்சி முடிந்து இருவரும் காரில் திரும்பினர்.**

**ஞானி ஆரம்பித்தார் "இப்போ சொல்லுங்க... பந்துக்கும் புல்லாங்குழலுக் கும் என்ன வித்தியாசம்?"**

''அது பந்து. இது புல்லாங் குழல்... அவ்வளவுதான்!''

உடனே, ''இந்த இரண்டுக்கும் தேவைப் படறது காற்று. பந்து, தான் வாங்கிய காற்றை, தானே வெச்சிக்குது; வெளியே விடறதில்லை. அதனாலதான் அது, இப்படி உதைபடுது! புல்லாங்குழல் அப்படி இல்லே. ஒரு பக்கத்தில் வாங்கும் காற்றை இன்னொரு பக்கமா வெளியே விட்டுடுது. அதனாலேயே அது, மனிதனின் உதடுகளுடன் உறவாடுது!'' என்ற ஞானி, செல்வந்தரை அர்த்தத்துடன் பார்த்தார்.

செல்வந்தர் சிந்திக்க ஆரம்பித்தார். 'தனது செல்வ மும் பந்துக்குள் இருக்கும் காற்று மாதிரியே! அது, புல்லாங்குழலைத் தேடிப் போக வேண்டிய நேரம் வந்து விட்டது!' என்பதை புரிந்து கொண்டார்.

நண்பர்களே, ஒன்றைப் புரிந்து கொள்ளுங்கள்.

நம்மிடம் இருக்கும் பணத்தை நமக்காக செலவு செய்யும்போது மகிழ்ச்சி கிடைக்கிறது. அதை, மற்றவர்களுக்காக செலவிடும்போது நிம்மதி கிடைக்கிறது!

## அர்ச்சனை யாருக்கு?

கோயிலுக்குச் சென்றான் ஒருவன். அங்கு, அர்ச்ச னைத் தட்டு வாங்கி அர்ச்சகரிடம் கொடுத்தவன், தனது பெயர் மற்றும் நட்சத்திரத்தைச் சொல்லி, அர்ச்சனை செய்யுமாறு கேட்டுக் கொண்டான்.



தட்டை வாங்கிக் கொண்டு கருவறைக்குள் சென்ற அர்ச்சகர், ஏதேதோ மந்திரங்களைச் சொன்னார்.

இவன், 'தனது பெயர் உச்சரிக்கப்படுகிறதா?' என்பதி லேயே கவனமாக இருந்தான். பெயர் உச்சரிக்கப்பட வில்லை. அர்ச்சகர் மீது எரிச்சல் வந்தது. அவர் வெளியே வந்ததும், ''என்ன சுவாமி, இப்படி பண்ணிட்டீங்களே?'' என்று வருத்தத்துடன் கேட்டான்.

''என்ன செஞ்சுட்டேன்?''

''ஒரு தடவைகூட எனது பெயரையோ நட்சத்திரத்தையோ ஆண்டவன் காதுல விழாமல் பண்ணிட்டீங்களே!''

''மன்னிக்கணும். உங்களுக்கும் சேர்த்தே பிரார்த்தனை பண்ணினேன்!''

''என்ன சொல்றீங்க?''

''உலகத்துல இருக்கற எல்லோரும் நல்லா இருக்கணும்னு பிரார்த்தனை பண்றதுதான் எனது வழக்கம். நீங்களும் இந்த உலகத்துல ஒருத்தர்தானே?''

''இருந்தாலும், நான்தானே அர்ச்சனைத் தட்டு வாங்கிட்டு வந்தேன்!''

''உங்க அர்ச்சனைத் தட்டு, உலக நன்மைக்காக உபயோகப்படுதுனா அது உங்களுக்கு பெருமை தானே?''

''இருந்தாலும்...'' என்று இழுத்தான் நம்மாள்.

அவனை இடைமறித்தார் அர்ச்சகர்

''இதோ பாருங்க... ஒரு செடி இருக்குன்னு வெச்சிக்கோங்க. அதன் கிளைகளில் தண்ணீர் ஊற்றினால், அது வீணாகப் போகும். ஆனால், அதன் வேருக்குத் தண்ணீர் ஊற்றினால்... அதன் பலன் கிளை, இலைனு

எல்லாத்துக்கும் கிடைக்கும். அதுபோல நான் அனைவருக்கும் சேர்த்துப் பிரார்த்திக்கிறபோது, அதன் நன்மை உங்களுக் கும் வந்து சேரும்!''

அர்ச்சகர் உதாரணத்துடன் விளக்கிக் கூற... எல்லாம் புரிந்தவனாகத் தலையாட்டிய நம்ம ஆசாமி, பிறகு இப்படிக் கேட்டான்

''சரி, உங்க விருப்பப்படியே பிரார்த்தனை செய்யுங்க. ஆனால் ஒரு வேண்டுகோள்... பிரார்த் தனையின் பலன் என் பக்கத்து வீட்டுக்காரனுக்கு மட்டும் கிடைக்காம பார்த்துக்க முடியுமா?!''

இன்றைக்குக் கோயிலுக்குச் செல்லும் பக்தர்கள் மூன்று வகை. 'தான் நன்றாக இருக்க வேண்டும்!' என்று போகிறவர்கள் ஒரு வகை. 'அடுத்தவன் நன்றாக இருக்கக் கூடாது!' என்று போகிறவர்கள் ஒரு வகை. 'உலகம் நன்றாக இருக்க வேண்டும்!' என்பதற்காகப் போகிறவர்கள் ஒரு வகை.

ஒருவர், எப்போது பிறரை நேசிக்கத் தொடங்கு கிறாரோ அப்போது அவர், ஆன்மிகத்தில் முதல் அடியை எடுத்து வைக்கிறார்.




இளைஞன் ஒருவன், அந்த ஆற்றைக் கடந்து மறு கரையில் உள்ள ஆசிரமத்தில், தனது குருவை சந்தித்து ஆசீர்வாதம் வாங்க விரும்பினான்.

ஆற்றின் இக்கரையிலும் ஆசிரமம் ஒன்று இருந்தது. இங்குள்ள குருவைத் தேடியும் சிலர் வருவது உண்டு.

அந்த இளைஞன் ஆற்றைக் கடக்க முற்பட்ட போது, இக்கரையில் இருந்த குரு அவனிடம் கேட்டார்

''எங்கேப்பா போறே?''

''என் குருவை தரிசிக்க!''

''உன் குரு யார்?''

''அதோ... அந்தக் கரையில் ஆசிரமம் ஒன்று தெரிகிறது அல்லவா... அங்கு இருப்பவரே என் குரு!''

இதைக் கேட்டதும், ''அவனா? அவனுக்கு ஒன்றுமே தெரியாதே! அவன் ஒரு முட்டாள். அவனை விட நீ பெரிய முட்டாள். அதனால்தான் அவனுக்கு நீ சீடனா இருக்கே!'' எனப் பொரிந்து தள்ளினார் இந்த குரு.

''ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்?''

உடனே இந்த குரு, ''உன் குருவால எதாவது அற்புதம் செய்ய முடியுமா? என்னை மாதிரி தண்ணி மேலே நடக்க முடியுமா? ஆகாயத்துல பறக்க முடியுமா? பூமியிலதான் புதைந்து கிடக்க முடியுமா? அவனால எதுவுமே முடியாது! அங்கே போய், ஏன் நேரத்தை வீணாக்கறே?'' என்றார்.

''எல்லாம் சரி... ஆனாலும் உங்களால முடியாத ஒன்றை அவரால செய்ய முடியும். அதனாலதான் அவரை குருவாக ஏற்றுள்ளேன்!'' என்றான் இளைஞன்.

இந்த குருவுக்கு அதிர்ச்சி. அவனை நிமிர்ந்து பார்த்தார் ''என்ன சொல்கிறாய் நீ?''

''ஆமாம்! அவரால் கோபப்படாமல் இருக்க முடியும். அடுத்தவரை குறை சொல்லவும் மாட்டார். இதையே பெரிய அற்புதமாக நான் நினைக்கிறேன்!''

இந்த குரு யோசிக்க ஆரம்பித்தார். இளைஞன் தொடர்ந்தான் ''ஐயா! ஆத்து மேல நடக்கிற அதிசயத்தைவிட, கோபப்படாம நடக்கிறதுதானே பெரிய அதிசயம்?!'' என்றவன் கம்பீரமாக ஆற்றைக் கடந்து அக்கரைக்குச் சென்றான்.

ஆம்... ஆன்மிகத்தில் ஈடுபடுகிறவர்கள், ஆத்திரத்துக்கு இடம் கொடுக்கக் கூடாது.

சர்வாதிகாரி ஒருவன், மரணப்படுக்கையில் கிடந்தான். டாக்டர்கள் வந்து சோதித்து, கைவிரித்த நிலையில் ஆன்மிகவாதி ஒருவர் அங்கே வந்தார். 'செத்துகிட்டிருக்கிறவன், மனசாந்தியோடவாவது மறுலோகம் போய்ச் சேரட்டும்!' என்று நினைத்தார்.

எனவே, ''மேன்மை தங்கிய அதிபரே! தங்கள் எதிரிகள் அனைவரையும் மன்னிச்சுடுறீங்களா?'' என்றார்.

சர்வாதிகாரி இப்படி பதில் சொன்னான் ''ஐயா! நான் மன்னிக்கறதுக்குத் தயாரா இருக்கேன். ஆனா இப்போ எனக்கு விரோதிகளே இல்லை. ஏன்னா... அவங்களை ஏற்கெனவே நான் சுட்டுத் தள்ளிட்டேன்!''

## 'நான் யார்..?'


தென்கச்சி சுவாமிநாதன்



ஆன்மிகத்தில் அதிக ஈடுபாடு கொண்ட இரண்டு நண்பர்கள் பேசிக் கொண்டனர்.

''ஆன்மிகத்தின் உச்சத்துக்குப் போக வேண்டும் என்று ஆசைப்படுகிறேன். இதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?''

''ஆசைகளை எவன் ஒருவன் விட்டானோ... அவன், ஆண்டவனைத் தொட்டவன் ஆவான். ஆண்டவனைத் தொடுவதே ஆன்மிகத்தின் உச்சம்!''

''ஆசைகள் இல்லாமல் ஒருவன் இருக்க முடியுமா?''

''ஒவ்வொரு மனிதனுக்குள்ளேயும் அப்படி ஒருவன் இருக்கிறான். ஆன்மிகம் என்பது அவனை அடையாளம் கண்டுகொள்கிற முயற்சிதான்!''

''அப்படியா...?''

''இப்போது நீ ஒருவனா... ரெண்டு பேரா...?''

''நான் ஒருவன்தான்...!''

''இப்படித்தான் எல்லோரும் நினைச்சிக்கிட்டி ருக்கோம். ஆனா நாம உண்மையில் மூணு பேர்! நம்மைப் பற்றி நாம என்ன நினைக்கிறோமோ அது ஒருவன்! நம்மைப் பற்றி அடுத்தவர் என்ன நினைக்கிறாரோ அது இரண்டாமவன்! நம்மைப் பற்றி நமக்கும் தெரியாமல், அடுத்தவருக்கும் தெரியாமல் ஒருவன் இருக்கிறான்! அவன் நமக்குள்ளே இருக்கிறான்! அவனே மூன்றாவது மனிதன். இவனை அடையாளம் காணும்போதுதான் ஆன்மிகப் பயணம் முழுமை பெறுகிறது!''

''அந்த மூன்றாவது மனிதனைக் கண்டுபிடிப்பது முடிகிற காரியமா?''

''அகங்காரத்துக்கு விடைகொடுத்து அனுப்பி விட முடிந்தால் இது சுலபமாக சாத்தியம். ஆனால் இன்றைய மனிதனை நினைத்தால் பரிதாபமாக உள்ளது.''

''என்ன சொல்கிறீர்கள்?''

''அவனுக்கு முதல் மனிதனையே அடையாளம் தெரிவதில்லை...! அதாவது, அவன் யார் என்றே அவனுக்குத் தெரியவில்லை.''

''புரியவில்லையே...?''

''ஒரு கதை சொல்கிறேன்! அந்த மதுக்கடையில் நிறைய பேர் மயக்கத்தில் இருந்தார்கள். நள்ளிரவு நேரம். ஒருவன் வேகமாக உள்ளே ஓடி வந்து கத்தினான் 'ஏய்... வெங்கட்ராமா...! உன்னோட வீடு தீப்பிடிச்சிக்கிட்டு எரியுது' என்றான். ஒருவன் திடீரென பதறிப் போய் எழுந்தான். ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து வெளியே ஓடினான். நீளமான சாலை ஒன்றில் அரை மணி நேரம் ஓடி இருப்பான். சட்டென்று 'பிரேக்' போட்டது மாதிரி ஓர் இடத்தில் நின்றான். பின்னர் திரும்பினான். மெதுவாக நடந்தான். பழையபடி மதுக்கடைக்கே வந்து சேர்ந்தான். அங்கே இருந்த ஒருவர் ஆச்சரியத் துடன் கேட்டார்

'ஏன் திரும்பி வந்துட்டே?'

'பாதி தூரம் ஓடிய பிறகுதான் 'நான் யார்?' அப்படிங்கறது எனக்குப் புரிஞ்சுது!'

'என்ன புரிஞ்சுது?'

'நான் வெங்கட்ராமன் இல்லே... சீனி வாசன்!' என்றான் திரும்பி வந்தவன்''

# கடவுளின் வேஷம்!



ஒரு கோயில் மண்டபம். அங்கு, கடவுளைப் பற்றி பேசிக் கொண் டிருந்தார் சாமியார் ஒருவர்.நிறையப் பேர் உட்கார்ந்து கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

இதை, மேலே இருந்து கவனித்துக் கொண்டி ருந்தார் கடவுள். 'இந்த மனிதர்கள் எப்பவும் நம்மைப் பற்றியே பேசுகிறார்களே!' என்று நினைக்கும் போது கடவுளுக்குப் பெருமையாக இருந்தது.

'சரி... நேரில் போய் அவர்களைப் பார்த்து விட்டு வரலாம்' என்று அங்கிருந்து புறப்பட்டார்.

சாமியார் பேசிக் கொண்டிருந்த கோயில் மண்டபத் தின் அருகே வந்து சேர்ந்தார். ஆலயத் தின் வெளியே இருந்த ஓர் அரச மரத்தின் அடியில் நின்றார்.

அப்போது, வெளியே வந்த பக்தர் ஒருவர், "வேஷப் பொருத்தம் பிரமா தமா இருக்கு!" என்றார் கடவுளைப் பார்த்து.

கடவுளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. "ஐயா, நான்தான் உண்மையான கடவுள்!" என்றார்.

உடனே, "என்கிட்டே சொன்னதோட வெச்சிக்க. வேற யார்கிட்டேயும் சொல்லிடாத. பிறகு, உன்னைப் பைத்தியக்கார ஆஸ்பத்திரியில கொண்டு போய் விட்டுடுவாங்க!" என்றார் பக்தர்.

"நான் சொல்றதைக் கொஞ்சம்..." - கடவுள் ஏதோ சொல்லத் துவங்குவதற்குள், அவரை இடை மறித்த பக்தர், "ஒண்ணும் சொல்ல வேணாம். முதல்ல இடத்தைக் காலி பண்ணு. கூட்டம் முடிஞ்சி, சாமியார் வெளியே வர்ற நேரம் இது... அதுக்குள்ளே போயிடு!" என்று கூறிச் சென்றார்.

வெளியே வந்த பக்தர்கள் எல்லாம் இவரைப் பார்த்துவிட்டு, சந்தேகத்தோடு விலகிப் போக ஆரம்பித்தார்கள்.

சாமியார் வந்தார். பார்த்தார். "ஏம்பா... இப்படி இங்கே வந்து கலாட்டா பண்றே? பேசாம போயிடு!"

"என்னைப் பற்றி பிரசங்கம் பண்ற உனக்குமா என்னை அடையாளம் தெரியலே?"

எதுவும் அவர்கள் காதில் விழவில்லை. கடைசியாக, கடவுளை ஓர் அறையில் தள் ளிப் பூட்டி விட்டுப் போய் விட்டார்கள்.

வேறு வழியில்லை. கடவுள், கண்களை மூடிக் கொண்டு உட்கார்ந்து விட்டார்.

நள்ளிரவு நேரம். கதவைத் திறந்து கொண்டு மெள்ள உள்ளே வந்தார் சாமியார். "கடவுளே! என்னை மன்னிச்சிக்குங்க... நீங்கதான் கடவுள்னு எனக்கு அப்பவே தெரியும்!"

"அப்புறம் என்ன... அந்த ஜனங்கள்கிட்டே சொல்ல வேண்டியதுதானே!"

"சொல்லி இருந்தா, என்னையும் பைத்தியம்னு சொல்லி உள்ளே தள்ளி இருப்பாங்க!"

கடவுள் சிந்திக்க ஆரம்பித்தார்.

'இந்த மனிதர்களுக்கு, இருக்கிற கடவுளைக் காட்டிலும் இல்லாத கடவுள் மீதுதான் அதிக நம்பிக்கை இருக்கிறது!' என்று மனதுக்குள் எண்ணி யவர் அங்கிருந்து மறைந்து போனார்.

## ஏன் கழுவினாள் குழந்தைகளை?

அந்தத் தெருவில், குழந்தைகள் சிலர் விளையாடிக் கொண்டிருந்தனர்.

பக்கத்தில் ஒரு சாக்கடை. அதில் சிலர் தவறி விழுந்து விட்டார்கள். தாய்மார்களில் ஒருத்தி இதைக் கவனித்துவிட்டாள். பதறிப் போய் ஓடி வந்தாள்.

எல்லாக் குழந்தைகளையும் தூக்கி வந்தாள்.

தெரு ஓரம் இருந்த குழாயைத் திறந்து விட்டு, எல்லா



குழந்தைகளையும் கழுவி சுத்தப்படுத்தினாள். அவர்களின் முகத்தைத் துடைத்து விட்டாள்.

இதற்குள் செய்தி கேள்விப்பட்டு எல்லாத் தாய்மார்களும் அங்கே ஓடி வந்தனர்.

ஆனால், அதற்குள் எல்லாக் குழந்தைகளையும் அந்தப் பெண்மணி சுத்தம் செய்திருந்தாள். அந்தக் குழந்தைகளின் தாய்மார்கள், அவளை நன்றிப் பெருக்குடன் பார்த்தார்கள்.

அவளுக்கு நன்றி கூறும் விதமாக, ''எல்லாக் குழந் தைகளையும் பாகுபாடு இல்லாமல் குளிப்பாட்டி சுத்தப்படுத்திய உங்களது சேவையைப் பாராட்டு கிறோம்!'' என்றனர்.

உடனே, ''நான் அப்படி செஞ்சதுக்கு இன்னொரு காரணமும் உண்டு!'' என்றாள் அவள்.

''என்ன அது?''

''எல்லாக் குழந்தைகளையும் கழுவினாத் தானே, என் குழந்தையை அடையாளம் காண முடியும்'' என்றாள் அவள்!

நண்பர்களே...

தன் குழந்தை எது என்பதைக் கண்டுபிடிப்பது அந்தத் தாயின் நோக்கம்.

நான் யார் என்பதைக் கண்டுபிடிப்பதுதான் ஆன்மிகத்தின் நோக்கம்.

உள்ளே இருக்கிற நமது உண்மையான முகம் நமக்கு அடையாளம் தெரிய வேண்டுமானால், அதை மூடி மறைத்திருக்கிற வேண்டாத சில அழுக்குகளை நாம் அப்புறப்படுத்த வேண்டி இருக்கிறது.

அந்த அழுக்குகள் எவை?

ஆணவம்... பொறாமை... பேராசை!

ஆன்மிகம் என்கிற நல்ல நீரைக் கொண்டு உங்களையும் இந்த சமுதாயத்தையும் கழுவுங்கள்.

அப்போது, நீங்கள் எவ்வளவு அழகானவர் என்பதும், இந்த உலகம் எவ்வளவு அழகானது என்பதும் உங்களுக்குப் புரியும்!

ஒன்றைத் தெரிந்து கொள்ளுங்கள்.

இந்த உலகத்தில் வாழ்வதற்குப் பொருள் வேண்டும்; வாழ்வதிலும் பொருள் வேண்டும்!

## கடவுள் இருக்கும் இடம் தெரியுமா?



கடவுள், உலகத்தை உண்டு பண்ணி னார். இந்த உலகம் அழகாகவும் அமைதியாகவும் இருந்தது. எனவே, இங்கேயே தங்கலாம் என்று முடிவு செய்தார். அதன்படியே தங்கினார்.

நாட்கள் நிம்மதியாக நகர்ந்தன.

மனிதர்கள் ஆசைப்பட ஆரம்பித்தனர். அவற்றை நிறைவேற்றிக் கொள்ள... தினமும் கடவுளைத் தேடி வந்து வேண்டுதல் செய்யத் தொடங்கினர். இதனால், கடவுளுக்கு நிம்மதி குறைய ஆரம்பித்தது.

சில பேர், "நாங்கள் விவசாயிகள். மழை பெய்ய வேண்டும்!" என்று கோரிக்கை விடுத்தனர்.

இன்னும் சிலரோ, "நாங்கள் மண்பாண்டம் செய்பவர்கள். எனவே, மழை பெய்யக் கூடாது!" என்று வேண்டினர்.

தேர்தல் வந்தது. அந்த தொகுதியில் போட்டியிடும் வேட்பாளர்கள் அத்தனை பேரும் 'நான்தான் வெற்றி பெற வேண்டும்' என்று வேண்டிக் கொண்டனர்.

கடவுளுக்கு, தலையைப் பிய்த்துக் கொள்ளலாம் போன்றிருந்தது. அந்த அளவுக்குக் குழம்பிப் போனார்!

திருடப் போகிறவர்களும் கூட தங்களுக்குக் கிடைப்பதில் ஒரு பங்கை உண்டியலில் போட ஆரம்பித்து விட்டனர்.

'இனி, இங்கே இருக்க முடியாது!' என்ற முடிவுக்கு வந்த கடவுள் யோசித்தார்... 'மனிதர்களால் கண்டுபிடிக்க முடியாத ஓர் இடத்தில் போய் உட்கார்ந்து கொள்ள வேண்டும். சரி... எங்கே போவது?'

"இமய மலையில் போய் உட்கார்ந்து கொள்ளுங்கள். எவரும் தொந்தரவு செய்ய மாட்டார்கள்!" என்றார் நாரதர். அப்படியே அங்கு போய் உட்கார்ந்து கொண்டார் கடவுள்.

ஆனால், கடவுளைத் தேடி அங்கேயும் வந்து செல்ல ஆரம்பித்தனர் மனிதர்கள்.

"நிலவில் போய் உட்கார்ந்து கொள்ளுங்கள்!" என்றார் நாரதர். ஆனால், நிலவையும் மனிதர்கள் விடவில்லை!

"இந்த மனிதர்களின் தொல்லைகளில் இருந்து நிரந்தரமாக நான் விடுபட வேண்டும். அதற்குப் பொருத்தமாக ஓர் இடத்தைச் சொல்லுங்கள்!" என்று கேட்டார் கடவுள்.

பின்னர், ஆழ்ந்து சிந்தித்து அவரே ஓர் இடத்தைக் கண்டுபிடித்து அங்கு போய் உட்கார்ந்து கொண்டார்.

மனிதனால் அடைய முடியாத இடம் அது. அங்கே கடவுள் நிம்மதியாக இருக்கிறார். ஆனால் பாவம்... மனிதர்கள்தான் அவரைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள்!

நண்பர்களே! கடவுள் ஒளிந்து கொண்டிருக்கிற அந்த ரகசிய இடத்தை உங்களுக்கு மட்டும் சொல்கிறேன். கொஞ்சம் காதைக் கொடுங்கள்.

அவர் மறைந்திருக்கும் இடம்... மனிதனுக்கு உள்ளேதான் இருக்கிறது!

# எங்கே இருக்கிறது வெளிச்சம்?



விவசாயி ஒருவன், தனது வயலில் விளைந்த பொருட்களுடன் சந்தைக்குச் சென்றான். பொருட்களை விற்றுத் தீர்த்தவன், கிடைத்த பணத்தைத் துணியில் மூட்டையாகக் கட்டிக் கொண்டு நடக்க ஆரம்பித்தான்.

இதை நோட்டமிட்ட திருடன் ஒருவன், 'எப்படி யாவது பண மூட்டையை அபகரித்து விட வேண்டும்!' என்ற எண்ணத்துடன் விவசாயியைப் பின்தொடர்ந்தான்.

இருட்டுவதற்குள் ஊருக்குச் சென்றுவிட வேண்டும் என்று வேக வேகமாக நடந்து கொண்டிருந்தான் விவசாயி. ஆனால், பாதி தூரத்தைக் கடக்கும் முன்பே இருட்டி விட்டது. வழியில் ஒரு சத்திரத்தைக் கண்ட விவசாயி, 'இரவு தங்கி விட்டு, விடிந்ததும் ஊருக்குப் போகலாம்!' என்ற முடிவுடன் உள்ளே நுழைந்தான்.

சத்திரத்தில், பாய்- தலையணை கொடுத்தார்கள். விவசாயி, நல்ல இடமாகப் பார்த்து பாயை விரித்துப் படுத்துக் கொண்டான். வேறு சிலரும் அங்கு படுத்திருந்தனர். சிறிது நேரத்தில், திருடனும் சத்திரத்தை அடைந்தான். தானும் பாய்- தலையணை வாங்கிக் கொண்டு விவசாயிக்கு அருகில் படுத்துக் கொண்டான்.

'நம் பணத்தைத் திருடவே இவன் பின்தொடர்கிறான்!' என்பது விவசாயிக்குப் புரிந்து விட்டது.

சற்று நேரத்தில்... எல்லோரும் அயர்ந்து தூங்கிக் கொண்டிருக்க, திருடன் மெள்ள எழுந்தான். விவசாயியின் துணி மூட்டையை அவிழ்த்தான். உள்ளே உணவுப் பண்டங்களும் துணிமணிகளும் இருந்தன. பணம் இல்லை. திருடனுக்குக் குழப்பம்! அருகில் இருந்த மற்ற மூட்டைகளையும் பிரித்துப் பார்த்தான். அந்த அறையில் இருந்த எல்லா மூட்டைகளையும் ஆராய்ந்தான். ம்ஹூம்... பணம் மட்டும் இல்லை! ஏமாற்றத்துடன் படுக்கையில் விழுந்தான்.

விடிந்தது. விவசாயி புறப்பட்டான். இப்போது, அவனது மூட்டையில் பணம் இருந்தது. இதைக் கண்ட திருடனுக்கு ஆச்சரியம்!

''ஐயா! பணத்தை எங்கே வைத்திருந் தீர்கள்?''- ஆர்வம் தாளாமல் கேட்டே விட்டான் திருடன்.

விவசாயி சொன் னான் ''தம்பி! சந்தையில் இருந்தே உன்னைக் கவனித்து வருகிறேன். உனது எண்ணத்தையும் அறிந்து கொண்டேன். ஆகவே, நேற்றிரவு நான் தூங்கவே இல்லை. தூங்குவது போல் நடித்தேன். எல்லா மூட்டைகளையும் நீ தேடியதை, நான் பார்த்துக் கொண்டுதான் இருந்தேன்.''

''சரி... பணத்தை எங்கே வைத்திருந்தீர்கள்?''

''நீ தேடாத இடத்தில் வைத்திருந்தேன்!''

''எங்கே?''

''உனது தலையணைக்கு அடியில்! என்னிடம் தேடியதற்குப் பதில், உன்னிடத்திலேயே நீ தேடி இருந்தால் பணம் கிடைத்திருக்கும்!'' என்ற விவசாயி அங்கிருந்து கிளம்பிச் சென்றான்.

திருடன் சிந்திக்க ஆரம்பித்தான். அவனுக்குப் புரிந்தது. 'வெளிச்சம் உள்ளே இருக்கிறது!'

## நீ உன்னை நம்புவதே முக்கியம்!



ஒரு நாள்... இரவு நேரம்! அந்த மருத்துவமனையில் இருந்து ஒருவன் வேகமாக வெளியே ஓடி வந்தான். அவன், வாயிலை அடையும் முன் மற்றொருவன் உள்ளே நுழைந்தான்.

"என்னாச்சு உனக்கு? ஏன் இப்படி ஓடி வர்றே?" - உள்ளே நுழைந்தவன் கேட்டான்.

"இதுவரைக்கும் ஒண்ணும் ஆகலே. இனிமேதான் ஆகணும்!" என்றான் வெளியேற முற்பட்டவன்.

"என்ன சொல்றே?"

"நாளைக்குக் காலையிலே எனக்கு ஆபரேஷன். அதான் பயந்து ஓடுறேன்!"

"அடப்பாவி! இதுக்கா பயந்து ஓடுறே? எனக்கும் ஆபரேஷன்தான். இந்தக் காலத்துல அறுவை சிகிச்சையெல்லாம் சர்வ சாதாரணம். பயப்படாதே!"

"நானும் துணிச்சலாத்தான் இருந்தேன். ஆனால், நர்ஸு சொன்னதைக் கேட்டுதான் பயம் வந்துடுச்சி!"

"அப்படி, என்ன சொன்னாங்க?"

"இது ஒரு சின்ன ஆபரேஷன்தான். இதுக்கெல்லாம் பயப்படக்கூடாது; தைரியமா இருக்கணும்னு சொன்னாங்க!"

"சரியாத்தான் சொல்லியிருக்காங்க. அப்புறம் என்ன பயம்?"

"ஐயோ... அந்த நர்ஸ், எங்கிட்ட சொல்லல. ஆபரேஷன் செய்யப்போற டாக்டர்கிட்ட சொன்னாங்க!" என்று கூறி விட்டு அந்த ஆசாமி வெளியே ஓட... உள்ளே நுழைந்த ஆசாமியும் ஓட்டமெடுத்தான். இருவரும் பெரிய ஆபத்திலிருந்து தப்பித்தனர். பிறகுதான் தெரிந்தது, அந்த மருத்துவமனையில் இருந்தது ஒரு போலி டாக்டர் என்று!

இன்று, எல்லாத் துறைகளிலும் 'போலி' ஊடுருவியுள்ளது, ஆன்மிகம் உள்பட!

போலி டாக்டர்கள் ஆபத்தானவர்கள். அதைவிட ஆபத்தான வர்கள் போலி சாமியார்கள்!

'பாதுகாக்கிறேன்' என்று அபயம் அளிக்கும் இந்த சாமியார்கள், பாதுகாப் புக் கைதிகளாக சிறையில் அடைக்கலம் ஆகி விடுகின்றனர். கடவுளை எண்ண வேண்டியவர்கள், கம்பிகளை எண்ணுகின்றனர்.

இந்த சந்தர்ப்பத்தில், சுவாமி விவேகானந்தரின் வார்த்தைகளை உங்கள் கவனத்துக்குக் கொண்டு வருகிறேன்...

'ஆயிரம் கடவுள்களை நம்புவதைவிட, உன்னை நீ நம்புவதே முக்கியம். உன்னை நம்பாமல் ஆயிரம் கடவுளை நம்பினால், உன்னைவிட நாத்திகன் வேறு எவரும் இல்லை!'

# ஒரு சீட்டு நூறு ரூபா?



"இவ்ளோ அவசரமா எங்கே போறே?" - வேகமாக ஓடும் ஆசாமி ஒருவனை வழிமறித்துக் கேட்டார் நம்மவர்.

"சேதி தெரியாதா உங்களுக்கு? நம்ம ஊருக்குப் புதுசா சாமியார் ஒருத்தர் வந்திருக்கார். அவரைப் பார்க்கத்தான் எல்லோரும் போய்க்கிட்டிருக்கோம்!" என்று மூச்சிரைக்கத் தெரிவித்தார் ஓடி வந்தவர்.

"அதுக்கு ஏன் இப்படி ஓடுறீங்க?"

"சீட்டு தீர்ந்து போச்சுன்னா?"

"என்னது சீட்டா?"

"ஆமாம்... அந்த சாமியார் சீட்டு விற்கிறார். ஒரு சீட்டு 100 ரூபாய்! அதை வாங்கினா, இதுவரைக்கும் செஞ்ச பாவம்லாம் போயிடும். பேசறதுக்கு நேரமில்லே. ஓடி வா என் கூட!"

இருவரும் ஊர் எல்லைக்கு ஓடினர்.

அங்கிருந்த ஒரு மண்டபத்தில், மக்கள் பெருந்திரளாகக் கூடியிருந்தனர். உள்ளே சாமியார், மளமளவென சீட்டுகளை விற்றுக் கொண்டிருந்தார். கூட்டத்தில் முண்டியடித்து சீட்டு வாங்கியவர்கள், 'அப்பாடா!' என்ற நிம்மதியுடன் வெளியே வந்து கொண்டிருந்தனர்.

நம்மவரும் அடித்துப் பிடித்து உள்ளே புகுந்தார். "எனக்கு ரெண்டு சீட்டு கொடுங்க" என்று 200 ரூபாயை நீட்டியவர், சீட்டை வாங்கிக் கொண்டு திரும்பினார்.

ஒருவழியாக விற்பனை முடிந்து, கூட்டமும் கலைந்தது. அன்றைய வசூலை எண்ணினார் சாமியார். 10,000 ரூபாய்க்கு மேல் சேர்ந்திருந்தது!

பணத்தை ஒரு மூட்டையாகக் கட்டி, தோளில் போட்டுக் கொண்டு மகிழ்ச்சியுடன் அடுத்த ஊருக்கு நடையைக் கட்டினார் சாமியார்!

இருட்டத் துவங்கியது. காட்டின் வழியே பயணித்துக் கொண்டிருந்தார் சாமியார். திடீரென, திருடன் ஒருவன் சாமியாரை வழிமறித்தான்.

சாமியாரிடம் கத்தியைக் காட்டி, "உங்கிட்ட இருக்கற பணத்தை மரியாதையா கொடுத்துடு. இல்லேன்னா, உன்னைக் கொன்னுருவேன்!" என்று மிரட்டினான்.

பதறிப் போனார் சாமியார். 'பணத்தை விட உயிரே முக்கியம்!' என்று எண்ணியவர், பண மூட்டையை திருடனிடம் கொடுத்தார். இருந்தாலும் ஓர் ஆற்றாமை... திருடனிடம் கேட்டார் "இது மகா பாவம், தெரியுமா உனக்கு?"

அவரைப் பார்த்துப் புன்னகைத்த திருடன், "தெரியும்! அதனாலதான் நான் ரெண்டு சீட்டு வாங்கினேன். இதுவரைக்கும் நான் கொள்ளையடிச்ச பாவம் தொலையறதுக்காக ஒரு சீட்டு; இப்ப உங்கிட்ட கொள்ளையடிக்கிறேனே... அந்தப் பாவம் தொலையறதுக்காக இன்னொரு சீட்டு!" என்று பதில் சொல்லி விட்டு இருட்டுக்குள் ஓடி மறைந்தான். சாமியார் சிலையாய் நின்று சிந்தித்தார். அவருக்கு ஓர் உண்மை புரிந்தது...

'ஆன்மிகம் எனும் போர்வையில், எல்லாரையும் எல்லா காலத்திலும் ஏமாற்றி விட முடியாது!'

# மயங்காதே மனமே!



'என்னை எவரும் அசைக்க முடியாது!' என்று சவால் விடும் மனிதர்கள் ஏராளம்! ஆனால், இப்படிப்பட்டவர்கள் கடைசியில் ஏமாந்து போகிறார்கள் என்பதே உண்மை.

'நம்மை, வேறு எவரோ ஒருவர் அசைத்துக் கொண்டிருக்கிறார்!' என்று எண்ணச் சொல்கிறது ஆன்மிகம். இந்த எண்ணமே அகந்தையைக் குறைக்க உதவுகிறது.

ஷ்மெல்னோ என்ற யூத மத குரு ஒருவர், அந்த ஊருக்கு வந்தார். இதையறிந்த ஊர் மக்கள் ஒன்று கூடினர். "நம்ம ஊருக்குப் புதுசா வந்திருக்கிற அந்த குருவை வரவேற்கணும். என்ன செய்யலாம்?" என்று கேட்டார் ஒருவர்.

"இன்று மாலை, அவருக்குப் பாராட்டு விழா நடத்துவோம்" என்றார் மற்றொருவர். அனைவரும் ஒப்புக் கொண்டனர். இதையடுத்து, குருவை நேரில் சந்தித்து தங்களது விருப்பத்தைத் தெரிவித்தனர். அவரும் சம்மதித்தார். அவ்வளவுதான்! அனைவரும் உற்சாகத்துடன் விழா ஏற்பாடுகளைக் கவனிக்க ஆரம்பித்தனர்.

அதே நேரம்... அந்த குரு, ஓர் அறைக்குள் நுழைந்து கதவைச் சாத்திக் கொண்டார். சிலர், அவருக்காக வெளியே காத்திருந்தனர். அறைக்குள் இருந்து ஏதேதோ சத்தம் வந்து கொண்டிருந்தது! குரு, தனக்குத் தானே ஏதோ பேசுவது போல் இருந்தது. ஆனால், தெளிவாக யூகிக்க முடியவில்லை!

'விழாவில் பேச வேண்டிய கருத்துகள் குறித்து ஒத்திகை பார்க்கிறார் போலும்!' என்பது சிலரது கருத்து. இன்னும் சிலரோ, 'பேசிப் பழகுவதற்கு அவர் என்ன பள்ளி மாணவரா?' என்று கேள்வி கேட்டனர்.

சிறிது நேரத்தில், அறைக் கதவு திறந்தது. குரு வெளியே வந்தார். அனைவரும் அவரருகே வந்தனர்.

"ஐயா! அறைக்குள் எதையோ திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தீர்களே... அதற்கு என்ன அர்த்தம்?" என்று கேட்டனர்.

அவர் சிரித்துக் கொண்டே சொன்னார் "ஒன்றும் இல்லை. விழாவில் 'இந்திரனே... சந்திரனே!' என்றெல்லாம் என்னைப் புகழ்வீர்கள். இந்த வார்த்தைகளைக் கேட்டதும், எனக்கு அகந்தை வந்து விடும். ஆகவே, இது போன்ற வார்த்தைகளை எனக்கு நானே பல முறை சொல்லிப் பார்த்துக் கொண்டேன். இப்போது, இந்த வார்த்தைகள் எனக்குப் பழகி விட்டதால், விழாவில் நீங்கள் புகழ்ந்து பேசினாலும் எனக்குக் கர்வம் ஏற்படாது அல்லவா?!"

புகழ்ச்சியால் மனம் மயங்கும் நேரத்தில், 'அகந்தை' எனும் விருந்தாளி நாம் அழைக்காமலேயே உள்ளே வரக் கூடும். ஆகவே, எச்சரிக்கை தேவை.

எலும்பு முறிவு ஆஸ்பத்திரியில் ஒருவர் படுத்துக் கிடந்தார். என்னாயிற்று அவருக்கு?

'என்னை எவரும் அசைக்க முடியாது' என்று சொல்லிக் கொண்டிருந்த அவரை, தரையில் கிடந்த வாழைப் பழத் தோல் ஒன்று அசைத்து விட்டதாம். இனி, அவர் அசைவதற்கு எவ்வளவு நாள் ஆகுமோ... யாருக்குத் தெரியும்?




தத்துவப் பேராசிரியர் ஒருவர், அதிகாலையில் வாக்கிங் செல்வது வழக்கம். தினமும் ஒரு மணி நேர நடைப் பயிற்சிக்குப் பின், சிறிது நேரம் ஓய்வெடுத்து விட்டு அன்றாடப் பணிகளில் ஈடுபடுவார்.

அன்றும் வழக்கம் போல்... கையில் ஊன்று கோலுடன் கிளம்பியவர், வாக்கிங் முடித்து வீட்டுக்குத் திரும்பிக்கொண்டிருந்தார். மிகவும் களைப்பாக இருந்தது!

'வீட்டுக்குச் சென்றதும், ஊன்றுகோலை சுவரில் ஒரு மூலையில் சாய்த்து வைத்து விட்டு, அப்படியே படுக்கையில் விழுந்து சிறிது ஓய்வெடுக்க வேண்டும்!' என்று திட்டமிட்டார் பேராசிரியர்.

இதோ... வீடு வந்துவிட்டது!

நேராக படுக்கை அறைக்குச் சென்றவர் ஊன்று கோலை படுக்கையில் வைத்தார். பிறகு, அருகிலிருந்த சுவரில் அப்படியே சாய்ந்து நின்று, கண்களை மூடிக் கொண்டார்!

பேராசிரியரின் திட்டம் சரிதான்; ஆனால், அதை செயல்படுத்திய விதத்தில்தான் குழப்பம்! அவர் படுக்க வேண்டிய இடத்தில் ஊன்றுகோல். ஊன்றுகோல் நிற்க வேண்டிய இடத்தில் பேராசிரியர்!

அப்போது, அந்த அறைக்கு வந்த பேராசிரியரின் மனைவி, சுவர் ஓரத்தில் கண் மூடி நிற்கும் கணவரைப் பார்த்ததும் அதிர்ந்தார்.

''ஐயையோ... என்ன ஆச்சு உங்களுக்கு?'' என்று அலறினார்.

சத்தம் கேட்டு கண் விழித்த பேராசிரியர், மெதுவாகச் சொன்னார் ''ஏன் சத்தம் போடறே? வாக்கிங் போனது கொஞ்சம் களைப்பா இருந்துச்சு. அதான், வாக்கிங் ஸ்டிக்கை சுவத்துல சாத்தி வெச்சுட்டு, நான் 'பெட்'ல 'ரெஸ்ட்' எடுத்துக்கிட்டி ருக்கேன்!''

அந்தப் பெண்மணி, கணவரின் செயலைக் கண்டு, தலையில் அடித்துக் கொண்டு அங்கிருந்து நகர்ந்தாள். இது உண்மையில் நிகழ்ந்த ஒரு சம்பவம்!

''வெளியே நடைபெறுகிற இந்த இட மாற்றம் வேடிக்கையாக இருக்கிறது. ஆனால், நம் உள்ளே நடைபெறும் ஓர் இடமாற்றம் வேதனை அளிக்கிறது. இன்றைய

மனிதர்களுக்கு இதயமும், வாயும் இடம் மாறி இருப்பதே காரணம்!'' என்றார் பெரியவர் ஒருவர்.

இதைக் கேட்டவர்களுக்குக் குழப்பம்!

அந்தப் பெரியவரே தொடர்ந்தார் ''இதயத்தைத் திறந்து வையுங்கள். வாயை மூடி வையுங்கள் என்கிறது ஆன்மிகம். நாம் என்ன செய்கிறோம்? வாயைத் திறந்து வைக்கிறோம். இதயத்தையோ மூடி வைத்திருக்கிறோம்!'' என்றார்.

# இப்ப நாம எங்கே இருக்கோம்?



அந்த இளைஞர்கள் இருவருக்கும் வேட்டையாடுவதில் அதிக விருப்பம். எனவே, அவர்கள் அடிக்கடி காட்டுக்குச் செல்வது வழக்கம்.

ஒரு நாள், சிறிய விமானம் ஒன்றை வாடகைக்கு எடுத்துக் கொண்டு காட்டுக்குச் சென்றனர். வேட்டையில் இரண்டு காட்டு எருமைகள் கிடைத்தன. அவற்றை எடுத்துக் கொண்டு புறப்பட்டனர்.

விமான ஓட்டுநர் சொன்னார் "ஐயா, இரண்டு எருமைகளது எடையையும் இந்த சிறிய விமானம் தாங்காது. வேண்டுமானால் ஒன்றை ஏற்றிக் கொள்ளலாம்!" என்றார்.

உடனே இளைஞர்கள், "கடந்த வாரமும் எங்களுக்கு இதே போல் இரண்டு எருமைகள் கிடைத்தன. அப்போது எங்களுடன் வந்த விமான ஓட்டுநர், இரண்டையும் ஏற்றிக் கொள்ள சம்மதித்தாரே!" என்றனர்.

"ஓ... அப்படியென்றால் சரி! இப்போதும் இரண்டு எருமைகளையும் ஏற்றலாம்!" என்றார் ஓட்டுநர்.

இளைஞர்கள், எருமையை விமானத்தில் ஏற்றினர். புறப்பட்ட சில நிமிடங்களிலேயே, பாரம் தாங்காமல் தடுமாறிய விமானம், வயல்வெளியில் விழுந்தது.

உள்ளே இருந்து வேட்டைக்கார இளைஞர்கள் இருவரும் மெள்ள வெளியே வந்தனர். ஒருவன் கேட்டான் "இப்ப நாம எந்த இடத்துல விழுந்திருக்கோம்?"

அடுத்தவன் பதில் சொன்னான் "போன வாரம் விழுந்தோமே... அதுக்குப் பக்கத்து வயல்லதான்!"

இந்த வேடிக்கை கதை விளக்குகிற உண்மை என்ன?

அனுபவங்கள் நமக்குப் பாடமாக வேண்டும். இல்லையெனில், இப்படித்தான் அடிக்கடி விழ வேண்டி இருக்கும்.

தவறு செய்த பக்தன் ஒருவன், தவறுக்குப் பரிகாரம் தேட கோயிலுக்குச் சென்றான்.

"கடவுளே, தப்பு செஞ்சுட்டேன். என்னை மன்னிச்சுடு!" என்று வேண்டினான். மன்னிப்பு கிடைத்தது. மன நிறைவுடன் திரும்பினான்.

அதன் பின்னர் அந்தத் தவறை அவன் செய்யாமல் இருக்க வேண்டும். அதுவே அவனுக்கும் பெருமை; ஆண்டவனுக்கும் பெருமை.

மன்னிக்கப்படுவது என்பது மறுபடியும் அந்தத் தவறைச் செய்யாமல் இருக்கவே!

ஆன்மிகத்தை தவறாகப் புரிந்து கொண்டால், விளைவுகள் வேறு மாதிரி ஆகிவிடும்.

தமாஷான ஓர் உதாரணம்...

"ஆண்டவன் நம்ம பாவங்களை மன்னிக் கணும்னா நாம என்ன செய்யணும்?"

"நாம முதல்ல பாவங்களைச் செய்யணும்!"

# எதை விட்டுக்கொடுப்பது?



ஓர் ஊரில் பெரியவர் ஒருவர் வாழ்ந் தார். அவருக்கு நிறைய சீடர்கள். இவர்கள் அனைவரும் பெரியவர் மீது அன்பைப் பொழிந்தனர். அவருக்காக எதையும் செய்யத் தயாராக இருந்தனர். பெரியவரது உலக வாழ்க்கை நிறைவு பெறும் நேரம் வந்தது. அவரைத் தேடி வந்த கடவுளின் தூதர், "ஐயா! உங்களை அழைத்துப் போக வந்திருக்கிறேன்!" என்றார். சீடர்கள் துடித்துப் போனார்கள்.

"இன்னும் சிறிது காலம் அவரை இந்த உலகத்திலேயே இருக்க விடுங்களேன்!" என்று கடவுளின் தூதரிடம் மன்றாடினர்.

"இந்த உலகத்தில் அவர் வாழ வேண்டிய காலம் முடிந்து விட்டதே!" என்றார் கடவுளின் தூதர்.

"வேறு வழி இல்லையா?" என்று குரலில் சோகம் ததும்பக் கேட்டனர் சீடர்கள்.

"ஒரே ஒரு வழிதான் உள்ளது!" என்றார் தூதர்.

"என்ன வழி? தயவுசெய்து சொல்லுங்கள்!" - ஆர்வத்துடன் கேட்டனர் சீடர்கள்.

"அவருக்காகக் கொஞ்சம் தியாகம் செய்ய நீங்கள் முன்வர வேண்டும்!" என்றார் தூதர்.

உடனே, "பெரியவருக்காக எங்கள் உயிரைக் கொடுக்கவும் தயாராக இருக்கிறோம்!" என்றனர் சீடர்கள். இதைக் கேட்ட தூதர், "உயிர் வேண்டாம். உங்கள் வாழ்நாளில் ஆளுக்குக் கொஞ்சம் இவருக்குக் கொடுத்தால்... அதை, இவரது ஆயுள் கணக்கில் வரவு வைத்து விடலாம்!" என்றார்.

முதலில் ஒருவன் வந்தான். "என் ஆயுளில் இரண்டு வருடத்தைத் தருகிறேன்!" என்றான்.

இன்னொருவன், "ஒரு வருடம் தருகிறேன்!" என்றான்.
மூன்றாவதாக ஒருவன், "ஒரு மாதம்!" என்றான். எதையுமே
செலவு செய்து பழக்கமில்லாத ஒருவன், "எனது ஆயுளில் ஒரு நிமிட நேரத்தை இவருக்காகத் தருகிறேன்!" என்றான்.

கடைசியாக வந்த ஒருவன் சொன்னான். "இருபது வருடங்களை எடுத்துக் கொள்ளுங்கள்!"

இதைக் கேட்ட கடவுளின் தூதருக்கு ஆச்சரியம். "இது ரொம்ப அதிகம் இல்லையா?" என்று கேட்டார். உடனே அந்த ஆசாமி சொன்னான் "நான் சொன்ன இருபது வருடங்கள் என் மனைவியின் வயதிலிருந்து!"

நண்பர்களே! உலகில், எதுவுமே உங்களுடையது இல்லை என்பதை உணருங்கள். அப்படி உணரும்போதுதான் நீங்கள், ஆன்மிகத்தில் முதல் அடியை எடுத்து வைக்கிறீர்கள்.

இன்னொன்றையும் புரிந்து கொள்ளுங்கள்.

'இது என்னுடையது' என்று நினைக்கும் வரை, எதையும் விட்டுக்கொடுக்க நாம் தயாரில்லை. 'எதுவும் என்னுடையது அல்ல!' என்கிற பக்குவம் வரும்போது, விட்டுக்கொடுக்க நம்மிடம் ஏதும் இருப்பதில்லை!

# முகவரி தேடி அலைகிறீர்களா?



இளைஞன் ஒருவன், கையில் ஒரு துண்டுச் சீட்டுடன் அங்கும் இங்கும் அலைந்து கொண்டிருந்தான்!

அந்த வழியாக வந்த பெரியவர் ஒருவர் இவனைப் பார்த்து, "ஏன் இப்படி அலைந்து கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டார்.

"ஒரு முகவரியைத் தேடி அலைகிறேன். இன்னும் கண்டுபிடிக்க முடியவில்லை!" என்றான் இளைஞன். "இப்படிக் கொடு அந்தச் சீட்டை!" என்று சீட்டை வாங்கிப் பார்த்தார் பெரியவர். அந்த முகவரி அவருக்குத் தெரிந்த இடம்தான்.

"வா என்னுடன்!" என்றவர், இளைஞனைத் தன்னுடன் அழைத்துச் சென்றார்.

வழியில் ஒரு நாய், தன்னைத்தானே சுற்றிக் கொண்டிருந்தது! அதை சுட்டிக்காட்டிய பெரியவர், "அந்த நாயைக் கவனித்தாயா? அது, தன் வாலை கவ்வ முயற்சிக்கிறது. ஆனால் முடியவில்லை!" என்றார்.

"ஆமாம், உண்மைதான்!"_ இளைஞனும் ஆமோதித்தான்.

பெரியவர் தொடர்ந்தார் "ஆனால், பாம்பு அப்படியல்ல! பாம்பால் தனது வாலை தானே கவ்விக் கொள்ள முடியும். வேறு எந்த உயிரினத்துக்கும் இது சாத்தியம் இல்லை. எனவேதான், 'பாம்பை போல் அறிவுள்ளவனாக இரு' என்கிறார் இயேசு!"

"அப்படியென்றால்..?"

"உன்னையே நீ அறிவாய்!"

"புரியவில்லையே!"_ இளைஞன் குழம்பினான்.

"குண்டலினி சக்தி பற்றி கேள்விப் பட்டிருக்கிறாயா? அது, மனிதனின் உள்ளே இருக்கும் சக்தி. அதற்கு அடையாளமே பாம்புதான். அதை, 'பாம்பு சக்தி'

என்றுதான் சொல்வார்கள்!"

"நமக்குள்ளே அது எங்கே இருக்கிறது?"

"நமது மூலாதாரத்தில் சுருண்டு கிடக்கிறது. அதை விரிவடையச் செய்து, மேலே கொண்டு வந்து புருவ மத்தியில் நிறுத்தும் முயற்சிதான் காயகல்ப பயிற்சி!"

"ஐயா, எனக்கு ஒரு சந்தேகம்!"

"என்ன?"

"முகவரி எங்கே இருக்கிறது என்று நான் தேடிக் கொண்டிருக்கிறேன்... நீங்களோ, மூலாதாரம் எங்கிருக்கிறது என்பது பற்றி சொல்லிக் கொண்டிருக்கிறீர்கள்! இரண்டுக்கும் என்ன சம்பந்தம்?"

"இருக்கிறது... இப்போது, அதை நீ தெரிந்து கொள்ள வேண்டுமா?"
"ஆமாம்!"

"இந்தா... உன் துண்டுச் சீட்டு! மறுபடியும் படித்துப் பார். அந்த முகவரி எங்குள்ளது என்பது புரிகிறதா?" வாங்கிப் பார்த்தான்.

"இது எனக்குத் தெரிந்த இடம்தான். இனி, யாரும் எனக்கு வழிகாட்ட வேண்டியதில்லை!" என்றான்.

"அப்படியானால், பாம்பு தன் வாலைக் கண்டுபிடித்து விட்டது... நீ போகலாம்! அதற்கு முன், அது யாருடைய முகவரி என்பதைச் சொல்லிவிட்டுப் போயேன்!"

"ஹி... ஹி! எனது முகவரிதான்!"

## காதுக்கும் கடவுளுக்கும் என்ன சம்மந்தம்?



வெள்ளைத் தாளில் ஏதோ வரைந்து கொண்டிருந்தாள் ஒரு சிறுமி. அந்தப் பக்கமாக வந்த பெரியவர் ஒருவர், "என்னம்மா வரைகிறாய்?" என்று கேட்டார்.

"கடவுளை வரைகிறேன்!" என்றாள் சிறுமி.

பெரியவருக்கு வியப்பு! "அதெப்படி... கடவுளை, எவரும் பார்த்ததே இல்லையே?" என்றார்.

"அப்படியா... கொஞ்சம் பொறுங்கள். நான் வரைந்து முடித்ததும் பாருங்கள்!" என்றாள் அந்த சிறுமி. பெரியவருக்கு ஆச்சரியம் அதிகரித்தது. அங்கேயே காத்திருந்தார். சிறிது நேரத்தில், சிறுமி வரைந்து முடித்ததும் ஓவியத்தை வாங்கிப் பார்த்தார் பெரியவர், "யாரம்மா இது?" என்று கேட்டார்.

"என் அம்மா!" _ சிறுமி பதிலளித்தாள்.

"உன் அம்மா, கடவுள் என்று யார்சொன்னது?"

"நேத்திக்குக் கோயில்ல பேசும்போது, 'அன்புதான் கடவுள்'னு நீங்கதானே சொன்னீங்க. அதான்... என் அம்மாவை வரைஞ்சேன்!" என்றாள் சிறுமி.

இந்தப் பெரியவரின் பேச்சு, அந்தச் சிறுமியின் மனதில் சரியான திசையையே காட்டியிருக்கிறது. ஆனால், இன்றைக்குப் பலர், ஆண்டவனை ஆயுதம் தாங்கிய போராளியாகக் காட்டிக் கொண்டிருக்கிறார்கள். அதன் விளைவு... பிள்ளைகள் பயந்து போகிறார்கள்!

பெரியவர் ஒருவர், பள்ளி மாணவர்களிடையே பேசும்போது விளையாட்டாகச் சொன்னார் "மாணவர்களே! நீங்க ஏதாவது தப்பு பண்ணினால், கடவுள் காதைப் பிடிச்சித் திருகுவார்!"

***அன்றிரவு, மாணவன் ஒருவன் வீட்டில் படுத்திருந்தான். அவனுடைய அம்மாவிடம், ''இதோ பாரு... நாளைக்குக் காலையில சீக்கிரம் எழுப்பி விடு. நான் செங்கல்பட்டு வரைக்கும் போகணும்'' என்றார் அப்பா!***

***இதை காதில் வாங்கிய மாணவன், அப்பாவுக்கு சிரமம் வேண்டாம் என்று நினைத்து, அவனே அதிகாலையில் எழுந்து புறப்பட்டு செங்கல்பட்டுக்குச் சென்றான். அம்மாவும் அப்பாவும் பிள்ளையைக் காணாமல் கலங்கித் தவித்தனர்.***

***மாலையில் வீடு திரும்பியவனிடம், ''எங்கேடா போயிருந்தே?'' என்றார் அப்பா, கோபத்துடன்.***

***''நேத்து ராத்திரி... நீங்க அம்மாகிட்டே சொல்லிக்கிட்டிருந்ததைக் கேட்டேன். நீங்க வீணா அலைய வேணாமேனுதான் செங்கல்பட்டுக்குப் போயிட்டு வந்தேம்பா!''***

***''இதை யாருடா காதுல வாங்கச் சொன்னது? எந்தக் காது அது?'' என்றபடி, மகனின் காதைப் பிடித்துத் திருகினார். காது கையோடு வந்துவிட்டது!***

***பதறிப் போன அப்பா, மகனை அழைத்துக் கொண்டு காதையும் கையில் எடுத்துக்கொண்டு மருத்துவமனைக்கு ஓடினார். அங்கு, பழையபடி காதை ஒட்ட வைத்து விட்டனர். இரண்டு நாள் கழித்து வீட்டுக்குத் திரும்பினர்.***

***அப்போது, எதிரே ஒரு நாய் ஓடி வந்தது. அதற்கு இரண்டு காதுகளும் இல்லை!***

***''என்ன ஆச்சு இதுக்கு?'' என்றார் அப்பா.***

***உடனே மகன் சொன்னான் ''அது ரெண்டு தடவை செங்கல்பட்டுக்குப் போயிட்டு வந்திருக்கும்!''***

# ‘கடவுளைக் காண வேண்டும்!’



தென்கச்சி சுவாமிநாதன்



‘கடவுளைப் பார்க்க வேண்டும்!’ என்று விரும்பினான் ஒருவன்.

அவனைச் சந்தித்த ஞானி ஒருவர், “கடவுளைப் பார்ப்பது இருக்கட்டும். முன்னதாக கடலைப் பார்க்கலாம் வா!” என்று அழைத்துச் சென்றார்.

இருவரும் கடற்கரையை அடைந்ததும், ஞானி ஒரு கதை கூறினார்: “இந்தக் கடலில் வசிக்கும் ஒரு மீனுக்கு, ‘கடல் எங்கே இருக்கிறது?’ என்று அறிய ஆவல். பலரையும் கேட்டுப் பார்த்தது. ‘நாங்களும் கேள்விப் பட்டிருக்கிறோம்; ஆனால் அது எங்கே இருக்கிறது என்றுதான் தெரியவில்லை’ என்றே பதில் வந்தது.

ஏமாற்றத்துடன் அங்குமிங்கும் அலைந்து கொண்டிருந்த மீனின் எதிரில், வேறொரு பெரிய மீன் வந்தது. பார்ப்பதற்கு கொஞ்சம் அனுபவசாலி போலத் தோன்றியதால், அந்தப் பெரிய மீனிடமும் தனது கேள்வியைக் கேட்டது சிறிய மீன்.

சற்றே யோசித்த பெரிய மீன், ‘நீ அங்கேதான் பிறந்தாய்; அங்கேதான் வளர்கிறாய்; அங்கேதான் மறையப் போகிறாய்!’ என்றது.

இந்தப் பதிலில் திருப்தி இல்லாத சிறிய மீன் மீண்டும் கேட்டது: ‘சரி... அது எங்கே இருக்கிறது?’

‘அது தெரியாது!’ என்ற பெரிய மீன், அங்கிருந்து நழுவியது.

‘இனி, யாரைக் கேட்கலாம்?’ என்று சிந்தித்தபடியே நீந்திய அந்த மீன் எதிர்பாராவிதமாக கரைக்கு அருகில் வந்து விட்டது. அலைகளின் வேகத்தில் கரையில் சென்று விழுந்தது. இப்போது அந்த மீனுக்கு பதில் கிடைத்தது: ‘இதோ.. இதுவரை நான் தேடிக் கொண்டிருந்த கடல் என் கண்ணெதிரில் தெரிகிறது!’

அத்துடன் மற்றொரு விஷயமும் அதற்குப் புரிந்தது. ‘இருக்கிறவரை... நாம் இருக்கும் இடம் நமக்கு எப்படித் தெரியும்? விலகி வெளியே வந்தால்தானே அது புரியும்!’ என்பதையும் உணர்ந்தது அந்த மீன்!” என்று கதையை முடித்தார் ஞானி.

கதையைக் கேட்டவன் எழுந்து நின்று, “சுவாமி! எனக்கு விடை கொடுங்கள்!” என்றான்.

ஞானி கேட்டார்: “கடவுளைப் பார்க்க வேண்டும் என்றாயே?”

“என்னை நானே எப்படிப் பார்க்க முடியும்? என்னை விட்டு நான் விலகினால்தான் அது சாத்தியம்!” என்று கூறி விட்டுப் புறப்பட்டான் அவன்!

இன்றைய பக்தன் ஒரு வகையில் விவரம் தெரிந்தவனாகவே இருக்கிறான். ‘தான் வேறு... இறைவன் வேறு!’ என்ற எண்ணம் அவனிடம் இல்லை. எனவேதான் இறைவனிடம் நைவேத்தியத்தைக் காண்பித்து விட்டு, தானே அவ்வளவையும் சாப்பிட்டு விடுகிறான்! தவிர, தனக்குப் பிடிக்காத எதையும் இறைவனுக்குப் படைப்பதில்லை அவன்!

ஒரு விஷயம்... ‘நம் உடல், கோயில் மாதிரி’ என்பார்கள். இன்றைய மனிதன், ஒரு வெற்றுக் கோயில். உள்ளே கடவுள் இருக்கும் இடம் காலியாக இருக்கிறது!



## பூவா? தலையா?



"கடவுள் இருக்கிறாரா? இல்லையா?"

"நீ என்ன நினைக்கிறாய்?"

"இருக்கிறார் என்று நினைக்கிறேன்!"

"அப்புறம் ஏன் என்னிடம் கேட்கிறாய்?"

இதைக் கேட்டதும் முதலாமவர் தலை குனிந்தார்!

நண்பர் சொன்னார் "இருக்கிற ஒரு பொருளை, 'இருக்கிறதா?' என்று எவரும் கேட்பதில்லை. இதோ, என் கையில் ஒரு புத்தகம் வைத்திருக்கிறேன். இந்தப் புத்தகம் இருக்கிறதா என்று நீங்கள் கேட்க மாட்டீர்கள். ஏனெனில் அது இருக்கிறது! ஆக... இல்லாத ஒன்றின் மீதுதான் உங்களுக்கு சந்தேகம் வரும் - இருக்கிறதா, இல்லையா என்று!"

மேலும் தொடர்ந்த நண்பர், "இருந்தாலும் அவன் இல்லாமல் இங்கே ஓர் அணுவும் அசையாது!" என்று கூறி விட்டு, அங்கிருந்த ஆலயத்தை நோக்கி நடந்தார்.

ஆத்திக - நாத்திக வாதம், இந்த உலகம் உள்ளவரையிலும் இருக்கும் என்கிறார்கள் சிந்தனையாளர்கள் சிலர்.

ஒவ்வொருவரும் அவரவர் கொள்கையில் பிடிவாதமாக இருப்பார்கள்; விட்டுக்கொடுக்க மாட்டார்கள்!

நண்பர்கள் இருவர், ஒரு கோயில் வாசலில் தற்செயலாகச் சந்தித்தனர். 'கடவுள் உண்டா, இல்லையா?' என்ற அதே விவாதம் ஆரம்பமானது!

ஒரு கட்டத்தில்... "ஒரு சோதனை செய்து பார்க்கலாமா?"
என்றான் ஒருவன்.

"என்ன செய்யலாம்?"

முதலாமவன் சொன்னான் "இதோ பார்... என் கையில் வட்டமான ஒரு தகடு! இதன் ஒரு பக்கத்தில் கறுப்புப் புள்ளி ஒன்று வைக்கிறேன். பிறகு, இதை ஆகாயத்தில் தூக்கி வீசுகிறேன். தகடு கீழே விழுந்ததும்... புள்ளி இருக்கும் பக்கம் மேலே இருந்தால், 'கடவுள் இருக்கிறார்' என்று அர்த்தம். வெற்றுப் பக்கம் இருந்தால், 'இல்லை' என்று அர்த்தம். இதை, கடவுளே முடிவு செய்யட்டும்!"

"கடவுள் முடிவு செய்ய மாட்டார்... தகடுதான் முடிவு செய்யப் போகிறது!" என்றான் இரண்டாமவன்.

வட்டத் தகடு ஆகாயத்தில் வீசப்பட்டது. அது, கீழே விழுந்ததும், ஆர்வத்துடன் குனிந்து பார்த்தனர். வெற்றுப் பக்கம் மேலே இருந்தது!

'கடவுள் இல்லை' என்றவன் துள்ளிக் குதித்தான்.

'உண்டு' என்று வாதிட்டவன் குறுக்கிட்டான் "பொறு! நான்தான் ஒரு தவறு செய்து விட்டேன்!"

"அப்படி என்ன தவறு?"

"தவறான பக்கத்தில், புள்ளி வைத்து விட்டேன்!"

இன்றைய பக்தி இப்படித்தான் போய்க் கொண்டிருக்கிறது. ஒன்றைப் புரிந்து கொள்ளுங்கள்...

ஆன்மிகம் என்பது, ஆராயப்பட வேண்டிய ஒன்றல்ல.; அது, அனுபவிக்க வேண்டிய ஓர் ஆனந்தம்!

# ஆன்மிக மழை பொழியுமா?

அந்த புத்த மடாலயத்தில், தலைமைத் துறவி அமர்ந்திருக்க, எதிரில் பணிவாக நின்றிருந்தனர் சீடர்கள்.



துறவி, தம்மிடம் இருந்த ஏதோ ஒன்றை எடுத்து சீடர்களிடம் கொடுத்தார். அவர்கள், அதை ஆர்வமுடன் வாங்கிப் பார்த்தனர். அது... களிமண்ணால் ஆன அழகிய புத்தர் சிலை.

"இது சாதாரண சிலை அல்ல. மிகவும் சக்தி வாய்ந்தது. இதை, நீங்கள் பத்திரமாக பாதுகாக்க வேண்டும்!" என்றார் துறவி.

அவரது எச்சரிக்கை சீடர்களுக்குப் புரிந்தது. ஏனெனில், அந்தக் காலத்தில் கொள்ளையர்கள் நடமாட்டம் அதிகமாக இருந்தது. கையில் எது கிடைத்தாலும் பறித்துச் சென்று விடுவார்கள் கொள்ளையர்கள்!

'புத்தர் சிலையை எப்படிப் பாதுகாப்பது?' என்று யோசித்த சீடர்கள், இறுதியாக ஒரு முடிவுக்கு வந்தனர். 'இந்தச் சிலையை ஒரே இடத்தில் வைத்திருக்கக் கூடாது.

அடிக்கடி இடம் மாற்றிக் கொண்டே இருக்க வேண்டும்' என்று திட்டமிட்டனர். அதாவது, இன்றிரவு ஓர் இடம். நாளை வேறு ஓர் இடம். இப்படியே புத்தர் சிலையைப் பாதுகாத்து வந்தனர்.

இதுவோ களிமண் சிலை. இதை... களவு போகாமல் பாதுகாப்பதுடன், கரைந்து போகாமலும் பார்த்துக் கொள்ள வேண்டுமே! எனவே, புத்தர் சிலையைப் பாதுகாப்பதில் அதிக கவனம் செலுத்தினர் சீடர்கள். ஆனால், அது அவ்வளவு சுலபமாக இல்லை!

ஒரு நாள்... அவர்கள், புத்தர் சிலையை வைத்திருந்த இடத்துக்கு நேர் மேலே, கூரையில் இருந்து மழை நீர் ஒழுகிச் சிலையின் மீது விழுந்தது. அதிர்ச்சியுற்ற சீடர்கள் ஓடிப் போய் சிலையை கையில் எடுத்தனர். அப்போதுதான் அவர்களுக்கு ஓர் உண்மை புரிந்தது. அது களிமண் சிலை அல்ல; அழகிய பொற்சிலை!

சரி... களிமண் எப்படி பொன்னாக மாறியது?

நேராக துறவியிடம் சென்று விளக்கம் கேட்டனர் சீடர்கள். அந்தத் துறவி சிரித்துக் கொண்டே சொன்னார் "அது பொன் சிலைதான்! கொள்ளையர்கள் இந்தச் சிலையைத் திருடிச் செல்லாமல் இருப்பதற்காக, சிலையின் மீது களி மண்ணைப் பூசி வைத்தேன்." வெளியே உள்ளது கரைய... உள்ளே உள்ளது தெரிந்தது. இன்றைய மனிதர்களும் களிமண் சிலை போலவே வாழ்கின்றனர். உள்ளே இருக்கிற அவர்களையே, அவர்களுக்கு அடையாளம் தெரியாமல் அலைந்து கொண்டிருக்கின்றனர்.

பயம், பேராசை, கோபம், ஆணவம், பொறாமை...இவை விலகினால்தான் வெளிச்சம் உள்ளே வரும். அப்போதுதான், 'உள்ளே என்ன இருக்கிறது?' என்கிற உண்மை புரியும்.

ஆன்மிக மழை எப்போது பொழியும்?

அடையாளம் நமக்கு எப்போது தெரியும்?

அதற்கான நேரம் வர வேண்டும். களிமண் சிலைக்கே எவ்வளவு காலம் தேவைப்பட்டது?!

## 'கடவுள் உன்னை நம்புகிறாரா?'

வெளிநாடு ஒன்றில் நடந்ததாகச் சொல்லப்படும் வேடிக்கையான ஒரு சம்பவம்



இரவு நேரம். அந்தப் பெரிய வீட்டில் திருடன் ஒருவன் நுழைந்தான். ஒரு பக்கம் படுக்கை அறை; மற்றொரு பக்கம் பணப்பெட்டி இருக்கும் அறை. இதைச் சுலபமாக அடையாளம் கண்டு கொண்ட அந்த அனுபவசாலி திருடன், மெள்ள பணப்பெட்டி இருக்கும் அறைக்குள் நுழைந்தான். பீரோவை நெருங்கினான். அதன் கைப்பிடியில் ஏதோ எழுதப்பட்டிருந்தது!

'இந்த பீரோவைத் திறக்க நீங்கள் அதிகம் சிரமப்பட வேண்டாம். ஏனெனில், இது பூட்டப்படவே இல்லை. கைப்பிடியைத் திருகினால் போதும், பீரோ திறந்து கொள்ளும்!' என்ற அந்த வாசகத்தைப் படித்தவன் குஷியானான். 'ஆஹா... வேலை சுலபமாக முடிந்து விடும் போல் இருக்கிறதே!' என்று உற்சாகம் அடைந்தான்.

மீண்டும் ஒரு முறை படுக்கை அறையை நோட்டம் இட்டான். எல்லோரும் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தனர்.

'பணத்தை அள்ளிச் செல்வது ரொம்பவே சுலபம்!' என்ற எண்ணத்துடன், பீரோவின் கைப்பிடியை மெள்ள திருகினான். அவ்வளவுதான்!

உயரே இருந்த கனமான மண் மூட்டை ஒன்று 'பொத்'தென்று அவன் தலையில் விழுந்தது. வலியில் அலறினான் திருடன். இதையடுத்து, வீட்டில் இருந்தவர்கள் விழித்துக் கொண்டனர். எல்லா விளக்குகளும் எரிந்தன.

அபாயச் சங்கும் ஒலித்தது. அக்கம்பக்கத்தில் இருந்தவர்களும் ஓடி வந்தனர். விளைவு... காவலர்கள் வந்து, திருடனைப் பிடித்துச் சென்று சிறையில் தள்ளினர். அங்கே... அந்தத் திருடன் அலுத்துக் கொண்டான்

''ச்சே... இப்படியெல்லாம் செஞ்சாங்கன்னா, நான் எப்படி
இந்த மனிதர்களை நம்ப முடியும்?''

நண்பர்களே, சிந்தித்துப் பாருங்கள்!

திருடன், மற்றவர் மீது வைத்திருக்கும் நம்பிக்கையா முக்கியம்? இவன் மீது மற்றவர்கள் வைக்கிற நம்பிக்கைதானே முக்கியம்!

பக்தன் ஒருவன், கோயிலில் தரிசனம் முடிந்து கர்வத்துடன் திரும்பிக் கொண்டிருந்தான்.

எதிரே வந்த பெரியவர் ஒருவர், ''இந்த அளவுக்குத் தலை நிமிர்ந்து வருகிறாயே... என்ன காரணம்?'' என்று கேட்டார் அவன், ''நான் கடவுளை நம்புகிறேன்!'' என்றான்.

உடனே, ''அது முக்கியம் இல்லையே!'' என்றார் பெரியவர்.

''எனில்... வேறு எதுதான் முக்கியம்?'' என்று கேட்டான் பக்தன்.

அந்தப் பெரியவர் அமைதியாக பதில் சொன்னார் ''கடவுள், உன்னை நம்புகிறாரா என்பதே முக்கியம்!''

# நம்பிக்கையே முக்கியம்!

தென்கச்சி சுவாமிநாதன்



பேருந்தில் பயணித்துக் கொண்டி ருந்தார் ஒருவர். வழியில், பயணச்சீட்டு பரிசோதகர் பேருந்தில் ஏறினார். அவரைப் பார்த்ததும் பயணச்சீட்டைத் தேட ஆரம்பித்தார் நம்மவர்.

தன்னிடம் இருந்த துணிப்பையில் கையை விட்டுப் பார்த்தார்; கிடைக்கவில்லை. கையில் வைத்திருந்த புத்தகத்தின் நடுவிலே இருக்கிறதா என்று பார்த்தார்... இல்லை. தான் கொண்டு வந் திருந்த பெட்டியில் தேடினார்; அங்கும் இல்லை! தொடர்ந்து தேடிக் கொண்டே இருந்தார். பயணச் சீட்டைக் காணவில்லை.

பரிசோதகர் பார்த்தார். "பரவாயில்லை... மெதுவா தேடுங்க. நான் மறுபடியும் வர்றேன்!" என்று கூறி விட்டு, அப்பால் நகர்ந்து சென்று விட்டார்.

நம்மவர், தொடர்ந்து தேடிக் கொண்டிருந்தார். அருகில் இருந்தவர் இவரைக் கவனித்தார்.

"ஐயா, உங்ககிட்டே ஒண்ணு கேட்கலாமா?"

"என்ன?" என்றார் நம்மவர்.

"எல்லா இடத்துலேயும் பயணச் சீட்டைத் தேடுறீங்க... ஆனால், ஒரு இடத்துல மட்டும் தேடலையே!"

"என்ன சொல்றீங்க?"

"உங்கள் சட்டைப் பையில் மட்டும் நீங்கள் தேடவே இல்லையே?" என்று கேட்டார் அருகில் இருந்தவர்.

உடனே நம்மவர், "உண்மைதான்! அந்த ஓர் இடத்தில்தான் பயணச் சீட்டு இருக்கும் என்று நம்புகிறேன்!" என்றார்.

"அப்புறம் ஏன் அங்கு தேடாமல் இருக்கிறீர்கள்?"

இந்தக் கேள்விக்கு நம்மவர் பதில் சொன்னார் "அந்த நம்பிக்கையை இழக்க நான் தயாராக இல்லை!"

நண்பர்களே! அவரது இந்த பதில், நம்மில் சிலரை சிரிக்க வைக்கலாம். சிலரை சிந்திக்கவும் வைக்கலாம்.

வாழ்க்கைப் பயணத்தில், 'இருக்கிறதா? இல்லையா?' என்பது முக்கியம் இல்லை; நம்பிக்கையே முக்கியம்!

சிலரது பயணம் இன்னும் வேடிக்கையானது.

ரயிலில் பயணித்துக் கொண்டிருந்தான் ஒருவன். பரிசோதகர் வந்தார். அவன் பயணச்சீட்டை தன் பைக்குள் தேடினான். பயணச் சீட்டு தொலைந்து விட்டது. கிடைக்கவில்லை. அழ ஆரம்பித்து விட்டான்.

எதிரில் இருந்தவர் ஆறுதல் சொன்னார் "போகட்டும் விடுங்க; வேறு பயணச் சீட்டு வாங்கிக்கலாம்!"

"நான் அதுக்காக அழலீங்க!" என்றான் இவன்.

"வேற எதுக்காக?"

"அந்த சீட்டு கிடைச்சாத்தானே நான் எந்த ஊர்லே இறங்கணும்ங்கறது தெரியும்?"

இன்றைய மனிதர்களின் பயணம் இப்படித்தான். இலக்கில்லாமல் போய்க் கொண்டிருக்கிறது!

## எங்கே போகப் போகிறோம்?



அவர் ஒரு சர்வாதிகாரி. ஆழ்ந்த சிந்தனையுடன் தனது அறையில் குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண் டிருந்தார். சர்வாதிகாரிகளுக்கு நிம்மதி ஏது? எந்த நேரமும் எதுவும் நடக்கலாம்!

அப்போது, எவரோ நடந்து வரும் சத்தம் கேட்டது. நிமிர்ந்து பார்த்தார். வேகமாக வந்த சிறை அதிகாரி, பவ்யமாக வணக்கம் செலுத்தினார்.

"என்ன விஷயம்?"- தோரணையுடன் கேட்டார் சர்வாதிகாரி.

"சிறைச்சாலையில் ஒரு சிக்கல்!" - தயங்கித் தயங்கிச் சொன்னார் சிறை அதிகாரி.

சர்வாதிகாரி சற்றே கோபத்துடன், "விவரமாகச் சொல்லுங்கள்" என்றார்.

"தொலைக்காட்சிப் பெட்டி வேண்டும் என்று கைதிகள் போராட்டம் நடத்துகின்றனர்."

"அவ்வளவுதானே... கொடுத்து விடுங்கள்!"

_ சர்வாதிகாரியின் உத்தரவையடுத்து, சிறைச்சாலையின் ஒவ்வோர் அறையிலும் ஒரு தொலைக்காட்சிப் பெட்டி வைக்கப்பட்டது.

நாட்கள் கடந்தன!

ஒரு நாள்... அதே சிறை அதிகாரி மீண்டும் வந்தார். சர்வாதிகாரிக்கு வணக்கம் செலுத்தியவர் தலை குனிந்தபடி, "சிறைச்சாலையில் மறுபடியும் ஒரு போராட்டம்" என்றார்.

"இப்போது எதற்காகப் போராடுகிறார்கள்?" என்று சலிப்புடன் கேட்டார் சர்வாதிகாரி.

"கைதிகளுக்கு வாரம் ஒரு நாள் விடுமுறை வேண்டுமாம்!"

"அட, இவ்வளவுதானே... கொடுத்து விடுங்கள்" _ அலட்சியத்துடன் உத்தர விட்டார் சர்வாதிகாரி.

இப்படியாக... கைதிகள் கேட்ட வசதிகளை, சிறிதும் தயக்கம் இன்றி செய்து கொடுத்தார் சர்வாதிகாரி. இதைக் கவனித்து வந்த தேசத்தின் தளபதி குழம்பினான். இதுகுறித்து சர்வாதிகாரியிடமே கேட்டு விடுவது என்று முடிவு செய்தான்.

ஒரு நாள்... சர்வாதிகாரியைச் சந்தித்து, "நாம் சலுகை காட்ட வேண்டியது கல்விச் சாலைகளுக்குத் தான்... சிறைச் சாலைகளுக்கு அல்ல!" என்றான் ஆவேசத்துடன்.

ஆனால், சர்வாதிகாரி அலட்டிக் கொள்ள வில்லை. "தளபதியாரே! பதவியில் இருந்து இறங்கிய தும் நாம் பள்ளிக்கூடத்துக்குச் செல்வோம் என்றா நினைக்கிறீர்கள்?" என்று புன்னகைத்தபடி கேட்டார்.

புத்திசாலி சர்வாதிகாரி! போகப் போகும் இடம் எது என்பதைப் புரிந்து வைத்திருக்கிறார். ஆனால், சராசரி மனிதனுக்கு இதெல்லாம் புரிவது இல்லை. அதனால்தான் இத்தனை ஆட்டம் போடுகிறான்.

ஒன்றைப் புரிந்து கொள்ளுங்கள்... நிகழ்காலத்தில் சண்டை போட்டுக் கொண்டிருப்பவன் எதிர்காலத்தை இழந்து விடுகிறான்!

அதுபோல, எதிர்காலத்தையே நினைத்துக் கொண்டிருப்பவன் நிகழ்காலத்தை இழந்து விடுகிறான்!

## விளையாட்டா? விளையாட்டுப் போட்டியா?

அதிபர் ஒருவர், தனது நாட்டின் வளர்ச்சி குறித்து அதிகாரி களுடன் விவாதித்துக் கொண்டி ருந்தார்.



"பல துறைகளில், நாம் உச்சத்தைத் தொட்டு விட்டாலும் நம் நாட்டில் இன்னமும் படிப்பறிவு இல்லாதவர்களும் இருக்கிறார்களே!" என்றார் அதிபர்.

உடனே அதிகாரிகள், "பழங்குடியினர்தான் அப்படி இருக்கிறார்கள்!" என்றனர்.

இதைக் கேட்ட அதிபர், "அவர்களும் நமக்குச் சமமாக வளர வேண்டாமா... பழங்குடிகளும் கல்வியில் சிறந்து விளங்கும் வகையில், இன்னும் நிறைய பள்ளிகளை நிறுவுங்கள்; விளை யாட்டுத்திடல் களை அமைக்க வழி செய்யுங்கள். பிள்ளைகள் மட்டுமல்ல; பெரியவர் களுக்கும் கல்வி கற்பிக்க ஏற்பாடுகள் செய்வது அவசியம். கல்வியுடன் விளையாட்டுகளிலும் பயிற்சி தர வேண்டும்!" என்று உத்தரவிட்டார்.

அதிபரின் ஆணை, படிப்படியாக அமலுக்கு வந்தது. காலையில் படிப்பு; மாலையில் விளையாட்டு! வாலிபால் விளையாடவும் பயிற்சியளிக்கப்பட்டது.

அவர்களை இரண்டு குழுக்களாக்கி விளையாடச் செய்த பயிற்சியாளர், "உங்களது பக்கம் வரும் பந்தை, எதிர்ப்பக்கம் போவது போல் அடிக்க வேண்டும். அதே நேரம்... நீங்கள் எதிர் கொள்ளும் பந்து கீழே விழுந்து விடாமலும் பார்த்துக் கொள்ள வேண்டும்" என்றும் அறிவுறுத்தினார்!

விளையாட்டு ஆரம்பித்தது. இரு தரப்பினரும் உற்சாகமாக பந்தைத் தட்டி விளையாடினர். எங்கோ வெளியே சென்று விட்டு, சிறிது நேரத்தில் திரும்பிய பயிற்சியாளர் கேட்டார்

"ஸ்கோர்...ஸ்கோர்... என்ன?"

அவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை.

"எந்தத் தரப்புக்கு... எத்தனை புள்ளிகள்?" என்று கேட்டார் பயிற்சியாளர்.

"அப்படின்னா?" என்று திருப்பிக் கேட்டனர்.

"இரண்டு தரப்பினரும் எத்தனை முறை பந்தைக் கீழே தவற விட்டீர்கள்? இதை வைத்துதான் வெற்றி-தோல்வியைத் தீர்மானிக்க முடியும்!" என்றார். அவர் சொன்னது, பழங்குடியினருக்கு வேடிக்கையாக இருந்தது! இரண்டு தரப்பினரும் கோரஸாக, "அவங்க பந்தைப் போடுறாங்க; நாங்க அடிக்கிறோம்.

நாங்க போடும் போது அவங்க அடிக்கிறாங்க. இப்படி, மாத்தி மாத்தி அடிச்சு ஆனந்தமா விளையாடுறோம். இதுல ஸ்கோர் எதுக்கு? வெற்றி- தோல்வி எதுக்கு?'' என்றனர்!

ஆம்... கற்றுக் கொடுக்க வந்தவர்கள், கற்றுக் கொள்ள ஆரம்பித்தனர்!

வாழ்க்கையை விளையாட்டாகக் கருதினால், எந்நாளும் இன்பம். அதை விளையாட்டுப் போட்டி யாக கருதினால், இன்பமும் வரலாம்; துன்பமும் வரலாம்!

குழந்தைகள் விளையாட்டை விரும்புகிறார்கள்; பெரியவர்களோ விளையாட்டுப் போட்டியை விரும்புகிறார்கள்.

## கடவுள் காப்பாற்றுவாரா?

காட்டுப் பாதையில், காய்ந்த விறகு களைத் தலையில் சுமந்தபடி வந்து கொண்டிருந்தான் ஒருவன்.வழியில், மரத்தடியில் நரி ஒன்று படுத்திருந்தது. அந்த நரிக்கு முன்னங்கால்கள் இரண்டுமே இல்லை. ஏதோ விபத்தில் கால்களை இழந்திருக்கும் போல!

"ஐயோ பாவம்... இந்த நரிக்கு இரண்டு கால்கள் இல்லையே! இதனால் உணவு தேட முடியாதே...! கால் இல்லாத நரிக்கு இங்கு யார் உணவு தருவார்கள்?" வாய் விட்டுப் புலம்பினான்.



"கவலை வேண்டாம். கடவுள் காப்பாற்றுவார்!" என்று சொல்லிவிட்டுப் போனார், அந்த வழியே சென்ற பெரியவர் ஒருவர்.

'எப்படிக் காப்பாற்று வார்? அதையும் பார்ப்போமே!' என்று அங்கேயே நெடுநேரம் காத்திருந்தான்.

அப்போது, சிங்கம் ஒன்று மானை அடித்து இழுத்து வந்து அங்கு போட்டது. மானை பாதியளவே சாப்பிட்ட சிங்கம் மீதியை அங்கேயே போட்டு விட்டுச் சென்றது. இதைக் கண்ட நரி, மெள்ள நகர்ந்து சென்று அங்கே கிடந்த மிச்சசொச்ச மாமிசத்தை சாப்பிட்டது.

இவற்றைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டி ருந்த ஆசாமி ஆச்சரியத்தில் ஆழ்ந்தான்.

'இரண்டு கால்களும் இல்லாத- வயசான நரிக்கே உணவு கொடுக்கும் இறைவன், தினமும் கோயிலுக்குச் சென்று வழிபடும் நமக்கு உணவு தர மாட்டானா? நிச்சயம் தருவான். எனவே, இனி வெயில்-மழை என்று ஏன் கஷ்டப்படவேண்டும்?' என்று சிந்தித்தான்.

இதையடுத்து வேலை செய்வதை அடியோடு நிறுத் திக் கொண்டான். கோயிலுக்குச் சென்று மண்டபத் தூணில் சாய்ந்து அமர்ந்தான்; ஆண்டவனே கதி என்று கிடந்தான். 'கடவுள் நமக்கு ஏதேனும் தருவார்' என்று காத்திருந்தான். ஆனால், அவன் எதிர்பார்த்தது எதுவும் நடக்கவில்லை. நாளுக்கு நாள்... பசியால் வாடிப் போய், உடல் மெலிந்து, எலும்பும் தோலுமாகக் காட்சி அளித்தான். ஓர் அடி எடுத்து வைக்கவும் உடலில் தெம்பு இல்லாத நிலை!

ஒரு நாள், நள்ளிரவு நேரம்! மெள்ள கண்களைத் திறந்து பார்த்தான். கோயிலில் எவரும் இல்லை... கடவுளைத் தவிர. "கடவுளே! எனது பக்தியில் உனக்கு நம்பிக்கை இல்லையா? கால் இல்லாத நரிக்குக் கூட சிங்கத்தின் மூலம் உணவு வழங்கினாய். அதையே பாடமாக, வேதமாக எடுத்துக் கொண்டு தானே இங்கு

வந்து கிடக்கிறேன். எனக்கு ஏதும் தரமாட்டாயா? பட்டினி கிடந்து நான் சாகத்தான் வேண்டுமா?" என்று சந்நிதியைப் பார்த்துக் கதறினான். இப்போது கடவுள் பேசினார் "முட்டாளே! நரியிடம் இருந்து உன்னை யார் பாடம் கற்கச் சொன்னார்கள்? சிங்கத்தைத்தானே பாடமாக ஏற்றிருக்க வேண்டும்?"

நண்பர்களே! கடவுளை வணங்கும்போது, 'நமக்கு யாராவது உதவுவார்களா?' என்று எண்ணாதீர்கள். 'நம்மால் யாருக்கேனும் உதவ முடியுமா?' என்று எண்ணுங்கள். ஏனெனில், அதுவே ஆன்மிகம்!

## உண்மையை சந்தேகப்படாதீர்கள்!

நள்ளிரவு... அந்த சோளக் கொல்லையில் திடீரென ஏதோ சலசலப்பு! சோளக் கொல்லையைக் காவல் காத்துக் கொண்டிருந்தவன் சத்தம் கேட்டு ஓடி வந்தான். அங்கு... மாடு ஒன்று மேய்ந்து கொண்டிருந்தது.



'மாட்டை எப்படியாவது பிடித்து விட வேண்டும்' என்ற முடிவுடன் மெள்ள அருகில் சென்றான். ஆனால், மாடு இவனைப் பார்த்து விட்டது. உடனே இவன் வேகமாகத் தாவி, மாட்டின் வாலைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். மறுகணம், மாடு மேலெழும்பி பறக்க ஆரம்பித்தது! அப்போதுதான் தெரிந்தது... அது, சிவபெருமானின் நந்தி என்று. நந்தி, கயிலாயத்தை நோக்கிப் பறக்க... இவனும் அதன் வாலைப் பிடித்து தொங்கியபடி பறந்தான். இருவரும் கயிலாயத்தை அடைந்தனர்.அங்கு சிவனாரை கண்டதும், "இறைவா, இது நியாயமா? உங்கள் நந்தி என் சோளக் கொல்லையை நாசம் செய்து விட்டது" என்று முறையிட்டான்.

"கவலை வேண்டாம். இழப்பை ஈடுகட்ட இதோ... பை நிறைய தங்கக் காசுகள்!" என்று ஒரு பையைக் கொடுத்தார் இறைவன். அவரை வணங்கி, பணிவுடன் பையைப் பெற்றுக் கொண்டவன், நந்தியின் உதவியுடன் பூமிக்கு வந்து சேர்ந்தான்.

வீட்டை அடைந்ததும், 'இது, உண்மையிலேயே தங்கக் காசுதானா?' என்று அவனுக்கு சந்தேகம் எழுந்தது. உடனே ஒரேயரு காசை மட்டும் எடுத்துக் கொண்டு தன் நண்பனின் நகைக் கடைக்குச் சென்றான் தங்கக் காசை நண்பனிடம் தந்து, "இது தங்கம்தானா? உரசிப் பார்த்துச் சொல்!" என்றான். நண்பனும் உரசிப் பார்த்தான். 'அட... விலை மதிப்பு இல்லா தங்கமாயிற்றே? இது, இவனுக்கு எப்படிக் கிடைத்தது?' என்று யோசித்த நண்பன், 'இது வெறும் பித்தளைதான்! உன்னை ஏமாற்றியவர் யார்?' என்று கேட்டான். இவனும் நடந்ததை விவரித்தான். அன்றிரவு! மீண்டும் நந்தி வந்தது. 'பித்தளையைக் கொடுத்து ஏமாற்றுவது உனக்கு அழகா?' என்று இறைவனைக் கேட்க வேண்டும் எனமுடிவு செய்தவன், நந்தியின் வாலைப் பிடித்தான்.

நந்தி உயரே எழும்பியது. நம்ம ஆசாமி, அதன் வாலைப் பிடித்தபடி தொங்கிக் கொண்டிருந்தான். அப்போது... எவரோ, இவன் காலைப் பிடித்து இழுப்பதாக உணர்ந்தான். மெள்ள குனிந்து பார்த்தான்.

அட..! 'பித்தளை' என்று பொய் சொன்ன நண்பன்! ஆசை யாரை விட்டது? நந்தி பறந்து கொண்டிருக்க அதன் வாலைப் பிடித்தபடி இவன், இவனது காலைப் பிடித்தபடி நண்பன்!

நண்பன் கேட்டான் ''ஆமாம்... உனக்கு எவ்வளவு தங்கக் காசுகள் கொடுத்தார்கள்?''

உடனே, நந்தியின் வாலைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருந்த நம்ம ஆசாமி, உற்சாகத்துடன் இரண்டு கைகளையும் விரித்து, 'இவ்வளவு!' என்றான். அவ்வளவுதான்! இரண்டு பேரும் பூமியில் இருந்த அதே சோளக் கொல்லையில் வந்து விழுந்தனர்.

இந்தக் கதை சொல்லும் நீதி என்ன?

வாலைப் பிடித்தவன், உண்மையைச் சந்தேகப் பட்டான். காலைப் பிடித்தவன், பேராசைப் பட்டான். உண்மையைச் சந்தேகப்படுகிறவர் களுக்கும் பேராசைப்படுகிறவர்களுக்கும் இதுவே கதி என்கிறது ஆன்மிகம்! உண்மையை சந்தேகப் பட்டால், 'பொத்'தென்று விழ நேரிடும், உஷார்!

## இரக்கம் காட்டு... ஏமாந்து போகாதே!

அந்த மன்னருக்கு நிறைய குதிரைகள் தேவைப்பட்டன. எனவே, வெளிதேசத்தில் இருந்து வந்த குதிரை வியாபாரியிடம் குதிரை களை வாங்கினார்.



''இன்னும் குதிரைகள் இருந்தாலும் கொண்டு வாருங்கள்'' என்றார் மன்னர். உடனே அந்த வியாபாரி, ''உங்கள் எண்ணத்தை நிறைவேற்றுவதற்கு சில நாட்கள் அவகாசம் தேவை மன்னா! ஏனெனில், பல இடங்களில் அலைந்து திரிந்து குதிரைகளை வாங்கி வர வேண்டும். தவிர, கொஞ்சம் முன்பணமும் தேவை'' என்றான்.

''அவ்வளவுதானே...'' என்று குதிரை வியாபாரியிடம் பத்தாயிரம் பொற்காசுகளை முன்பணமாக வழங்கி அனுப்பி வைத்தார் மன்னர்.
பல மாதங்கள் கடந்தன. ஆனால், குதிரை வியாபாரி வரவே இல்லை.

ஒரு நாள்! அமைச்சரை அழைத்த மன்னர், ''அமைச்சரே! நம் நாட்டில் எவருமே ஏமாந்து விடக் கூடாது என்பதே என் ஆசை! அப்படி ஏமாந்தவர்கள் இருந்தால் அவர்களுக்கு நாம் உதவ வேண்டும். எனவே, நம் தேசத்தில் உள்ள ஏமாளிகளைப் பட்டியல் எடுங்கள்!'' என்று உத்தரவிட்டார்.

இதையடுத்து அமைச்சரும் ஓரிரு நாளில், பட்டியலுடன் மன்னரைச் சந்தித்தார்.

''என்ன அமைச்சரே! ஏமாந்தவர்களின் பட்டியலைத் தயார் செய்து விட்டீர்களா?'' என்றார் மன்னர். உடனே, தாம் கொண்டு வந்திருந்த பட்டியலை வழங்கினார் அமைச்சர்.

பட்டியலை வாங்கிப் படித்த மன்னருக்கு அதிர்ச்சி! பின்னே... ஏமாளிகளது பட்டியலில் முதலிடத்தை வகித்தது மன்னரது பெயரா யிற்றே...!

''என்ன இது...?'' என்று ஆத்திரத்துடன் கேட்டார் மன்னர்.

''மன்னிக்க வேண்டும் மன்னா! முன்பின் அறிமுகமே இல்லாத குதிரை வியாபாரியிடம், அவன் யார்? எந்த ஊர் என்று எதுவும் விசாரிக்காமல், பத்தாயிரம் பொற்காசுகளைக் கொடுத்தீர்களே! என்னாயிற்று?'' என்று பவ்யமாக பதில் அளித்த அமைச்சர், மேலும் தொடர்ந்தார் ''குதிரை வியாபாரி பணம் வாங்கிச்

சென்று பல மாதங்களாகி விட்டன. இனியும் வருவான் என்கிற நம்பிக்கை எனக்குத் துளியும் இல்லை" என்று தைரியமாக எடுத்துரைத்தார் அமைச்சர்.

இதைக் கேட்ட மன்னர், "சரி... ஒருவேளை குதிரை வியாபாரி வந்து விட்டால் என்ன செய்வீர்கள்?" என்று எதிர் கேள்வி கேட்டார்.
அமைச்சர் அமைதியாக பதில் சொன்னார் "பட்டியலில் உள்ள தங்களது பெயரை அழித்து விடுவேன்; அதற்கு பதிலாக... குதிரை வியாபாரியின் பெயரை எழுதி விடுவேன்!"

இதுவும் சரிதான்... ஏமாற்றுவதற்கு சந்தர்ப்பம் கிடைத்தும், அதைச் சரியே பயன்படுத்திக் கொள்ளா தவனும் ஏமாளிதானே?!
மௌனகுரு சுவாமிகளின் உபதேசங்களில் ஒன்று

'இரக்கம் காட்டு...! ஆனால் ஏமாந்து போகாதே!'

## 'இன்னும் சீக்கிரமா போகணும்னா...?'

ஆகாயத்தில் வேகமாகப் பறந்து கொண்டிருந்தது ஒரு விமானம். இன்னும் வேகமாகப் பயணிக்க நினைத்த பயணி ஒருவன், விமானத்துக்குள்ளேயே கைகளை வீசியபடி நடக்க ஆரம்பித்தான்!



அந்த விமானத்தில் பயணம் செய்த பெரியவர் ஒருவருக்கு, இவனது செயல் வேடிக்கையாகப் பட்டது.

"ஏன் இப்படி?" என்று விசாரித்தார்.
"நான் கொஞ்சம் சீக்கிரமா என் ஊருக்குப் போகணும்!" என்றான் அந்தப் பயணி.

"இதற்கு, உனது அவசரம் உபயோகப்படாது!" என்றார் பெரியவர்.

உடனே பயணி திகைப்புடன் கேட்டான் "என்ன சொல்றீங்க?"

"இந்த விமானம்... போக வேண்டிய வேகத்துல போய்கிட்டிருக்கு. உனது செயலால் விமானத்தின் வேகத்தை அதிகப்படுத்த முடியாது!" என்றார்.

"இப்ப என்ன செய்யறது?"_ பயணி கேட்டான்.

"பேசாம உன் இடத்தில் உட்கார். அதோ, ஏதோ கொடுக்கிறார்கள் பார்... வாங்கிச் சாப்பிடு!" என்று பெரியவர் சொல்ல, அப்படியே செய்தான் பயணி.

பெரியவர், பேச்சைத் தொடர்ந்தார் "இதோ பாரப்பா... இந்த உலகமும் இப்படித்தான்... அதன் போக்கில் போய்க் கொண்டிருக்கிறது. ஆனால், அதை விட வேகமாகப் போக வேண்டும் என்று பரபரக்கிறான் மனிதன்! இதன் விளைவுதான்... இன்றைய உலகத்தில் இவ்வளவு துன்பங்கள்!"

"அப்படியென்றால்..?" _ பயணி கேட்க, தொடர்ந்து விளக்கினார் பெரியவர்.

"அவசரமாகத் தேடி ஓடாதே. ஏனெனில், நீ அடைய வேண்டிய இடம் என்று எதுவுமில்லை! இந்த உலகத்தில் இயல்பாக வாழப் பழகிக் கொள். அப்படி இயல்பாக வாழப் பழகிக் கொண்டால், வாழ்க்கை என்ற பயணம் சுகமாக இருக்கும்!"_ பெரியவர் முடித்தார். நிதானமாகச் சிந்திக்க ஆரம்பித்தான் பயணி. வேடிக்கை கதை ஒன்று அவன் நினைவுக்கு வந்தது...

கையில் இருந்த முகவரி குறித்து விசாரித்தான் ஒருவன். "இந்த இடத்துக்குப் போய்ச் சேர எவ்வளவு நேரம் ஆகும்?"

"நடந்து போனால் நாற்பது நிமிஷம் ஆகும்!"

"இன்னும் கொஞ்சம் சீக்கிரமா போகணும்!"

"சைக்கிளில் போங்க... 20 நிமிஷத்துல போகலாம்!"

"இன்னும் சீக்கிரம் போகணும்னா?"

"காரில் போகலாம்... 10 நிமிஷம்தான் ஆகும்!"
"அதைவிட சீக்கிரமா அங்கு போய்ச் சேரணுமே!"

"அப்படின்னா ஒண்ணு செய்யுங்க!"

"என்ன?"

"அதோ பாருங்க... ஒரு வெறி நாய்... ஒரு கல்லை எடுத்து அதன் மேல போடுங்க. அது, துரத்த ஆரம்பிக்கும். அஞ்சே நிமிஷத்துல நீங்க அங்கே போய்ச் சேர்ந்துடலாம்!"

_ சிரித்தபடியே நினைவிலிருந்து மீண்டான் பயணி. விமானம் பத்திரமாகத் தரையிறங்கியது. அவன், இறங்கி மெள்ள நடந்தான். பூமியின் வேகத்தை விட, அந்தப் புதிய மனிதனின் வேகம் குறைவாகவே இருந்தது!

## குரங்கும் குடுவையும்!

மரக் கிளையில் அமர்ந்திருந்த குரங்கு ஒன்று, தற்செயலாக மரத்தின் கீழே கவனித்தது. அங்கு, சிவப்பாக ஏதோ தெரிந்தது. நன்றாக உற்றுப் பார்த்தது. அது... குரங்குக்கு மிகவும் பிடித்த பழம்!

உடனே, கிடுகிடுவென இறங்கி கீழே வந்தது. ஆனால், அந்தப் பழத்தை சின்ன கண்ணாடிக் குடுவைக்குள் எவரோ போட்டு வைத்திருக்கின்றனர்? குரங்கு, ஆர்வத்துடன் குடுவைக்குள் கையை விட்டது. உள்ளே இருந்த பழத்தைப் பிடித்துக் கொண்டு கையை வெளியே எடுக்க முயன்றது; முடியவில்லை!



கண்ணாடிக் குடுவையின் கழுத்து குறுகலானது. பழத்தை விட்டுவிட்டால், கை வெளியே வந்து விடும். இது, அந்தக் குரங்குக்குத் தெரியவில்லை.

சரி... அதோடு விட்டதா? சற்று தூரத்தில் இன்னொரு குடுவை... அதன் உள்ளேயும் ஒரு பழம்!

ஓடிச் சென்ற குரங்கு, இன்னொரு கையை அந்தக் குடுவைக்குள் விட்டது. பழத்தை எடுக்க முயன்றதில், அந்தக் கையும் மாட்டிக் கொண்டது!

இப்போது, குரங்கின் இரண்டு கரங்களிலும் குடுவை! அவற்றைச் சுமந்து கொண்டு ஓடவும் முடியவில்லை. இந்த நேரத்தில், வேடன் ஒருவன் ஓடி வந்தான்.

கண்ணாடிக் குடுவைக்குள் பழத்தைப் போட்டு வைத்தவன் இவன்தான்! ஆம், குரங்கைப் பிடிக்க வேடன் செய்த தந்திரம் இது!
இப்படி... கண்ணாடிக் குடுவையில் பழத்தைப் போட்டு வைத்தால், ஏதேனும் ஒரு குரங்கு நிச்சயம் மாட்டிக் கொள்ளும் என்பது அவனுக்குத் தெரியும். குரங்கு எப்படி சிந்திக்கும் என்பதையும் அவன் அறிவான்.

இப்போது, அந்தக் குரங்கு கண்ணாடிக் குடுவையுடன் போராடிக் கொண்டிருந்தது. வேடன், நிதானமாக நெருங்கி வந்தான். குரங்கு ஓட முயன்றது... முடியவில்லை. ஆனாலும் அதன் மனதுக்குள் ஓர் ஆறுதல்...

'நல்லவேளை... பழம் நம் கைக்குள்ளே தான் இருக்கு!'

குரங்கைப் பிடித்த வேடன், அதன் தலையில் ஒரு தட்டு தட்டினான். இந்த அதிர்ச்சியில், பழத்தை விட்டது குரங்கு. இப்போது அதன் கைகளை வெளியே எடுக்க முடிந்தது. ஆனால், என்ன செய்ய... அந்தக் குரங்கு, வேடனிடம் சிக்கிக் கொண்டதே!

இப்படி ஒரு கதையைக் கேள்விப்பட்டது உண்டு. இதில் வரும் அந்தக் குரங்கு போன்றதுதான் மனிதனின் மனமும்!

வேண்டாத ஆசையில், கையை விட்டு மாட்டிக் கொள்கிறான். வாழ்க்கையில் தவிக்கிறான். ஆன்மிகம் வந்து அவன் தலையில் தட்டும் வரை, அவனால் பிடியை விட முடிவதே இல்லை.

நண்பர்களே... பிடியை விடுங்கள்; உங்களுக்கு விடுதலை கிடைக்கும். அதன் பின் ஆனந்தமாக வாழலாம்!

## உதவிக்கு அனுப்பக் கூடாதா?



இரண்டு மனிதர்கள் சந்தித்துக் கொண்டனர்; 'இன்று முதல், நாம் சகோதரர்கள்' என்றபடி, ஒருவரை யருவர் கட்டி அணைத்துக் கொண்டனர்.

"அண்ணே, உனக்காக என் உயிரையும் கொடுப்பேன்" என்றான் ஒருவன்.

"நானும் அப்படித்தான்!" என்றான் அடுத்தவன்.

இருவரும் புறப்பட்டு, ஒரு காட்டின் வழியே பயணித்தனர். இருட்டத் துவங்கியது!

"இங்கேயே படுத்துத் தூங்கி விட்டு விடிந்ததும் புறப்படலாம்" என்றான் ஒருவன்.

"விலங்குகள் வருமே!" என்றான் இன்னொருவன்.

"அதற்கொரு வழி இருக்கிறது!" என்று உற்சாகத்துடன் சொன்னான் முதலாமவன்.

"என்ன வழி?"_ இரண்டாமவன் கேட்டான்.

முதலாமவன் பதில் சொன்னான் "நீ தூங்கும் போது, நான் விழித்திருந்து காவல் காக்கிறேன்... நான் தூங்கும் போது நீ விழித்திரு!"

அப்படியே செய்தனர்!

அந்த வழியே வந்த பெரியவர் ஒருவர், இவர் களைக் கவனித்தார். 'ஆகா... இந்தக் காலத்திலும் இப்படியரு சகோதர பாசமா? அண்ணன் தூங்க வேண்டும் என்று தம்பியும்... தம்பிக்காக அண்ணனும் காவல் காக்கின்றனரே!' என்று ஆச்சரியப்பட்டார்.

இவர்களை உண்மைச் சகோதரர்களாகவே கருதிய பெரியவர்... நேராக கடவுளிடம் சென்று, "இறைவா! இந்த சகோதரர்களைக் கவனித்தாயா?" என்று கேட்டார்.

"கவனித்துக் கொண்டுதான் இருக்கி றேன்!" என்றார் கடவுள்.

*"ஒருவர் மாற்றி ஒருவர் விழித்துக் கொள் கிறார்களே... இருவரும் சேர்ந்தாற்போல ஒரே நேரத்தில் விழித்துக் கொள்ளக் கூடாதா?" என்று கேட்டார் பெரியவர். அதற்கு கடவுள் இப்படி பதில் சொன்னார் "கூடாது... இருவரும் சேர்ந்து விழித்துக் கொள்ளாத வரையில்தான் இருவருக்கும் இடையே அன்பும் பாசமும் இருக்கும்!"*

*இன்றைய மனிதர்களின் அன்பும் பாசமும் இப்படிப்பட்ட நிலைமையில்தான் இருக்கிறது. உண்மையான அன்புக்கு உதவ மட்டுமே தெரியும்; உதவி பெறத் தெரியாது. மனிதன் ஒருவன், கடவுளுக்கு முன்னே நின்றான்.*

*"கடவுளே! இந்த உலகத்தைப் பார்; நீ படைத்த மனிதர்களைப் பார்; எவ்வளவு துயரங்கள், வேதனைகள்! உதவிக்கு எவரையேனும் இங்கு அனுப்பக் கூடாதா?" - ஆதங்கத்துடன் கேட்டான்.*

*"உதவி செய்வதற்காகத்தான் அனுப்பி வைத்திருக் கிறேன்!" - அமைதியாக பதில் சொன்னார் இறைவன்.*

*"யாரை?" - ஆர்வத்துடன் கேட்டான் மனிதன். புன்னகைத்த இறைவன் பதில் சொன்னார்*

*"உன்னைத்தான்!"*

## ஆண்டவன் ஏன் தெரிவதில்லை?

*"என் பின்னாடி வாங்க... உங்க எல்லாரையும் கடவுள்கிட்ட கூட்டிட்டுப் போறேன்" என்றார் அந்தச் சாமியார். ஏராளமானோர் அவர் பின்னால் செல்லத் துவங்கினர்.*



*"என்னால் முடியாதது எதுவுமே இல்லை. ஏற்கெனவே, நிறைய முறை தவம் செய்திருக்கிறேன். உங்களது குறைகளையெல்லாம் தீர்த்து வைக்கிறேன். வாருங்கள்!" என்று அறைகூவல் விடுத்தார் சாமியார்.*

*இவற்றையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த ஆண்டவனுக்கே பொறுக்கவில்லை. ஆகவே, அவரும் சாமியாரிடம் வந்தார்.*

*சந்நியாசி வேடத்தில் வந்த கடவுள், சாமியாரின் முன் நின்றார். "சுவாமி... நீங்க நெறைய ஸித்திகள் அடைஞ்சிருக்கறதா கேள்விப்பட்டேன். அதான் உங்கள பாத்துட்டுப் போலாமேனு வந்தேன்" என்று பணிவுடன் சொன்னார்.*

*உடனே உற்சாகம் அடைந்த சாமியார், "என்னைப் பத்திதான் ஊருக்கே தெரியுமே?! வாங்க... இப்படி உக்காருங்க... என்ன வேணும் உங்களுக்கு?" என்று பெருமிதத்துடன் கேட்டார்.*

*"அதோ... யானை ஒண்ணு நடந்து போகுது பாருங்க. நீங்க நினைச்சா, அந்த யானை யைக் கொல்ல முடியுமா?"- சந்நியாசி வேடத்தில் வந்த கடவுள் கேட்டார்.*

*இதைக் கேட்ட சாமியார் அலட்சியமாக, "இதென்ன பிரமாதம்... இப்ப பாருங்க..." என்றபடி, ஒரு பிடி மண்ணைக் கையில் எடுத்து, ஏதோ மந்திரம் சொல்லி, யானையை நோக்கி வீசினார். அவ்வளவுதான்... யானை சுருண்டு விழுந்தது.*

*"அடடா... எப்பேர்ப்பட்ட சக்தி உங்களுக்கு!" என்று சாமியாரைப் புகழ்ந்த சந்நியாசி, "சரி சுவாமி... செத்துக் கிடக்கும் இந்த யானைக்கு மீண்டும் உயிர் கொடுக்க முடியுமா, உங்களால்?" என்று கேட்டார்.*

*"ஓ... தாராளமா முடியுமே! இதோ பாருங்க..."*

*என்ற சாமியார், மறுபடியும் மண் எடுத்தார்; மந்திரம் போல் முணுமுணுத்தார்; யானையை நோக்கி மண்ணை வீசினார். யானை அசைந்தது; எழுந்தது; நடந்தது!*

இதைக் கண்ட சந்நியாசி, ''நீங்க சக்தியுள்ள வர்தான்! இதுல சந்தேகமே இல்ல. ஆனாலும் ஒரு கேள்வி...'' என்றார். உடனே, ''சந்தேகத்தை நிவர்த்தி பண்றதுக்குத்தான் நான் இருக்கேன். தயங்காம கேளுங்க'' என்ற சாமியார், சந்நியாசி சொல்வதைக் கண் மூடிக் கேட்கலானார்.

''இப்ப ஒரு யானையைக் கொன்னீங்க; அப்புறமா அதுக்கு உயிர் கொடுத்தீங்க. இதனால நீங்க அடைஞ்ச லாபம் என்ன? இப்படிச் செஞ்சதால எந்த மாதிரி ஆன்மிக முன்னேற்றம் உண்டாச்சு? நீங்க கடவுளை அடை யறதுக்கு, எந்த விதத்துல இது உதவி செய்றதா நினைக்கறீங்க?'' என்றார் சந்நியாசி.

கண்களைத் திறந்து பார்த்தார் சாமியார். எதிரே சந்நியாசியைக் காணவில்லை.

குரு என்பவர் கூட்டம் சேர்ப்பவர் அல்ல... வழிகாட்டுபவர்! இதேபோல், இன்றைய பக்தர்களும், குருமார்களின் முதுகுக்குப் பின்னால் அணிவகுக்கவே ஆசைப்படுகின்றனர். உண்மை யான தேடுதல் பக்தர்களிடம் இல்லை!

இதனால்தான்... இவர்களது கண்களுக்கு ஆண்டவன் தெரிவதில்லை!

## பக்தனிடம் பயந்த பேய்!



ஊர் எல்லையில் அமைந்திருந்தது அந்தக் கோயில். அதன் அருகில் இருந்த வேப்ப மரத்தில், பேய் ஒன்று வசித்தது. தான் செய்த பாவத்துக்காக சபிக்கப்பட்டிருந்த அந்த பேய், சாப விமோசனத்துக்காகக் காத்திருந்தது.

அந்த ஊரில் வசித்த பக்தன் ஒருவன் தினமும் கோயிலுக்கு வந்து, சத்தம் போட்டுப் பாடுவது வழக்கம். பிரசாதம் கிடைத்ததும் சாப்பிட்டுக் கிளம்புவான். 'பிரமாதமாகப் பாடுகிறோம்' என்று அவனுக்கு நினைப்பு. ஆனால் மற்றவர்களோ... 'காட்டுக் கூச்சல் போடுகிறானே' என்று சலித்துக் கொள்வார்கள்!

ஒரு நாள்... பிரசாதம் சாப்பிட்டு முடித்து வீட்டுக்குக் கிளம்பி னான். வேப்ப மரத்தடிக்கு அவன் வந்தபோது, 'நில்' என்று குரல் வந்தது. சுற்றுமுற்றும் பார்த்தான்... எவரையும் காணோம்!

''இதோ... இந்த மரத்தில்தான் இருக்கிறேன். நான்தான் பேய்'' என்று பதில் வந்தது.

''ஐயோ... பேயா?'' என்று அலறினான் பக்தன். ''பயப்படாதே. உன்னைக் கண்டு நான்தான் பயந்து போயிருக்கிறேன். எனக்கு, ஓர் உதவி செய்ய வேண்டும்!'' என்றது பேய். பக்தன் குழம்பிப் போனான்!

பேய் தொடர்ந்தது ''எனக்கு சங்கீத ஞானம் உண்டு. மனுஷனா இருந்து செத்துப் போன நான், இப்ப... உன் பாட்டால திரும்பவும் செத்துருவேன் போல! தயவு செஞ்சு இனிமே நீ பாடாதே!'' என்றது.

உடனே பக்தன், ''அப்புறம் சாப்பாட்டுக்கு என்ன பண்றது?''
என்று புலம்பினான்.

''கவலைப்படாதே. ஒரு வழி சொல்றேன். இந்த ஊரு ராஜாவோட மகளை நான் பிடிச்சிக்கிறேன். ஊர்ல உள்ள மந்திரவாதிகளையெல்லாம் கூட்டிட்டு வந்து, பேய் ஓட்டுவாரு ராஜா. நான், யாருக்கும் எதுக்கும் அசைஞ்சு கொடுக்காம இருந்துக்கறேன். நீ அரண்மனைக்கு வந்து, 'நான் பேயை ஓட்டறேன்'னு சொல்லி உன் பாட்டை எடுத்து விடு. நான் ஓடிப் போயிடறேன். பிறகென்ன... பொன்னும் பொருளும் அள்ளிக் கொடுப்பாரு ராஜா!'' என்று ஆலோசனை தந்தது பேய்.அவனும் சம்மதித்தான். அதன்படியே அனைத்தும் நடந்தது. உணவுப் பிரச்னையில் இருந்து அவனுக்கு விடுதலை கிடைத்தது. கூடவே சங்கீதத்துக்கும்!

இதையடுத்து, கோயிலில் குடிகொண்டிருந்த ஆண்டவனே வேப்ப மரத்தின் அடியில் வந்து நின்றார். அவரைக் கண்டதும், ''என்ன இது... என்னைத் தேடி நீங்கள் வரலாமா?'' என்று பதறிப் போனது பேய்.

இறைவன் அமைதியாகச் சொன்னார் ''அந்த பக்தனின் பாட்டால் என் நிம்மதியே போயிருந்தது. உனது திட்டத்தால் இப்போது, அவன் வருவதும் இல்லை; நானும் நிம்மதியாக இருக்கிறேன். அவனிடம் இருந்து எனக்கு விடுதலை வாங்கித் தந்த உனக்கு, இன்று முதல் விடுதலை அளிக்கிறேன்'' என்றார்.

பக்தர்கள், ஆண்டவனிடம் பேச ஆசைப்படு கிறார்கள். பாவம்.. எந்த மொழியில் பேசுவது என்பதுதான் தெரியவில்லை. இறைவனிடம், பக்தர்கள் பேச வேண்டிய மொழியின் பெயர்... மௌனம்!

## 'காத்திருக்கிறேன்... வா..!'



வெளிநாடு ஒன்றின் தங்கும் விடுதி அது! அறையில், கம்ப்யூட்டர் முதலான சகல வசதிகளும் இருந்தன.

இங்கு தங்கியிருந்த ஒருவன், தன் மனைவிக்கு இ-மெயில் அனுப்ப எண்ணினான். அவசரத்தில் மின்னஞ்சல் முகவரியைத் தவறாக டைப் செய்தவன், அதை கவனிக்காமல் தவறான வேறொரு மின்னஞ்சலுக்கு அனுப்பினான்!

அதே நேரம்... வேறொரு பகுதி! கணவனின் இறுதிச் சடங்குகள் முடிந்து சில நாட்கள் கழிந்த நிலையில்... ஒருவாறு தன்னை ஆசுவாசப்படுத்திக் கொண்டு, தனது கம்ப்யூட்டரை 'ஆன்' செய்தாள் அந்தப் பெண். தன் மின்னஞ்சலில் ஏதேனும் இரங்கல் செய்தி வந்துள்ளதா என்று ஒவ்வொன்றாகப் படிக்கத் துவங்கினாள்.

முதல் செய்தியைப் படித்ததுமே மயங்கி விழுந்தாள்! சத்தம் கேட்டு வேறொரு அறையில் இருந்த அவளது மகன் ஓடோடி வந்தான். 'இ-மெயிலைப் படித்தவள்,

ஏன் மயங்கி விழுந்தாள்?' எனும் யோசனையுடன் அந்த செய்தியைப் படித்தான்

'அன்பான மனைவிக்கு... நான், இங்கு நல்லபடியாக வந்து சேர்ந்தேன். இங்கே, கம்ப்யூட்டர் வசதியெல்லாம் இருக்கிறது. உன் வருகைக்காக இங்கு அனைத்து ஏற்பாடுகளும் தயார். நாளை... இங்கு வரப் போகிற உனக்காக, ஆவலுடன் காத்திருக்கிறேன்.

இப்படிக்கு
உன் அன்புக் கணவன்'

இந்த மின்னஞ்சலைப் படித்து, அந்தப் பெண் மயங்கி விழுந்ததில் ஆச்சரியம் ஏதுமில்லை.

_ வேடிக்கையான கதைதான். கம்ப்யூட்டரில் கை தடுமாறியதால் ஏற்பட்ட குழப்பம் இது!

இது ஒரு பக்கம் இருக்கட்டும்... முதலில், ஓர் உண்மையைக் கவனியுங்கள்.

இந்த உலகில் இருக்கிற வரை, கணவன் எங்கே போனாலும் 'நானும் கூடவே வருவேன்' என்றாள். அவனது அழகில் மயங்கி இருந்தாள். ஆனால், அதே கணவன், இன்னொரு உலகில் இருந்து கொண்டு 'வா' என அழைக்கிறான் என்றதும் இவள் மயங்கி விழுகிறாள். இதுதான் மனித இயல்பு. இந்த மயக்கத்தைத் தெளிவுபடுத்துகிறது ஆன்மிகம்.

பெரியவர் ஒருவரது உபதேசம் இது

'மனிதர்களே! உங்கள் எல்லோருக்கும் வெளி விலாசம் இருக்கிறது. உங்கள் முகவரி என்ன என்று கேட்டால் உடனே சொல்லி விடுவீர்கள், திருச்சி... கோவை... மதுரை... என்று! உங்களின் உள் விலாசம் என்ன? நாம் பிறப்பதற்கு முன்பு எங்கே இருந்தோம்? எங்கிருந்து புறப்பட்டு இந்த உலகத்துக்கு வந்து சேர்ந்தோம்? இதைப் புரிந்து கொள்வதுதான் ஆன்மிகம்! நம் ஒவ்வொருவரது

வெளி விலாசமும் வேறு வேறு! ஆனால், நம் அனைவரது உள் விலாசமும் ஒன்றுதான்! இதை உணரும்போதுதான் ஆன்மநேயத்தின் அடையாளத்தை நம்மால் அறிய முடியும்.'

_ இதைப் புரிந்து கொண்டால்... கணவன் எங்கிருந்து அழைத்தாலும் அந்தப் பாதையில் அஞ்சாமல் பயணிப்பாள் மனைவி. இது, கணவனுக்கும் பொருந்தும்!

## துறவறம்தான் சந்நியாசமா?

திருமணம் முடிந்து, இல்வாழ்க்கையைத் துவங்கிய அந்தப் புதுமணப் பெண்ணுக்குக் குடும்பம் நடத்துவது குறித்து நிறைய சந்தேகங்கள்.
யாரிடம் யோசனை கேட்கலாம்? பக்கத்து வீட்டு மாமியிடம் சென்று, "உங்கள் அனுபவத்தைச் சொல்லுங்க மாமி!" என்றாள்.



"இதோ பாருடிம்மா... குழப்பமில்லாம, சண்டை- சச்சரவு இல்லாம குடும்பம் நடத்துறதுதான் புத்திசாலித்தனம். அது உன் கையிலதான் இருக்கு!" என்றாள் அந்த மாமி.

"நான் என்ன செய்யணும்?"_ இளம்பெண் கேட்டாள்.

"இப்பவே உன் புருசன்கிட்டே கண்டிப்பா சொல்லிடு..."

"என்னன்னு..?"

"இதோ பாருங்க... நீங்க ஏதாவது சின்னதா தப்பு பண்ண ஆரம்பிச்சாலும் நான் பத்ரகாளியா மாறிடுவேன்னு ஆரம்பத்துலேயே சொல்லி வெச்சுடு!"

"நீங்களும் இப்படித்தான் சொன்னீங்களா மாமி?"

"ஆமாம்! எங்களுக்குக் கல்யாணம் ஆன மறுநாளே சொல்லிப்புட்டேன்!"

"அப்புறம் என்ன ஆச்சு? நீங்க எதிர்பார்த்த மாதிரி அவரு நடந்துகிட்டாரா?"

"அதுதானே தெரியலை?"

"ஏன்?"

_ அப்பாவியாகக் கேட்ட புதுமணப் பெண்ணிடம் மாமி சொன்னாள் "அன்னிக்கு வீட்டை விட்டு ஓடினவர்தான்... இன்னமும் வீடு திரும்பலை!"

அந்த ஆள் அதற்கப்புறம் ஒரு சந்நியாசி ஆகிவிட்டார் என்று கேள்வி!

ஆனால், சந்நியாசம் என்பது இதுவல்ல.

சந்நியாசம் என்பது எதையும் விடுவதோ அல்லது துறப்பதோ அல்ல.

ஒருவன் எல்லாவற்றையும் துறந்து, வாழ்க்கையை விட்டு வெளியில் வருவதையே சந்நியாசம் என்று சொல்லிக் கொண்டிருக்கிறோம்.

'வாழ்க்கையை விட்டு வெளியே வருவதால் வாழ்வுக்கும் சரி, வாழும் மனிதர்களுக்கும் சரி... எந்தப் பயனும் இல்லை' என்பது ஞானிகளின் கருத்து.

ஓஷோ என்ன சொல்கிறார் தெரியுமா?

'வாழ்க்கையை விட்டு வெளியே செல்லும் சந்நியாசிகள் தங்களைத் தாங்களே சித்ரவதை செய்து கொள்கிறார்கள்' என்கிறார். சந்நியாசிகள் பலரும் முகத்தைக் கோபத்துடன் 'உர்ர்ர்' என்று வைத்திருப்பது இதனால்தான் என்கிறார் ஓஷோ.

உண்மையான சந்நியாசம் என்பது வாழ்க்கையைத் துறப்பதல்ல; அதில் ஆனந்தமாக ஓர் பயணத்தை மேற்கொள்வது! இன்றைய சந்நியாசிகள் இதைச் சரியாகப் புரிந்து கொள்ள வேண்டும்.

## துறவறம்தான் சந்நியாசமா?



கோயில் வாசலில் உள்ள பெட்டிக்கடையில், பக்திப் பழமாக உட்கார்ந் திருப்பார் ஒருவர். அவர், 'எனக்கு ஆசையே இல்லை. பந்தங்களில் இருந்து விடுபட நினைக்கிறேன். இன்னும் அதற்கான வேளை வரவில்லை!' என்றபடியே இருப்பார்.

ஒருநாள்! கோயிலுக்கு வந்த சந்நியாசியிடமும் இதையே சொல்லிப் புலம்பினார் அந்த ஆசாமி.

இதைக் கேட்டதும், "நீ சரின்னு சொன்னா இப்பவே உன்னை அழைச்சிக்கிட்டுப் போயிடுறேன். என்ன சொல்றே?" - கேட்டார் சந்நியாசி.

"நானும் இதைத்தான் நினைச்சேன். ஆனா, வீட்ல விவரம் தெரியாத வயசுல புள்ளைங்க இருக்கறப்ப, எப்படி விட்டுட்டுப் போறதுன்னுதான் ஒரு யோசனை. அவங்களுக்கு கல்யாணம் காட்சின்னு ஆயிட்டா... அப்புறம் நிம்மதியா கிளம்பிடலாம்!" என்றார் ஆசாமி.

சிரித்தபடியே கிளம்பிச் சென்றார் சந்நியாசி.

ஆண்டுகள் ஓடின!

ஒருநாள்... கோயிலுக்கு வந்தார் சந்நியாசி! அதே சந்நியாசி;
அதே பெட்டிக்கடை; அதே ஆசாமி!

"எனக்கு ஆசையே இல்லை. பந்தங்களிலிருந்து விடுபட விரும்பறேன். ஆனா, இன்னும் அதற்கான வேளை வரலை" - அதே புலம்பல்.

சந்நியாசி மெள்ள புன்னகைத்தபடி, "சரி... இப்பவாவது புறப்படேன்!" என்றார்.

"பிள்ளைங்களுக்கு கல்யாணம் பண்ணி வச்சுட்டேன். பேரப் பிள்ளைங்களையும் கண்ணாலே பார்த்துட்டா. என் கவலையெல்லாம் தீர்ந்துடும்!" என்று விவரித்தார் நம்ம ஆள்!

சில ஆண்டுகளுக்குப் பிறகு, சந்நியாசி வந்தார்.

"எனக்கு ஆசையே இல்லை..."- வழக்கம்போல் கேட்டது குரல்!

"இப்போதாவது வருகிறாயா?"- இது சந்நியாசி.

"கோர்ட்ல கேஸ் இருக்கு. வழக்கு முடிஞ்சிட்டா வந்துடலாம்"- பதிலுரைத்தார் ஆசாமி. வழக்கமான புன்னகையுடன் கிளம்பினார் சந்நியாசி.

ஆண்டுகள் பல கழிந்தன. மீண்டும் வந்தார் சந்நியாசி. ஆனால், அந்த ஆசாமியைக் காணோம். கடையில் இருந்தவரிடம் நம்மவர் குறித்து விசாரித்தார் சந்நியாசி.

கடையில் இருந்தவர், "சாமி... எங்க அப்பாதான் அவரு. 'எல்லா பந்தங்களையும் விட்டுட்டு உங்ககூட வந்துடணும்னு சொல்லிகிட்டே இருந்தாரு, போன வருஷம் ஒருநாள்... நெஞ்சு வலின்னவரு, பொட்டுனு போயிட்டாரு. அப்பா இந்நேரம் உயிரோட இருந்திருந்தா, நிச்சயம் உங்க கூட வந்துருப்பாரு சாமீ..."- கவலையுடன் சொன்னார் நம்மவரின் மகன்.

இதைக் கேட்ட சந்நியாசி, "உங்க அப்பன் எங்கேயும் போயிடலே. இங்கதான் இருக்கான். அதோ... அங்கே பார்... அதென்ன?"

"அது நாய்... இங்கேதான் சுத்திக்கிட்டிருக்கு!"

"அதான் உங்க அப்பன். இப்ப பாரு" என்றவர், கையைத் தட்டினார். அந்த நாய் வாலாட்டியபடியே ஓடி வந்தது. நாயின் தலையைத் தட்டினார்.

உடனே அது, "எனக்கு ஆசையே இல்லே..." என பேசத் துவங்கியது.

"அடேய்... என்னோட வந்துடறியா?" - சந்நியாசி கேட்டார்.

"சாமி! ஏராளமா சொத்து சேத்து வச்சுட்டேன். பிள்ளைங்க அதை சரியா காப்பாத்துவாங்கன்னு தோணலீங்க. கடையை சரியா பூட்டாமே போயிட றாங்க. அதுதான் நாயா பிறந்து காவல் காத்துக்கிட்டு கிடக்கிறேன்!"- இப்படி நாய் சொன்னதும், 'கடகட'வெனச் சிரித்தார் சந்நியாசி.

பிறகு அவர் சொன்னார் "அறியாமையில் சுகம் கண்டவர்களுக்கு ஆன்ம விடுதலை எப்படிக் கிடைக்கும்?"

இன்றைக்கு ஆலயங்களைத் தேடிப் போகிற அன்பர்கள், முதலில்... அறியாமை சுகத்திலிருந்து விடுபட வேண்டும்...

பிறகு, ஆன்மிக சுகத்தை அடையாளம் காண வேண்டும்!

## போராட்டம் எதிலோ?



நண்பனின் வீட்டுக்குச் சென்றான் ஒருவன்.

"வா... வா... உன்னைப் பார்த்து எவ்ளோ நாளாச்சு?" என்று அன்புடன் வரவேற்ற நண்பன், "நானே உன் வீட்டுக்கு வரணும்னு நினைச்சுக்கிட்டிருந்தேன். ஆனா, நேரமே கிடைக்க மாட்டேங்குது. இப்பவும் பாரேன்... அவசரமா வெளியேதான் கிளம்பிட்டிருக்கேன்!" என்றான்.

நம்மாளுக்குக் குழப்பம். இதைப் புரிந்து கொண்ட நண்பன், "தப்பா எடுத்துக்காதடா! பெரிய இடத்துக் கல்யாணம்; தவிர்க்க விரும்பலை! நீ இங்கேயே இரு. தலையை காட்டிட்டு வந்துடறேன்!" என்றான்.

"சரி... சரி! போயிட்டு சீக்கிரமா வா!" என்று வழியனுப்பி விட்டுக் காத்திருந்தான் நம்மவன்.

கல்யாணத்துக்குப் போனவன் மாலையில்தான் திரும்பினான்.

''என்னடா ஆச்சு? உடனே திரும்பிடுவேன்னு சொல்லிட்டுப் போன..?'' என்றான் இவன்.

''என்னடா பண்றது? நானும் எவ்வளவோ முயற்சி பண்ணினேன். ஆனா, விடவே மாட்டேன்னுட்டாங்க!'' என்று வருத்தத்துடன் சொன்னான் நண்பன்.

நம்மாளுக்கு ஆச்சரியம்... ''அட... அவ்ளோ உபசரிப்பா உனக்கு? மாப்ளே வீடா... பொண்ணு வீடா... உனக்கு வேண்டப்பட்டவங்க யாருடா?'' என்று கேட்டான்.

''ரெண்டு தரப்பும் இல்லடா...?''- நண்பன்.

''அப்புறம்..?'' என்று நம்மவன் கேட்க, சலிப்புடன் பதில் சொன்னான் கல்யாணத்துக்குப் போன நண்பன் ''அடப்போடா... எவ்வளவோ போராடிப் பார்த்தேன்; என்னை உள்ளேயே விடமாட்டேன்னுட்டானுங்க!''

இதைக் கேட்டு நம்மவன் வாயடைத்து நின்றான்!

ஆன்மிக உலகிலும்... உள்ளே நுழைய வேண்டிய சூழலும் உண்டு; வெளியே வரவேண்டிய சூழலும் உண்டு. புற உலகில், பொருளாசையை விட்டு வெளியேறுவது நல்லது; அக உலகில், அருளாசையை நாடி உள்ளே செல்வது நல்லது.

ஆனால் இன்றைக்கு, வெளியே நின்றபடி, எட்டிப் பார்க்கிற அளவில் மட்டுமே பலரது தகுதி உள்ளது.

இதில் கூத்து என்ன தெரியுமா? இவர்கள்தான், 'எனக்கு ஆன்ம தரிசனம் கிடைத்து விட்டது' என்று மார்தட்டிக் கொள்கின்றனர். இதை நம்பி, பலரும் இவர் களுக்குப் பின்னே செல்கின்றனர்!

நீங்கள் உங்களுக்குள் நுழைய வேண்டும் எனில், எவரது பின்னேயும் செல்ல வேண்டிய அவசியம் இல்லை.

உள்ளே இருக்கும் 'அகந்தை'யை வெளியேற்றினாலே போதும்; உங்களுக்கான கதவு தாமாகவே திறக்கும்!

## 'குருட்டு' பக்தி!



கர்ணனின் கதையை மாணவர்களிடையே விளக்கிக் கொண்டிருந்தார் அந்த ஆசிரியர்.

''தன் குருநாதரின் மேல் அதீத பக்தி கொண்டிருந்தவன் கர்ணன். ஒருமுறை, அவனின் ஆசிரியரான பரசுராமன், சற்று நேரம் களைப்பாற எண்ணினார். இதை உணர்ந்த கர்ணன், அருகிலிருந்த மரத்தடியில் அமர்ந்தான். உடனே, அவனது ஒரு தொடையில் தலை வைத்துப் படுத்த பரசுராமன் சற்று நேரத்தில் தூங்கிப் போனார்.

இந்த நிலையில், கர்ணனின் மற்றொரு தொடையின் மீது வந்து அமர்ந்த காட்டு வண்டு ஒன்று, அவன் தொடையைத் துளைக்க ஆரம்பித்தது. ரத்தம் பொங்கியது. பல்லைக் கடித்தபடி வலியைப் பொறுத்துக்

கொண்டான் கர்ணன். சிறிது அசைந்தாலும் குருநாதரின் தூக்கம் கெட்டு விடுமே என்ற எண்ணம் அவனுக்கு.

ஆம்! ஆசிரியர் அமைதியாகத் தூங்க வேண்டும் என்பதற்காக, தனக்கு ஏற்பட்ட அந்த சித்ரவதையை தாங்கிக் கொண்டான் அந்த மாணவன்!"

- கதையைக் கூறி முடித்த ஆசிரியர், "என் அருமை மாணவர்களே... நீங்களும் கர்ணனைப் போன்று உங்கள் ஆசிரியரின் மீது பக்தி செலுத்த வேண்டும். செய்வீர்களா?" என்று கேட்டார்.

"நிச்சயம் செய்வோம்!" - ஒட்டு மொத்த மாணவர்களும் உரக்கக் குரல் கொடுத்தனர்.

மகிழ்ச்சியடைந்த ஆசிரியர் தொடர்ந்தார்...

"சரி... நானும் பரசுராமனைப்போல் உங்களின் தொடையில் தலை வைத்துப் படுத்திருக்கிறேன் என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்போது, கர்ணனுக்கு நிகழ்ந்தது போலவே உங்கள் தொடையையும் வண்டு துளைத்தால் என்ன செய்வீர்கள்?"

மாணவர்கள் பதில் சொன்னார்கள் "நாங்களும் அவனைப் போலவே பல்லைக் கடிச்சிக்கிட்டு வலியைப் பொறுத்துக்குவோம்!"

உற்சாகம் அடைந்த ஆசிரியர் ஆர்வத்துடன் கேட்டார் "ஏன் அப்படிச் செய்யணும்?"

மாணவர்கள் சொன்னார்கள்... "நீங்க முழிச்சிக்கிட்டா பாடம் நடத்த ஆரம்பிச்சுடுவீங்களே... அதான்!"

- இந்த குருபக்தியை போன்றுதான் இன்றைக்கு சிலரது தெய்வ பக்தியும் இருக்கிறது.

ஆண்டவன் பேரைச் சொல்லி தங்களை வருத்திக் கொள்கிறார்கள். அதன் நோக்கம், 'இதை விட பெரிய வருத்தம் ஏதும் வந்துவிடக் கூடாதே' என்பதுதான்.

அழகான இயற்கைக் காட்சியைப் பார்க்கிறோம்.அதன்மேல் ஒரு காதல் பிறக்கிறது. உடனே, அந்த இயற்கைக் காட்சியிடம் இருந்து எதையாவது நாம் எதிர்பார்க்கிறோமா? அல்லது அதுதான் நம்மிடமிருந்து எதையாவது எதிர்பார்க்கிறதா?

அதுமாதிரிதான் கடவுளையும் நாம் நேசிக்க வேண்டும். நம்மால் அவரை நேசிக்காமல் இருக்க முடியாது என்ற நிலை வரவேண்டும். அதற்குப் பெயர்தான் பக்தி என்கிறார் சுவாமி விவேகானந்தர்.

ஒன்றைப் புரிந்து கொள்ளுங்கள். கடவுளே உங்கள் தொடையில் தலை வைத்துப் படுத்தாலும், அவருக்காக நீங்கள் எந்தத் துன்பத்தையும் ஏற்க வேண்டிய அவசியம் இல்லை!

# கண்ணாடி மாளிகை!



உடல் முழுக்க காயங்களுடன் வந்து கொண்டிருந்தான் அந்த இளைஞன்! எதிரே வந்த பெரியவர் ஒருவர், ''என்னாச்சு?'' என்று பதற்றத்துடன் கேட்டார்.

''ஒரு கலவரம்... பல பேரை அடிச்சுத் தள்ளிட்டு வரேன்...'' - எந்தவித பதட்டமும் இல்லாமல் சொன்னான் இளைஞன்.

பெரியவருக்கு ஆச்சரியம். ''ஏம்பா... கலவரத்துல பல பேரை அடிச்சேன்னு சொல்றே. அப்புறம் எப்படி உன் உடம்புல இவ்ளோ காயம்?'' என்று கேட்டார்.

''அவங்களும் என்னைத் திருப்பி அடிச்சாங்கள்ல.. அதான்!''

பெரியவர் விடவில்லை... ''அது சரி, என்ன கலவரம்?''

''மதக் கலவரம்!'' - அலட்சியமாக சொன்னான் இளைஞன்.

பெரியவருக்கு சலிப்பு! ''ஹூம்ம்... மனுஷனும் மனுஷனும் அடிச்சுக்கறதுக்குப் பேரு மதக் கலவரம்!'' என்று தலையில் அடித்துக் கொண்டார்.

இளைஞனுக்கு ஒன்றும் புரியவில்லை. ''என்ன சொல்றீங்க?'' - குழப்பத்துடன் கேட்டான்

''புரியற மாதிரி சொல்லட்டுமா? உன்னை நீயே அடிச்சுக்கறே... இதுவும் புரியலியா? என்னோட வா, புரியும்!'' என்றபடி, அவனை இழுத்துக் கொண்டு விறுவிறுவென நடந்தார் பெரியவர்.

அருகே ஒரு கட்டடம்! இளைஞனுடன் உள்ளே நுழைந்தவர், ஓர் அறைக்குள் அவனை அழைத்துச் சென்றார். அறை முழுக்க பதிக்கப்பட்டிருந்த கண்ணாடிகளில் இவர்களது பிம்பங்கள் தெரிந்தன.

''இந்த அறை முழுக்க மனிதர்களா தெரியறாங்களே... அவங்கள்லாம் யாருன்னு தெரியுதா?'' - பெரியவர் கேட்டார்.

''நீங்களும் நானும்தான்!''- சிரித்தபடி சொன்னான்.

''ஒரு நிமிஷம்...'' என்று கூறிவிட்டு வெளியே சென்றவர் ஒரு நாயுடன் திரும்பினார். இப்போது, ஏராளமான நாய்கள் தெரிந்தன. இதைக் கண்டதும் குரைக்க ஆரம்பித்தது நாய். அதன் பிம்பங்களும் குரைத்தன! 'அட.. நமக்கு இவ்ளோ எதிரிகளா?' என்று ஆவேசம் அடைந்த நாய் அங்குமிங்கும் ஓடியது; பிம்பத்தின் மீது பாய்ந்தது. கண்ணாடி உடைந்து நொறுங்க, உடல் முழுக்க காயங்களுடன் தப்பித்தோம் பிழைத்தோம் என தலைதெறிக்க ஓடியது நாய்!

இதைக் கண்ட இளைஞன், ''ஐயோ பாவம்... நாய்க்கு ஒண்ணுமே தெரியலை'' என்று பரிதாபப்பட்டான்.

அவனைப் பார்த்து புன்னகைத்த பெரியவர், ''உனக்கும்தான் ஒண்ணுமே தெரியலை. கண்ணாடியில தெரியறது தான்தான்னு அந்த நாய்க்குத் தெரியலை; எதிரில் நிற்கும் ஒவ்வொருத்தரும் நீதாங்கறது

உனக்குத் தெரியல. இந்த உலகம் கண்ணாடி மாதிரி. அதுல நீ பாக்கற பிம்பங்களை உனது எதிரிகளா நினைக்கறே... அதான் பிரச்னை!" என்றார்.

இதைக் கேட்ட இளைஞன் சிறிது நேரம் மௌனமாக இருந்தான். பிறகு, "ஐயா, அவசரமா ஒரு வேலை இருக்கு, கிளம்பறேன்" என்றான்.

"என்னப்பா வேலை?" - பெரியவர் கேட்டார்.

இளைஞன் சொன்னான் "என்னால காயம் அடைஞ்சவங்களுக்கு மருந்து போடணும். அவங்களைக் காப்பாத்தணும்!"

## 'இசை'வாக இருவர்!



நகரில் இசை நிகழ்ச்சி ஒன்று நடப்பதாக இருந்தது. இந்த நிகழ்ச்சியைக் காண ஆசைப்பட்டான் ஒருவன். ஆனால், நுழைவுச்சீட்டு இல்லை!

கலக்கத்துடன் இருந்தவனுக்கு, பிரபல பத்திரிகை ஒன்றில் ஓவியராகப் பணிபுரியும் நண்பன் ஒருவன் உதவ முன்வந்தான். "எங்கள் அலுவலகத்தில், ஓவியருக்கென நுழைவுச் சீட்டு ஒன்று உண்டு. அதை உனக்குத் தருகிறேன்" என்று நண்பன் சொன்னதும் நம்மவனுக்கு உற்சாகம் கரைபுரண்டது.

இசை நிகழ்ச்சி நடைபெறும் நாளன்று, நண்பன் தந்த நுழைவுச் சீட்டை வாங்கிக் கொண்டு இசையரங்கத்துக்குச் சென்றான். அங்கே, நுழைவாயிலில் நின்றவர், இவனை சந்தேகத்துடன் பார்த்தார்.

"நீங்க... அந்தப் பத்திரிகையின் ஓவியர்தானா?" என்று கேட்டார்.

"ஆமாம்..." என்றான் தயங்கியபடி.

உடனே அவர், "அந்தப் பத்திரிகையின் ஆசிரியர் இப்பத்தான் உள்ளே போனார். வாங்க அவரைப் பார்க்கலாம்" என்று கூற, ஆடிப்போய் விட்டான் நம்ம ஆள்!

'இனி, பின்வாங்க முடியாது... என்ன நடக்கப் போகிறதோ? தான் ஓவியர் இல்லை என்ற உண்மை தெரிந்துவிட்டால், வெளியே அனுப்பி விடுவார்களோ? இசை நிகழ்ச்சியைப் பார்க்க முடியாதே' - தயக்கமும் குழப்பமுமாக அவரைப் பின்தொடர்ந்தான்.

அவர்... முதல் வரிசை நாற்காலியில் அமர்ந்திருந்தார். அவரிடம் மிகவும் பவ்யமாக, "ஐயா! ஒரு சந்தேகம்..." என்றார் இவனை அழைத்துச் சென்றவர்.

'என்ன?' என்பது போல் பார்த்தார் அவர்!

"இவரை உங்களுக்குத் தெரியுமா?"

உடனே, நாற்காலியில் அமர்ந்திருந்த அந்த நபர், நம்ம ஆளை ஒருமுறை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, "ஏன், எதுக்குக் கேட்கறீங்க?" என்றார் அழைத்து வந்தவரிடம்!

"இல்ல... இவர், உங்க பத்திரிகையின் ஓவியரான்னு தெரிஞ்சுக்கணும்?"

"ஆமாம்... இல்லேன்னு யார் சொன்னது?" - கோபத்துடன் பதில் சொன்னார் அவர்!

அவ்வளவுதான்... நம்ம ஆளை சந்தேகப்பட்டவர், இருவரிடமும் மாறி மாறி மன்னிப்பு கேட்டு விட்டு, "உங்க ஆசிரியர் பக்கத்துலேயே நீங்களும் உட்கார்ந்துக்கோங்க" என்று இவனிடம் கூறிவிட்டு வாசலுக்கு நகர்ந்தார்.

நம்ம ஆளுக்கு போன உயிர் திரும்பி வந்தது.

மெள்ள ஆசிரியரின் பக்கம் திரும்பி, "ஐயா... என் மானத்தைக் காப்பாத்தினதுக்கு ரொம்ப நன்றி!" என்றான் நெகிழ்ச்சியுடன்.

உடனே அவர், "இதுக்கு எதுக்கு தம்பி நன்றி? ஒருத்தருக் கொருத்தர் செய்ற உதவிதானே இது!" என்றார்.

இவனுக்கு ஒன்றும் புரியவில்லை. அவரே தொடர்ந்தார் "என்ன புரியலையா? நானும் பத்திரிகை ஆசிரியர் இல்லப்பா. உன்னைப் போல ஓசி டிக்கெட் வாங்கிட்டு வந்தவன்தான்!" என்றார் சிரித்தபடி.

நண்பர்களே! இன்றைய ஆன்மிக உலகமும் இப்படித்தான் உள்ளது. சீடர்களாக வேடம் தரித்தவர்கள், குருவாக வேடம் தரித்தவர்களிடம் சென்று ஆசி வாங்குகிறார்கள். வேடம் கலைய வேண்டும்; வெளிச்சம் தெரிய வேண்டும்.

அப்போதுதான் உண்மையான ஆன்மிகத்தை உங்களால் அடையாளம் காண முடியும்!

## வாடகை மனிதர்கள்!



செய்தித்தாளில் வேடிக்கையான ஒரு செய்தி! சீனாவில், இரண்டு பேர் சேர்ந்து சேவை நிறுவனம் ஒன்றைத் துவக்கியுள்ளனர்.

என்ன சேவை தெரியுமா?

அடுத்தவர் வாங்க வேண்டிய திட்டுகளையும் அடிகளையும் அவர்களுக்காக இந்த நிறுவனத்தார் வாங்கிக் கொள்கிறார்களாம்!

'அட... இப்படியும் ஒரு சேவையா?' என்று ஆச்சரியப் படுகிறீர்கள்தானே?

'வாடகைத் தாய்' என்றெல்லாம் கேள்விப்படுவது போல், இவர்கள் வாடகை ஊழியர்கள்!

மேலதிகாரியிடம் இருந்து உங்களுக்குத் திட்டு கிடைக்கப்போகிறது. ஆனால், திட்டு வாங்கிக்கொண்டு வேலை பார்க்க முடியாது! அதுசரி... திட்டு வாங்குவதற்கு யாரேனும் ஆசைப்படுவார்களா என்ன? இந்த நிலையில், விஷயத்தை இந்த நிறுவனத்தாரிடம் தெரிவித்தால் போதும்... உங்களுக்கான திட்டுகளை இவர்கள் சிரமேற் கொண்டு வாங்கிக் கொள்வார்கள்.

'அடடா... இது மாபெரும் சேவையாயிற்றே!' என்கிறீர்களா?

உண்மைதான்! இதற்குக் கட்டணமும் உண்டு. ஒரு நிமிடத் திட்டுக்கு 585 ரூபாய் வீதம் கட்டணம் வசூலிக்கின்றனர். சரி... உயரதிகாரி உங்களை அடிக்க நினைக்கிறார் எனில்?! கூடுதலாக 135 ரூபாய் செலுத்தினால் போதும்; இந்த நிறுவனத்தார் உங்களுக்காக அடியும் வாங்குவார்கள். ஆனால் ஒரு கண்டிஷன்... அடி கொடுக்கும் அதிகாரி பெண்ணாக இருக்க வேண்டுமாம்!

ஷாங்காய் நகரில், ஜாங்லி- சென்ஜுவான் ஆகிய இருவரும் சேர்ந்து நடத்தும் அந்தக் கம்பெனியின் பெயர்- வான்டோங்.

நம்மூர்க்காரர் ஒருவர், பூங்காவில் வாக்கிங் சென்று கொண்டிருந்தார். ஒரு கட்டத்துக்கு மேல் நடக்க முடியாமல், மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க அப்படியே உட்கார்ந்து விட்டார். அப்போது அங்கே வந்த நண்பர், "என்ன... உக்காந்துட்டீங்க?" என்று கேட்டார்.

உடனே நம்மவர், "தினமும் பத்து ரவுண்டு போகணும்னு டாக்டர் சொல்லிருக்காரு. ஏழு ரவுண்டு முடிச்சிட்டேன். இன்னும் மூணு ரவுண்டுதான் பாக்கி!" என்றார்.

"அப்புறமென்ன... மூணு ரவுண்டுதானே..." என்று நண்பர் கேட்க, நம்மவர் என்ன சொன்னார் தெரியுமா?

"மூணு ரவுண்டுதானே? அதான்... வாடகைக்கு ஆள் யாராவது கிடைப்பாங்களான்னு பாக்கறேன்!" என்றாராம்.

இந்த மனோபாவம், இன்றைய ஆன்மிகத்திலும் வந்து விட்டதுதான் வேதனை!

"தம்பி... கோயிலுக்கா போறீங்க?" என்று கேட்டார் ஒருவர்.

"ஆமாம்" என்றான் அந்த இளைஞன்.

உடனே பெரியவர் சொன்னார் "அப்படீன்னா ஒரு உதவி பண்ணுங்க. இந்தக் காசை உண்டியல்ல போட்ருங்க. அப்படியே எம்பேருக்கு அர்ச்சனையும் பண்ணிருங்க!"

இதெப்படி இருக்கு?!

நாய்க்கு என்ன பரிகாரம்?



ஒருவன் நாய் வளர்த்தான். அது தனக்கு உதவியாக இல்லாமல் தொந்தரவு தருவதாகக் கருதியவன், நாயை எங்காவது கொண்டு போய் விட்டால் தேவலை என்று எண்ணினான்.

அதன்படி, நாயை அடுத்த தெருவில் கொண்டு போய் விட்டு வந்தான். அது திரும்பி வந்து விட்டது. சந்தையில் கொண்டு போய் விட்டான்; சரியாக வீட்டைக் கண்டு பிடித்து வந்துவிட்டது. பக்கத்து ஊரில் விட்டு வந்தான். அப்போதும் அது திரும்பி வந்து விட்டது.

என்ன செய்யலாம்? யோசித்தான். 'வீட்டுக்கு வழி தெரியாமல் குழம்பும் அளவுக்கு ஓரிடத்தில் கொண்டு போய் விடவேண்டும்' என முடிவு செய்தான். நாயை இழுத்துக் கொண்டு பல்வேறு இடங்களுக்கும் சென்றான். சந்து பொந்தெல்லாம் நுழைந்தான். நள்ளிரவு 12 மணி இருக்கும். கும்மிருட்டில் திசை தெரியாத ஓரிடத்தில் நாயை விட்டுவிட்டு ஓடினான்.

இப்போது, இன்னொரு பிரச்னை! அவனுக்கே வீடு திரும்ப வழி தெரிய வில்லை. எங்கெங்கோ சுற்றியும் வழியைக் கண்டுபிடிக்க முடியவில்லை. நல்லவேளை கையில் செல்போன் இருந்தது. மனைவியுடன் பேசினான்.

"நாயை விட்டுட்டேன்... இப்ப வீட்டுக்கு வர எனக்கே வழி தெரியலை!" என்றான்.

மனைவி சொன்னாள் "ஆனால், நாய் எப்பவோ வீட்டுக்கு வந்துட்டதே!"

நண்பர்களே! இந்த உலகில் புத்திசாலித்தனமாக நாம் செய்யும் சில காரியங்களும் முட்டாள்தனமாக முடிந்துவிடும். இது, ஆன்மிகத்துக்கும் பொருந்தும். ஒருசிலருக்கு, பயமே பக்திக்குக் காரணமாக இருக்கும். இந்த பயம், பக்தனை பாதை மாற்றி அழைத்துச் செல்லக் கூடும்.

இன்னொரு கதை! பக்தர் ஒருவர் தனது நாயின் கழுத்தில் தாயத்து கட்டியிருந்தார். வீட்டுக்கு வந்த நண்பர் இதுபற்றிக் கேட்டார். உடனே பக்தர் சொன்னார்

"ஒரு நாள்... நடுராத்திரில எங்க வீட்டுக்குத் திருடன் வந்துட்டான். அவனைப் பார்த்து இந்த நாய் பயந்துடுச்சி போல... சத்தம் போட்டு குரைக்க ஆரம்பிச்சிடுச்சி! அதான், ஒரு சாமியார் கிட்டே தூக்கிக்கிட்டுப் போனேன். அவர்தான் தாயத்து கட்டிவிட்டார்!"

---

## ஒப்பனை முகங்கள்!



விமானத்தில் பயணித்துக் கொண்டிருந்தனர் அந்தத் தம்பதி. சிரித்த முகத்துடனும் கனிவுடனும் உபசரிக்கும் விமான பணிப்பெண்களைக் கண்ட கணவன், "இந்தப் பெண்களைப் பார்... எவ்வளவு அன்போடு உபசரிக்கிறார்கள்?! நீயும் இப்படி இருந்தா எவ்ளோ நல்லா இருக்கும்!" என்றான் மனைவியிடம்.

உடனே மனைவி சொன்னாள் "அவங்க சிரிக்கிறதுக்கும் அன்பா உபசரிக்கறதுக்கும் ஐம்பதாயிரம் ரூபா சம்பளம் கொடுக்கிறாங்க. நீங் களும் இதேபோல பணம் குடுத்தா, நானும் அன்பா கனிவா உங்களை கவனிச்சுக்கறேன்!"

அவ்வளவுதான்... கப்சிப்பாகி விட்டார் கணவர். பயணம் முடியும் வரை அவர் வாயே திறக்கவில்லை!

இன்றைய உலகில், நாம் பார்க்கிற முகங்கள் பலவும் ஒப்பனை முகங்களே. 'அப்பா' எனும் முகமூடி அணிந்து தான் பிள்ளைகளிடம் பழகுகிறோம். 'அண்ணன்' எனும் முகமூடியுடன்தான், தம்பிகளைத் தட்டிக்

கொடுக்கவோ தட்டிக் கேட்கவோ முடிகிறது. மனைவியிடம் பேசும்போது, 'கணவன்' எனும் முகமூடி தேவை. 'தொழிலாளி' எனும் முகமூடியை அணிந்துகொண்டு, முதலாளிகளிடம் வேலை செய்ய வேண்டியிருக்கிறது. வேலை முடிந்ததும் வேறு முகமூடியை சட்டென மாற்றிக் கொள்ளத் தெரியாத மனிதர்களே வேதனையை அனுபவிக்கின்றனர்.

ஆக... வாழ்க்கை எனும் நாடக மேடைக்கு முகமூடி அவசியத் தேவை யாகிவிட்டது. அந்தந்த நேரத்துக்கு தக்கபடி, உரிய முக்கியத்துவத்தை அளிக்க வேண்டிய கட்டாயம் மனிதர்களுக்கு இருக்கத்தானே செய்கிறது! எனவே, இவற்றுக்குத் தக்கபடி வாழ நாம் பழகிக் கொள்ள வேண்டும். அதேநேரம்... முகமூடி அணிந்திருக்கிறோம் என்கிற கவனமும் வேண்டும். இல்லையெனில், முகமூடியே முகமாகிப் போகும். இந்த நிலை ஆபத்தானது!

இவையெல்லாம் ஞானிகளின் எச்சரிக்கை!

நம் உண்மையான முகம் என்பது, கண்ணாடிபோல! உள்ளதை உள்ளபடி பிரதிபலிப்பதுதானே கண்ணாடியின் இயல்பு. வாழ்க்கையில் முகமூடிகள் தேவைப்படலாம். ஆனால், இன்றைய மனிதர்கள், கண்ணாடியை அழகுபடுத்துவதாக எண்ணிக் கொண்டு, அதன் மீது ஓவியங்களைத் தீட்டுகின்றனர். அசையாத ஓவியங்கள் கலைய வேண்டும்; அசையும் ஓவியங்களான மனித முகங்கள் தெரிய வேண்டும்! இதுதான் உண்மையான ஆன்மிக வளர்ச்சி!

ஒருவர், காலையில் எழுந்ததும் கத்தினார் ''கருங் குரங்கு படத்தை யாருடி என் ரூம்ல மாட்டினது?''

சமையற்கட்டில் இருந்த மனைவி பதில் சொன்னாள் ''நல்லா பாருங்க... அது முகம் பாக்கற கண்ணாடி!''

## அழையா விருந்தாளிகள்!




அழகான அந்த வீட்டின் வாசலில் 'நல்வரவு' என்று எழுதப்பட்டிருந்தது. ஒரு நாள் அந்த வீட்டின் வாசலில் சிலர் நின்றிருந்தார்கள்.

வீட்டுக்காரர் வெளியே வந்தார். யாரோ வழிப்போக்கர்கள் என்பது அவருக்குப் புரிந்தது. என்றாலும், ''உள்ளே வாங்க!'' என்று அழைத்துச் சென்றார்.

அவர்களை உபசரித்த வீட்டுக் காரர், ''நீங்கள்லாம் யார்? எங்கே செல்கிறீர்கள்?'' என்று விசாரித்தார்.

அவர்களில் ஒருவர் சொன்னார்... ''என் பெயர் கோபம்! நான்தான் குடும்பத் தலைவன்!'' என்றவர், அருகில் இருந்தவர்களை வரிசையாக அறிமுகப்படுத்தினார்.

''இவள் என் சகோதரி; பெயர் பிடிவாதம். எப்போதும் என் பக்கத்துலேயேதான் இருப்பாள். என் பின்னாடி நிற்கிறாளே... அது என் மனைவி 'இம்சை'. என் குரலைக் கேட்டதும் வெளியே வந்து விடுவாள். இதோ நிற்கிறாரே... இவர் என் அண்ணன் அகங்காரம்'' என்றவர், அருகில் நின்றிருந்த வயதான வரையும் அறிமுகப்படுத்தினார்.

''இவர் என் தகப்பனார்... இவரோட பெயர் அச்சம்!''

''பிள்ளை குட்டிங்க?''- வீட்டுக்காரர் கேட்டார்.

சட்டென்று பதில் வந்தது ''இரண்டு பொண்ணுங்க... ஒருத்தி- நிந்தனை; வாய்க்குப் பக்கத்திலேயே இருப்பா. இன்னொருத்தி- கோள்சொல்லி; காதுக்கு அருகிலேயே இருப்பா. ஒரே மகன் அவன் பெயர் பொறாமை!''

''மகனுக்குக் கல்யாணம் ஆயிட்டுதா?''

''ஆயிடுச்சி... மருமகள் பேரு சிடுமூஞ்சி. பேத்தியும் இருக்கா... வெறுப்புன்னு கூப்பிடுவோம். எப்பவும் மூக்குக்குப் பக்கத்திலேயே இருப்பாள்!''

''உங்கள் தாயாரைப் பத்தி எதுவும் சொல்லலையே?''

''அவங்க பேரு உதாசீனம்''

''அதுசரி... இங்கே இருப்பது நீங்கள், உங்க மனைவி அப்பா சகோதரர்கள் மட்டும்தான். உங்க அம்மா, மகன்-மகள், பேத்தில்லாம்?''

''இப்பத்தானே எங்களை உள்ளே விட்டுக்கீங்க... அவங் கள்லாம் ஒவ்வொருத்தரா உள்ளே வருவாங்க!''

வீட்டுக்காரர் யோசித்தார். கோபத்துக்கு இப்படி ஒரு பெரிய குடும்பமே இருக்கிறது என்று புரட்சிசாது தவத்திரு தருணசாகர் கூறியிருப்பதை எண்ணிப் பார்த்தார்.

அப்புறம் என்ன நினைத்தாரோ... வந்திருந்தவர்களை அவசர அவசரமாக அனுப்பி வைத்தவர், வாசலில் இருந்த 'நல்வரவு' அறிவிப்பை அழித்து விட்டு, இப்படி எழுதினார் ''நாய்கள் ஜாக்கிரதை!''

## ஆணவம் விலகினால் ஆனந்தம்!



அவசர அவசரமாக வந்த இளம்பெண், அன்று காலையில் நடந்ததை தோழியுடன் பகிர்ந்து கொண்டாள்.

''நானும் மாமியாரும் காலையில் வாக்கிங் போய்ட்டு இருந்தோம். அது காட்டுப் பாதை. திடீர்னு விநோதமான ஒரு பிராணி வந்து மாமியாரைப் பிடிச்சிடுச்சி...''

''கொஞ்சம் விளக்கமா சொல்லேன்...'' தோழி கேட்டாள்.

''சொல்றேன்... நீளமான பல், தேவாங்கு மாதிரி உடம்பு, சடை சடையா முடி... பேய் மாதிரி...''

''அடடா... என்ன பயங்கரம்...?''

''அவசரப்படாதே. அந்த விலங்கு எப்படி இருந்ததுன்னு இன்னும் நான் சொல்லவே ஆரம்பிக்கலே!''

ஆமாம்! இதுவரை அவள் விவரித்தது தன் மாமியாரைப் பற்றிய வர்ணனை!

-இது சிரிப்பதற்காக சொல்லப் பட்ட கதை என்றாலும் இதுபற்றி கொஞ்சம் சிந்திக்கவும் வேண்டியிருக்கிறது. நமக்குப் பிடித்தவர்களைவிட, பிடிக்காதவர்களை நம் மனம் நன்றாக நினைவில் வைத்துக் கொள்கிறது.

'உனக்கு உதவியவர்கள் யார்?' என்று கேட்டால் உடனடியாக நினைவுக்கு வருவதில்லை. 'உபத் திரவம் கொடுப்பவர் யார்?' என்றால், உடனே சொல்ல முடிகிறது! நல்லவர்களை நமக்கு அடையாளம் தெரியாமல் தடுப்பது எது?

ஆன்மிகம் சொல்லும் பதில்- 'ஆணவம்!'

"வாழைப்பழத்தின் தோலை உரிப்பது போல உரித்து, ஆணவத்தை வீசி எறிந்துவிடு!" - என்கிறார் ஓஷோ.

'அதை நடுப்பாதையில் போட்டுவிடாதே. ஏனெனில், எவரேனும் வழுக்கி விழுந்துவிடக் கூடும். பல பிறவிகளாக நீயே அதில் வழுக்கி விழுந்திருக்கிறாய்!'

ஆணவம்-நோயுற்ற மனம்; ஆணவமின்மை- ஆரோக்கியமான மனம். ஆணவம் விலக விலக ஆனந்தம் நெருங்குகிறது. அதற்கு உதவி செய்கிறது ஆன்மிகம்.

ஒருவன் வாழைப் பழத்தோல் வழுக்கி விழுந்து விட்டான். அந்த வழியே வந்தவன், இவனை ஆஸ்பத்திரியில் சேர்த்தான். அப்புறம் சொன்னான் நீ வாழைப் பழத்தோல்ல காலை வைக்கப் போறதை முன்னாடியே கவனிச்சுட்டேன்!"

"அப்படின்னா... அப்பவே நீ எனக்கு உதவி செஞ்சிருக்கலாமே?"

"நான் டாக்டருக்கு உதவலாம்ன்னு நினைச்சுட்டேன்!"



சக்தி விகடன் இதழ் தொடங்கிய காலம் முதல் கடந்த ஆறு ஆண்டுகளாக தொடர்ந்து வாசகர்களுக்கு கலகலப்பூட்டிய தென்கச்சியார், இப்போது நம்மிடையே இல்லை. இவ்வுலக வாழ்க்கையில் இருந்து விடைபெற்று, அவர் மறைந்து விட்டாலும், அவருடைய நினைவுகள் நம்மிடமிருந்து மறையாது. வரும் தலைமுறையும் இவரைப் பற்றி எண்ணிப் பார்க்கும் விதத்தில் நல்ல நூல்களை எழுதி நமக்காக விட்டுச் சென்றிருக்கிறார்.

பேச்சாளராக, எழுத்தாளராக, நல்ல மனிதராகத் திகழ்ந்தவர். காலம் தவறாமையை மிகச் சரியாக அவர் கடைப்பிடித்ததை எல்லோருமே அறிவோம். உணவுக் கட்டுப்பாடு, பேசுவதில் நேரக் கட்டுப்பாடு என்று கட்டுக்கோப்பான வாழ்க்கை வாழ்ந்து, சொல்லாலும் செயலாலும் ஒன்றாக இருந்து காட்டியவர். நம் இதழில் 'கலகல கடைசிப் பக்கம்' மூலம் வாசகர்களைக் கவர்ந்த அவர் மறைவுக்கு, எண்ணற்ற வாசகர்கள் தங்கள் இரங்கலையும் அனுதாபத்தையும் தெரிவித்து கடிதங்கள் அனுப்பியுள்ளனர்.

நகைச்சுவையோடு உலகியலைச் சொல்வதில் வல்லவராகத் திகழ்ந்தவர் இவர். நிரப்ப முடியாத வெற்றிடத்தை ஏற்படுத்திவிட்ட தென்கச்சியாரின் ஆன்மா ஆண்டவனுடன் ஐக்கியமாக, சக்தி விகடன் வாசகர்களுடன் நாங்களும் பிரார்த்திக்கிறோம்.